# அருணந்தி சிவாசாரியார் நூல்கள்

## ஓர் ஆய்வு

முனைவர் பழ. முத்தப்பன்



மீனாட்சி நூலகம்
பொன்னமராவதி

# அருணந்தி சிவாசாரியார் நூல்கள்

## – ஓர் ஆய்வு

முனைவர் பழ.முத்தப்பன்
முதல்வர்
கணேசர் செந்தமிழ்க்கல்லூரி
மேலைச்சிவபுரி
622 403

மீனாட்சி நூலகம்
அரிமா நகர்
பொன்னமராவதி
622 407

# நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அருணந்தி சிவாசாரியார் நூல்கள் -ஓர் ஆய்வு |
| ஆசிரியர் | : | **முனைவர்.பழ.முத்தப்பன்** எம்.ஏ.,பிஎச்.டி., |
| பொருள் | : | சமயத் தத்துவத்தின் திறனாய்வு |
| பதிப்பு | : | முதற்பதிப்பு ஜூன் 2002 |
| நூலின் அளவு | : | 21 x 14 செ.மீ |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| பக்கம் | : | 240 |
| படிகள் | : | 1000 |
| விலை | : | ரூ. **60**/= |
| அச்சிட்டோர் | : | நந்தினி அச்சகம்,<br>சின்னக்கடை வீதி,<br>பொன்னமராவதி - 622 407.<br>04333-361254 |
| முகப்பு அட்டை | : | ஸ்ரீ விநாயகா ஸ்கிரீன்ஸ்,<br>பார்த்தசாரதி தெரு,<br>எஸ்.எஸ்.காலனி,<br>மதுரை - 10. |
| வெளியீடு | : | மீனாட்சி நூலகம்,<br>அரிமா நகர்,<br>பொன்னமராவதி - 622 407,<br>புதுக்கோட்டை மாவட்டம். |

இந்நூல் அச்சிட்டு
வெளிவருவதற்கு நிதி உதவி
நல்கிய
திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு
நன்றி !

# முன்னுரை

மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் பயின்ற 1963-1967 காலக்கட்டத்தில் ஏற்பட்ட சமய உணர்வுப் பற்று மயிலம் சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரியில் பயிற்றுவித்த 1969 - 1987 காலக்கட்டத்தில் பலகட்டுரைகளாக - ஆய்வுரையாக மலர்ந்தன. மயிலம் தமிழ்க்கல்லூரியில் பணிபுரிந்த காலத்தில் தத்துவத் துறையில், பெரும் புலவர் ஆ.சிவலிங்கனார் அவர்களும், மகா வித்துவான் வே.சிவசுப்பிரமணியம் அவர்களும் மயிலம் திருக்கோவில் சிவாசாரியப் பெருந்தகை பாலசுப்பிரமணிக் குருக்கள் அவர்களும் என்னை ஊக்குவித்தார்கள். இத்தகைய பெருந்தகைகளின் அரவணைப்பே 1980-84ல் இவ்வாய்வு உருவாவதற்குத் துணை செய்தது.

ஆய்வில் ஏற்பட்ட ஐயங்களைக் குருகுலம் அழகரடிகள் தம் ஆழ்ந்த தத்துவப் புலமையால் தெளிவு செய்தார்கள். புலவர் மா.அமிர்தலிங்கனார் அவர்கள் அருகிருந்து வகைப்படுத்தித் தந்தார்கள். மாணவச் செல்வங்கள் மு.க.சங்கரன்,அமுத.இளவழகன் ஆகியோர் உற்றுழி உதவினார்கள். இத்தகையவர்களின் பக்க துணையோடு உருவாகிய இவ்ஆய்வு பயின்ற கல்லூரியில் முதல்வராக பணிபுரிகின்ற இக்காலக்கட்டத்தில் அச்சுருவாகிறது. காலம் கடந்த உருவாக்கம் என்றாலும் மனதிற்கு நிறைவே.

ஆய்வுப்பணியில் எனைச் செலுத்திப் பலநூல்கள் வெளியிட உணர்வூட்டிய என் ஆசான் முனைவர் ச.வே.சுப்பிரமணியன் அவர்கள் அணிந்துரை நல்கியிருப்பது இந்நூலிற்குக் கிடைத்த பெருமையாகும். என்றைக்கும் அவர்களின் திருவுளத்திற்கு நன்றிக் கடப்பாடுடையேன்.

இந்நூல் அச்சுருவாக அடித்தளமாக அமைந்தது திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் நிதி உதவியே. ஆய்வேட்டை ஏற்று தக்க நிதி உதவி தர ஆணையிட்டு ஆதரவு தந்த திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாகத்திற்கு நன்றி மிகஉடையேன். இந்நிதி உதவி பெறவும் - நூல் உருவாகவும் பெரிதும் துணை நின்றவர் எம் அரும்புதல்வன் முனைவர் மு.பழனியப்பன் அவர்கள். தந்தையின் ஆய்வு நூல் உருவாக வேண்டும் எனப்பல ஆண்டாக எண்ணித் தக்கநேரத்தில் நினைவாக்கிய என்னரும் செல்வனுக்கு எத்தகைய நன்றி தெரிவிப்பது. அறிந்திலேன்.

அன்று ஆய்வு நிலையில் உடன் நின்று உதவிய என் மனைவி அழகம்மை - இன்றும் இந்நூல் ஆக்கத்திற்குப் பெருந்துணை புரிந்தனள். ஆம் குடும்பமே இந்நூல் உருவாவதற்கு உரியதாக இருந்தமை பெருமை தருகிறது. நன்றிக்கும் உரியதாகிறது.

நூல் அச்சுருவாகும் பொழுது உடன் துணை நின்ற எம் கல்லூரிப் பேராசிரியர்கள் முனைவர் பழ.சிதம்பரம், முனைவர் தி.பூங்குன்றன், நூலகர் முனைவர் ந.முருகேசபாண்டியன், முனைவர் க.கனகராசு ஆகியோரும் என்றும் நினைவுக்குரியவர்கள்.

நன்முறையில் நூலை அச்சிட்ட பொன்னமராவதி நந்தினி அச்சகத்தார்க்கும் - எம் நன்றி உரியது.

**பழ.முத்தப்பன்**

# அணிந்துரை

**முனைவர் ச.வே.சுப்பிரமணியன்**
**மதிப்புறு இயக்குநர்**
**உலகத் தமிழ்க் கல்வி இயக்ககம்**
**தமிழூர்**

முனைவர் பழ.முத்தப்பன் அவர்களின் சிவஞான சித்தியார் என்ற ஆய்வேட்டை மறுபடியும் படித்து மகிழ்ந்தேன். அவ்ஆய்வேடு நூலாக வருவது மிகவும் மகிழ்ச்சிக்குரியது. ஆய்வேடாக இருந்தால் ஆய்வாளர்கள் மட்டும் நூலகம் சென்று அதனைப் பார்ப்பர். ஆனால் ஆய்வேடு, நூலாக வரும்பொழுது, அது பொதுமக்களுக்கும் போய்ச் சேருகிறது. நூல் பொதுமக்களை அடையும் போது அது பெருமை பெறுகிறது.

சைவசித்தாந்தம் தமிழுக்கே உரிய ஒன்று. சித்தாந்தக் கொள்கைகள் பல இருக்கலாம். ஆனால் சைவ சமய சாத்திரங்கள் பதினான்கும் சைவசமயத்தை ஆழமாகப் பார்த்து, சிந்தித்து, செய்யப்பெற்ற நூல்கள். அதிலும் சிறப்பாகச் சிவஞானசித்தியார் அமைகிறது. மெய்கண்டாரின் சிவஞானபோதம் இச்சித்தியாருக்கு அடிப்படையாக அமைகிறது. சிவஞானபோதம் பன்னிரெண்டு பாடல்களில் அல்லது நூற்பாக்களில் அமைந்தாலும் உலகத் தத்துவங்கள் அனைத்தையும் அது பொதிந்து கூறுகிறது. அதோடு சிவஞானபோதம் சில வழிகளில் தொல் காப்பியத்தைப் பின்பற்றுகிறது.

*அவன், அவள், அது, எனும் அவை மூவினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்*

இங்கு என்மனார் புலவர் என்பது சிந்திக்கத்தக்கது. என்மனார் புலவர் என்பதுதான் இங்குள்ள தொல்காப்பிய முத்திரை. சிவஞானசித்தியார் இச்சிவஞானபோதத்தின் விளக்கம், விரிவு, தெளிவு, போன்ற நிலைகளில் அமைகிறது.சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கிலும் முதல்நிலைபெறுவது சிவஞான சித்தியார். காரணம் அதில் சுபக்கம், பரபக்கம், என்று இரண்டு நிலைகள் அமைகின்றன. ஒன்று தன் கொள்ளையைக் கூறல், மற்றொன்று பிறர் கொள்கைளைக் கூறி, தன்கொள்கையை நிலை நாட்டல். அந்நிலையில் சிவஞான சித்தியார் சிறப்புப் பெறுகிறது.

அருணந்தி சிவாசாரியார் தம் சிவஞானசித்தியாரில் கருத்துக்களைத் தெளிவாகவும் முறையாகவும் உவமை, உருவகங்களுடன் விளக்குகிறார். சிவஞான சித்தியாருக்கு தூத்துக்குடி சிவகுருநாத பிள்ளை ஒரு ஆராய்ச்சி நூலைப் படைத்துள்ளார். அது சுபக்கக் கருத்துக்களின்

அடிப்படையில் அமைந்தது. அதுபோன்று டாக்டர்.வ.ஆ.தேவசேனாதி பதியின் சிவஞானசித்தியார் சுபக்கபகுதிக்குரிய அறுவர் உரை ஆய்வு, உரைபற்றிய ஆய்வாக அமைகிறது. சுபக்கத்தையும், பரபக்கத்தையும் தெளிவாக ஆய்ந்தவர், முதன்முதலில் பழ.முத்தப்பன் அவர்களே. இயல்பாகவே அவருக்குச் சைவ சமய தோத்திர நூல்களிலும் சாத்திர நூல்களிலும் ஆழமான பற்று உண்டு. அதோடு நுணுகிச் சிந்திக்கின்ற ஆற்றலும் உடையவர். அச்சிந்தனையின் விளைவே அவருடைய ஆய்வு.

அருணந்தி சிவாச்சாரியாரின் கொள்கைகளை விளக்குவதோடு, மெய்கண்டாரின் சிவஞானபோதத்தின் அடிப்படையில் அமைந்த கொள்கைகளையும் ஒப்பிட்டுக் காண்பது என்பது எளிதான காரியம் அன்று. அதையும் பழ.முத்தப்பன் செய்துள்ளார். சிவஞானசித்தியாரின் பரபக்கத்தில் உள்ள உலகாயதம், பௌத்தம், சமணம் உள்ளிட்ட சமயக் கொள்கைகளை அருணந்தியார் வழிநின்று ஆய்ந்து எதிர்நிலைகளை, மறுப்புக்களை அருணந்தி சிவாச்சாரியார் கூறியுள்ள முறையில் தெளிவுபடுத்து கிறார் பழ.முத்தப்பன். அதோடு அருணந்தி சிவாச்சாரியாரின் வன்மை மென்மைகளையும் சுட்டிக்காட்டுகிறார்.

சிவஞானசித்தியார் வெறும் தத்துவநூல் அன்று. சிறந்த இலக்கிய நூல் என்பதையும், அருணந்தி சிவாச்சாரியாரின் உவமை வகைகள், ஒலிநயம், நடையழகு, சொல்லமைப்புத் திறன், உத்திகள் போன்றவற்றைக் கூறித் தெளிவுபடுத்துகிறார் பழ.முத்தப்பன்.

தற்காலத்தில் ஆய்வேடுகள் பலநிலைகளில் உருவாக்கப் பெறுகின்றன. தான் எடுத்துக்கொண்ட பொருளைப்பற்றித் தெளிவாகத் தெரியாமலும் பட்டம் பெறுகிறவர்கள் உண்டு. ஆனால் பழ.முத்தப்பன், தன் நுணுகிநோக்கும் ஆற்றலால் தான் எடுத்துக்கொண்ட ஆய்வுப் பொருளைச் சிறப்பாகச் செய்து, பிறர் உள்ளம் கொள்ளும் நிலையில் அதைக் கூறுகின்ற ஆற்றலும் உடையவர். பழ.முத்தப்பன் சிறந்த பேச்சாளர். அதேநிலையில் சிறந்த ஆய்வாளர். பொதுநிலையில் இதுபோன்று இருநிலைகளிலும் அதாவது நல்லவராகவும், வல்லவராகவும், அமைவது கடினமான ஒன்று. இரண்டையும் கொண்டுள்ளார் பழ.முத்தப்பன். அவருடைய தகுதியான நூலுக்கு அணிந்துரை எழுதுவதில் மகிழ்ச்சியடைகிறேன். இதுபோன்ற பல நல்ல நூல்களை அவர் உருவாக்க வேண்டும் என்றும் வாழ்த்துகிறேன்.

அன்புடன்

**ச.வே.சுப்பிரமணியன்**

தமிழூர்

# உள்ளுறை


பக்கம்

| | | |
|---|---|---|
| | ஆய்வு அறிமுகம் | 1 |
| 1. | அருணந்தி சிவாசாரியாரின் வரலாறு | 16 |
| 2. | அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள் அறிமுகம் | 27 |
| 3. | நூல்களில் காணப்பெறும் தத்துவக் கருத்துகள் | 50 |
| 4. | மெய்கண்டாரும் அருணந்தி சிவாசாரியாரும் | 83 |
| 5. | யாப்பு - நடை - உத்தி | 129 |
| 6. | நூல்கள் தந்திடும் சமய நெறி | 193 |
| | நிறைவுரை | 220 |

# ஆய்வு அறிமுகம்

இந்திய மெய்ப்பொருளியல் வரலாற்றில் சைவசமயம் தனியொரு இடத்தைப் பெற்றுள்ளது எனலாம். இத்தகைய சைவ சமயத்தின் தோற்றம் கற்பனைக்கு எட்டாததாய் அமைந்துள்ளது என்பார் சித்தலிங்கையா[1]. எனவே தோற்றத்தின் கால எல்லையை வரையறுத்துக் கூறஇயலாச் சிறப்புடைய, சைவசமயம் தமிழகத்தில் மிகப் பழைய தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திற்கு முற்பட்ட காலத்திலேயே பரவியிருந்தது என்பது தெரிகிறது. நிலம் பகுக்கும்பொழுது குறிஞ்சிக் கடவுளாக முருகன் குறிப்பிடப் பெற்றிருப்பது[2] அதற்குரிய சான்றுகளில் ஒன்றாகும்.

சங்க காலத்தில் சிவன், திருமால் வழிபாடுகள் இருந்தமையைச் சங்கத் தொகை நூல்கள் தெரிவிக்கின்றன. காவிரிப்பூம்பட்டினம், மதுரை, வஞ்சி முதலிய பெருநகரங்களில் இக்கடவுளர்க்குரிய கோயில்கள் இருந்தன[3]. காப்பிய காலத்தில் **"பிறவா யாக்கைப் பெரியோன்"**[4] என்றும், **"நுதல்விழி நாட்டத்து இறைவன்"**[5] என்றும் சிவன் குறிக்கப் பெற்று வழிபடப் பெற்றுள்ளான்.

திருமூலர் இயற்றியருளிய திருமந்திரம் முற்காலப் பல்லவர் காலச் சைவசமய வளர்ச்சியைக் காட்டும் சிறந்த பக்தி இலக்கியமாகும். பிற்காலப் பல்லவ அரசர்களில் சிறந்து விளங்கிய முதலாம் மகேந்திரவர்மன் (கி.பி.600-630) முதல் அபராஜிதவர்மன் (கி.பி.875-883) காலம் வரை தமிழகத்தில் கட்டப் பெற்ற திருக்கோவில்களும், எழுந்த சைவசமயத் தோத்திர நூல்களும் சைவசமய வளர்ச்சிக்குச் சான்றுகளாக விளங்குகின்றன.

தமிழக வரலாற்றில் இடைக்காலம் என்று கூறப்பெறுகின்ற சோழர் காலத்தை (கி.பி. 900-1300) சைவசமயத்தின் பொற்காலம் என்பர்.[6] சோழர் காலத்தில் உண்டான பெரிய சிவன்கோவில்கள், அக்கோவில்களில் காணப்படும் கல்வெட்டுக்கள், பட்டினத்தார், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் உள்ளிட்ட அடியார்கள் பாடிய சைவ நூல்கள் ஆகியவையனைத்தும் சோழர்காலச் சைவ சமய வளர்ச்சியை நன்கு எடுத்துக்காட்ட வல்லன.

தமிழகத்தில் சோழர் காலத்திற்குப்பிறகு சைவசமய வளர்ச்சியில் முக்கிய இடம் பெறுபவை சைவத்திருமடங்களாகும். திருக்கயிலாய பரம்பரை என்றும், மெய்கண்ட பரம்பரைஎன்றும் அத்திருமடங்கள் தங்களைக்குறிப்பிட்டுக் கொண்டன. பல்லவர் காலத்திலேயே மடங்கள் சில இருந்து சமயக் கல்வியையும், ஒழுக்கக் கல்வியையும் அளித்தன என்றாலும் கி.பி.13ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் மெய்கண்ட பரம்பரையில் தோன்றிய சைவத் திருமடங்களே சைவ வரலாற்றில் சிறப்பிடம் பெற்றன. திருக்கயிலாயத்தில் நந்திதேவர், சநற்குமார முனிவர், சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதி முனிவர் ஆகிய நால்வரும் குருபரம்பரையினராக விளங்கிச் சைவ ஆகமங்களை ஒருவர் மற்றொருவருக்கு அருளிச் செய்தனர்.

அப்பரம்பரையினருக்குப் பின்னர் மெய்கண்டார், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியார் ஆகிய நால்வரும் உலகில் வந்த குருபரம்பரையினராக (புறச் சந்தானம்) விளங்கிச் சைவ சித்தாந்தச் சாத்திரங்களை வழங்கியருளி, சைவசமய வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெற்றனர். இந்நால்வரில் நான்காமவராகிய உமாபதி சிவாசாரியார், அருணமச்சிவாய தேசிகருக்கு அருளுரை செய்திட, அருணமச்சிவாய தேசிகர், நமச்சிவாய மூர்த்திகளுக்கு அருளுரை செய்தார். நமச்சிவாய மூர்த்திகள் திருவாடுதுறையில் திருமடம் நிறுவிச் சைவ முனிவராக விளங்கினார்.

இத்தகைய திருவாடுதுறைத் திருமடம் செய்த அறப்பணிகள் அளவிறந்தன, இத்திருமடத்தைச் சார்ந்த குருமகா சந்நிதானங்களும், தம்பிரான் சுவாமிகளும் சைவ உலகிற்கருளிய நூல்கள் எண்ணற்றனவாகும். குருமகாசந்நிதானங்கள் அருளிய நூல்கள் பண்டார சாத்திரங்கள் என வழங்கப்பெற்றன. மெய்கண்ட சாத்திரங்கள் இலக்கணங்கள் என்றும், பண்டார சாத்திரங்கள் அனுபவ நூல்கள் என்றும் போற்றப்பெறுகின்றன. சாத்திர உரையாசிரியராகிய சிவஞான முனிவர் இவ்வாதீனத்தைச் சார்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

அருணமச்சிவாயர்பால் அருளுரை பெற்ற மாணவர்களில் ஒருவர் மச்சுச் செட்டியார் ஆவார். அவரின் வழியில் வந்தவர்

குருஞானசம்பந்தர். அவரால் தோற்றுவிக்கப்பெற்ற, திருமடம் தருமபுரத் திருமடம் ஆகும். இத்திருமடமும் சைவத்திருப்பணிகளில் சிறந்து விளங்கும் திருமடமாகும். இத்திருமடத் திருப்பணிகளில் திருக்கோயில்கள் பாதுகாப்பும், சைவ இலக்கியச் சாத்திரப் பதிப்பும், நூல் இயற்றியருளுதலும் குறிப்பிடத் தக்கனவாகும்.

இவ்விரு மடங்களோடு திருப்பனந்தாள் திருமடம்[7] போன்ற மடங்களும் தமிழகத்தில் ஆங்காங்குத் தோன்றி, சைவசமய வளர்ச்சியில் பங்கு பெற்றன. இவ்வாறு முடியுடை வேந்தர்களும், சைவ இலக்கியப் புலவர்களும், சைவத் திருமடங்களும் பேணிக்காத்து வளர்த்த சைவசமயம் அந்நியர் ஆட்சியிலும் தன்னிலை குன்றாது வளர்ந்து இன்றைய இருபதாம் நூற்றாண்டில், பிற நாட்டாரும் போற்றி ஏற்றிடும் வண்ணம் வளர்ச்சியைப் பெற்றிருக்கிறது.

இவ்வாறு தமிழகத்தில் காலத்திற்குக் காலம் சைவ சமயம் வளர்ச்சிப்பெற்று வந்திருக்கிறது. இத்தகைய சைவ சமய வளர்ச்சி சைவ சமய உணர்வையும், ஒழுக்கத்தையும், வழிபாட்டையும் மக்களிடையே மிக்கு ஓங்கிடச் செய்தது.

மக்களிடையே காணப்பெற்ற இத்தகைய உணர்வுகளை, ஒரு வரையறைப்படுத்த வேண்டிய கடமை 13ம் நூற்றாண்டில் சமயவாதிகளுக்கு ஏற்பட்டது. அத்தகைய சூழலில் சைவசமயக் குருபரம்பரையினர் தோன்றி, சைவசமயக் கொள்கைகளைச் சாத்திரங்களாகப் படைத்து வடிவமைத்தனர்.

தமிழ்நாட்டில் சைவசமயத்தைச் சார்ந்தோரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட தெய்வக்கொள்கைகளையும், முழு முதல் இறைவனைப் பற்றிய தத்துவக் கருத்துக்களையும், தங்களுக்கு முன்னர் எழுந்த சைவசமயத் திருமுறைகளில் கூறப்பெற்ற சமய உண்மைகளையும் அடிப்படையாகக் கொண்டு சாத்திரங்களைக் குருபரம்பரையினர் படைத்தருளினர்.

குரு பரம்பரையினரால் அருளப்பெற்ற சாத்திரங்கள் பதினொரு நூல்களாகும். (மெய்கண்டரால் அருளப்பெற்ற சிவஞான

போதம், அருணந்தி சிவாசாரியாரால் அருளப்பெற்ற இருபா இருபஃது; சிவஞான சித்தியார்; உமாபதி சிவாசாரியாரால் அருளப்பெற்ற சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா; போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்பன அப் பதினொன்றாக அமைகின்றன.

குருபரம்பரையைச் சார்ந்த இம்மூவரும் படைத்த பதினொரு நூல்களோடு திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், உண்மை விளக்கம் என்ற மூன்று நூல்களையும் சேர்த்துச் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு என்று கூறுவது சைவசமய மரபாகும். பதினான்கு சாத்திரங்களையும் கீழ்க்காணும் பழம்பாடல் குறிப்பிடுகிறது.

**"உந்தி களிறு உயர்போதம் சித்தியார்**
**பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தஅருட்**
**பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு**
**உண்மை நெறி சங்கற் பமுற்று"**

இப்பாடல் முதன் முதலாகக் கி.பி. 1866ல் மதுரைநாயகம் பிள்ளை என்பார் பதிப்பித்த சைவசித்தாந்தச் சாத்திரப் பதிப்பில் இடம் பெற்றுள்ளது. எனவே சாத்திரங்களைப் பதினான்கு எனமுறைப்படுத்தியவர் அவர்தான் என்பது தெளிவாகிறது. அவரின் காலம் தொட்டு இன்றுவரை அவ்வாறே வழங்கும் மரபும் அமைந்துள்ளது. சாத்திர நூல்களில் வியாசரின் ஞானாமிர்தம் காலத்தால் முற்பட்டதாகும். ஞானாமிர்தத்தின் பின்னர்த்தோன்றியவை திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் ஆகும். இவ்விரு நூல்களையும் சாத்திர வகையில் சேர்த்த மதுரைநாயகம் பிள்ளை ஞானாமிர்தத்தை விடுத்ததற்குக் காரணம் அவர்காலத்தில் ஞானாமிர்தம் வழக்கில் இல்லாமலிருந்திருக்க வேண்டும்; அல்லது வழக்கிலிருந்து பிள்ளை அவர்களால் அறிந்து கொள்ளப் படாமல் இருந்திருக்க வேண்டும். பதினான்கு சாத்திரங்களில் அருணந்தி சிவாசாரியார் வழங்கியருளிய நூல்கள் இருபா இருபஃதும், சிவஞான சித்தியாரும் ஆகும். இவ்விரு நூல்களே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளன.

## பதினான்கு சாத்திரங்கள்

இருபா இருபஃதும், சிவஞான சித்தியாரும் ஆய்வுநூல்களாக இருப்பதால் மற்ற 12 நூல்களைப் பற்றிய செய்திகளை ஒருசிறிது அறிவது ஆய்வுக்குத் துணைபுரியும்.

### 1. திருவுந்தியார்

கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள இயைபு பற்றிய குழப்பமான கருத்துகளைத் தெளிவுபடுத்தற் பொருட்டுச் சுருக்கமான இரண்டு நூல்கள் 12 ஆம் நூற்றாண்டில் தோன்றின. அவற்றுள் ஒன்று திருவுந்தியார். இதை இயற்றிய ஆசிரியர் திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் ஆவார் ; இவரின் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு. இவருடைய இயற்பெயர் பரம கலியாணன் என்பது.

திருவுந்தியார் மூன்றடி கொண்ட தாழிசைப் பாக்கள் 45 கொண்டது. தாழிசையின் இரண்டாமடியிலும், மூன்றாமடியிலும் "உந்திபற" என்ற சொல் இடம் பெற்றுள்ளது. மகளிர் காலை உந்திப் பறப்பது போன்று ஆடும் ஆட்டத்தை அடிப்படையாக வைத்துப் பாடப்பெற்றதால் "திரு உந்தியார்" என்ற காரணப் பெயர் பெற்றது. இதற்குச் சிற்றம்பல நாடிகள் என்பவர் உரை எழுதியுள்ளார். இந்நூல் சித்தாந்தக் கருத்துக்களைக் கோவைப்படக் கூறாது. அவ்வப்போது ஆசிரியருக்குத் தோன்றிய உணர்ச்சி அனுபவங்களைக் கூறுகிறது; கடவுள்; உயிர்; உலகம் என்னும் மூன்று பொருட்களின் இலக்கணத்தையும், பயன்களையும், பயன்களை அடையும் நெறிகளையும் விளக்குகிறது.

### 2. திருக்களிற்றுப்படியார்

இதனை இயற்றிய ஆசிரியர் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார். 12ஆம் நூற்றாண்டில் தோன்றிய மற்றொரு நூலிது. இவர் திருவியலூர் உய்யவந்த தேவநாயனாரின் மாணவரான ஆளுடைத் தேவரின் மாணவர். இவர் தன் ஆசிரியரின்

வேண்டுகோளுக்கு இணங்க நூலைப் பாடினார் என்று குறிக்கப்பெறுகிறது. இவர் ஆட்டு வணிகக் குலத்தைச் சார்ந்தவராதலால் இவருடைய நூலை மக்கள் ஏற்க மறுத்தனர். எனவே தில்லைப் பதியில் நடராசப் பெருமான் திருமுன்னர் களிற்றுப்படியில் நூலை வைத்தார். படியிலிருந்த கல்யானை, இறைவன் திருவருளால் அந்நூலை எடுத்து நடராசப் பெருமானின் திருமுன்னர் வைத்தது. அதனால் இந்நூலுக்குத் திருக்களிற்றுப் படியார் என்று பெயர் வந்ததாகக் கூறப்படுகிறது.

இந்நூல் 100 வெண்பாக்களை உடையது. திருவுந்தியாரின் கருத்தைச் செவ்வையாக விளக்கி அதன் வழிநூலாக விளங்குகிறது. சித்தாந்தக் கருத்துக்களை விளக்க அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாற்றில் சிலவற்றைச் சுட்டிக் காட்டியும், திருக்குறள் வெண்பாக்களை எடுத்துக்காட்டியும் சிறப்பான உவமைகளைக் கொண்டும் இந்நூல் விளங்குகிறது. இறை, உயிர்,சாதனங்கள், அணைந்தோர் இலக்கணம் ஆகியவை நூலில் விளக்கப் பெறுகின்றன. இறைவனை மாதொரு பாகன் என்றும், பொன்போல் ஒளிபொருந்தியவன் என்றும், கடலலைபோல் அளத்தற்கரியன் என்றும் இந்நூல் குறிப்பிடுகிறது. அதுபோலவே உயிர் உணர்த்த உணரும் என்றும், முத்தி நிலையில் உயிர் படிகம்போன்றது என்றும் குறிப்பிடுகிறது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கும் சாதனம் என்பதும், இறைவனை அடைந்தோர் அடியவர் என்பதும் நூலின் பொருள்நிலைகளாகும்.

## 3. சிவஞானபோதம்

ஆசிரியர் மெய்கண்டதேவர், ஊர் திருப்பெண்ணாகடம், தந்தையார் பெயர் அச்சுதகளப்பாளர், மரபு வேளாளர், இயற்பெயர் சுவேதவனப் பெருமாள்.

பரஞ்சோதிமுனிவர் பால் உபதேசம் பெற்றவர். இவருடைய காலம் கி.பி.13ஆம் நூற்றாண்டு. குருபரம்பரையில் முதல்வரான மெய்கண்டார் எழுதிய சிவஞானபோதம் சித்தாந்த நூல்களுக்கே முதன்மை நூலாகும். நூல் 12 நூற்பாக்களை உடையது. அவற்றின் மொத்த வரிகள் 40 ஆகும். 39 அதிகரணங்களையும், 81 எடுத்துக்காட்டு வெண்பாக்களையும் உடையது. இந்நூற் பொருள் நான்கு இயல்களாகப் பிரித்துக் கூறப்படுகிறது.

## 4. உண்மை விளக்கம்

ஆசிரியர் மனவாசகம் கடந்தார்; ஊர் திருவதிகை; இவர் மெய்கண்டாரின் மாணாக்கர். நூலாசிரியரைப் பற்றிய வரலாறு ஏதும் தெரியவில்லை. நூல் 53 வெண்பாக்களை உடையது. வினாவிடை அமைப்பைக் கொண்டது. இந்நூலின் சிறப்பு தத்துவங்களைப் பற்றிக் குறிப்பிடுவதாகும். முத்தியிலும் இறை, உயிர், உலகம் என்ற மூன்று உண்டு என்று குறிப்பிடுவது இந்நூலின் தனிப்பட்ட கருத்தாகும். ஆடவல்லானின் வடிவைக் கொண்டு தத்துவத்தை விளக்குகிறது.

## 5. சிவப்பிரகாசம்

ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். இவர் ஊர் தில்லை. இவர் மறைஞான சம்பந்தரின் மாணவர். மரபு தில்லைவாழ் அந்தணர். மறைஞான சம்பந்தரிடம் அருளுரை பெற்றவர். இவர் இந்நூல் உட்பட 8 நூல்களை வழங்கியுள்ளார்.

இந்நூல் சிவஞானபோதத்தின் சார்பு நூலாகும். இது 100விருத்தப் பாடல்களைக் கொண்டுள்ளது. இதில் 50 பாடல்கள் பொதுப் பகுதியாகவும், 50 பாடல்கள் சிறப்புப் பகுதியாகவும் அமைந்துள்ளன. சார்பு நூலாதலின் சிவஞானபோதத்தை முழுமையும் அடியொற்றிச் செல்லவில்லை. சிவஞான போதத்தின் கருத்தை மட்டும் கொண்டு போதம், சித்தி என்ற இரு நூல்களிலும் விளக்கப்படாத பல நுண்ணியகருத்துகளையும் இந்நூல் விளக்குகிறது.

## 6. திருவருட் பயன்

ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். இந்நூல் 100 குறள் வெண்பாக்களை உடையது. 10 அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பதிமுது நிலை, உயிரவை நிலை, இருள்மலநிலை, அருள்நிலை, அருளுருநிலை, அறியும் நெறி, உயிர் இன்புறு நிலை, ஐந்தெழுத்தருள் நிலை, அணைந்தோர் தன்மை என்பன அப்பத்து அதிகாரங்கள். இறைவனது நிலை,

உயிரின் நிலை, இருள் மலமாகிய ஆணவநிலை, பிறமலநிலை, அருளின் தன்மை, அருளைப் பெறும் சூழல், அதனை அறியக் கூடிய வழிமுறை வாய்ப்புகள், உயிருக்கு நிகழும் அருள் விளக்கம், அருள் விளக்கத்தால் நிகழும் இன்புறுநிலை, அந்த இன்பம் நிலைக்க உதவும் ஐந்தெழுத்தின் அருள்நிலை, .இறைவனை அடைந்தவர்களின் பற்றற்றதன்மை என்பவற்றையே பத்து அதிகாரங்களும் விளக்குகின்றன. நூலின் அமைப்பு திருக்குறளை அடியொற்றி அமைந்துள்ளது. அது மட்டுமன்றிப் பலஇடங்களில் திருக்குறள் கருத்துகளும் வந்துள்ளன. இந்நூலை மெய்ந் நெறித் திருக்குறள் என்று அழைப்பர். இதற்கு நிரம்ப அழகிய தேசிகர் உரை முதலாகப் பலரின் உரைகள் உள்ளன.

## 7. வினாவெண்பா

ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். இந்த நூல் 13 வெண்பாக்களை கொண்டது. வினாவிடையாக அமைந்துள்ளது. நூலாசிரியர் தம் ஞான ஆசிரியரான மறைஞான சம்பந்தரிடம் வினாவி அறிந்த நுண்பொருள்களை விளக்குகிறது. நூற்பொருள் பண்டு தொட்டுப் பயின்று வந்த சாத்திர உண்மைகளே, எனினும் புது வடிவம் எனலாம். இருளும் ஒளியும் ஓரிடத்தில் கூடல் அறிது என விதந்து, தம்பால் இறைவன் நின்ற வியப்பை அறிவிக்கும் பாடலும், காண்பான், காட்சி, காட்டப்படும் பொருள் எனும் மூவகை உணர்ச்சியை நீத்தவர் முத்தி நிலையை அடைவர் எனக் குறிக்கும் பாடலும் நுட்பம் செறிந்தவை. இந்நூலுக்குத் திருவாடுதுறை நமச்சிவாயத் தம்பிரான் உரை எழுதியுள்ளார்.

## 8. போற்றிப் பஃறொடை வெண்பா

ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். இந்நூல் 95 கண்ணிகளைக் கொண்டது. பஃறொடை வெண்பாவால் ஆனது. உயிர் தொழிற்படும் முறைமை உணர்த்தும் வாயிலாகத் தமக்குச் சிவஞானம் நல்கிச் சிவ அனுபவம் ஈந்த குருவைப் பஃறொடை வெண்பாவால் வாழ்த்திய நூலாகும். இறைவனது பொதுநிலையாகும் ஐந்தொழில் நடத்தும் திறம், உயிர்களை மறைத்து நிற்கும் ஆணவத்தின் திறம், அதனை ஒழிக்க வேண்டி

இறைவன் சேர்க்கும் மாயா காரியம், உடற்கருவிகள், உயிர்கள் பிறப்பால் துன்புறும் நிலைகள், வினைக்கு ஈடாக நேரும் மறுமைப்பயன்கள், இருவினைஒப்பு முதலிய நிலைகள், இறைவன் மூவகை உயிர்கட்கு அருளும் திறம், உயிர்கள் சிவஞானம் பெற்றுச் சரியை முதலிய நெறிகளில் ஒழுகி அடைந்த சிவப்பேற்றின் நிலை, சைவ வேதாந்த முத்திப் பெருநிலை ஆகியன நூலில் விளக்கப் பெற்றுள்ளன.

## 9. கொடிக்கவி

ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். இந்நூல் 4 பாடல்களை உடையது. (விருத்தம் -1, வெண்பா-3) ஒருமுறை நடராசப் பெருமான் பெருவிழாவில் கொடியேற்றத்தின் போது கொடி ஏறவில்லை. நடராசப் பெருமானின் வான்வழிச் சொல்லால் உமாபதி சிவாசாரியாரைத் தில்லைவாழ் அந்தணர்கள் வேண்டி அழைத்து வந்தனர். திருக்கோவிலுக்கு வந்த உமாபதி சிவாசாரியார் இந்நூல் பாடக் கொடி ஏறியது என்ற வரலாறொன்று கூறப்பெறுகிறது. நூலின் முதற்பாடலில் வரும் ஒளிக்கும், இருளுக்கும் ஒன்றே இடம் என்ற பகுதி படித்து இன்புறத் தக்கது. இரண்டாம் பாடல் இறைவன் ஏது? சத்தி ஏது? ஆன்மா ஏது? கேவல, சகலம் ஏது? இது சொல்வார் உளரோ? என்று கொடி கட்டினோம் எனும் கருத்துடையது. மூன்றாம் பாடல் வாக்கு, மனம் கடந்த அறிதற்கரிய அறிவாகிய பொருளை, இவ்விடத்தே பொருந்தத் தக்கதாகக் கொடி கட்டினோம் என்ற பொருளுடையது. இறுதிப் பாடல் ஐந்தெழுத்தின் நுட்பத்தைக் கூறுகின்றது.

## 10. நெஞ்சுவிடுதூது

ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். இந்நூல் 129 கலிவெண்பாக்கண்ணிகளை உடையது. நூல், ஆசிரியர் தமது உள்ளத்தை மறைஞான சம்பந்தரிடம் மாலை வாங்கி வரும்படித் தூது விடும் முறையில் அமைந்து பொருள் முடியையும் விளக்குகிறது. நூலில் தத்துவங்கள், அருளுரைகள், புறச்சமய மறுப்புகள், முதலியன உள்ளன. தசாங்கப் பகுதி சிறப்பாகப் பேசப் பட்டுள்ளது. நெஞ்சை நோக்கி நான் பிரமம் என்றவர்பால்

நண்ணாதே என வேதாந்தத்தை, மறுக்கும் பகுதியும், ஞானாசிரியன் தளைநீக்கம் செய்யும் திறத்தினை விளக்கும் பகுதியும் குறிப்பிடத் தக்கன.

### 11. உண்மை நெறி விளக்கம்

ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். இந்நூல் ஆறு விருத்தப்பாக்களை உடையது. முதற்பாடல் தத்துவ வடிவம், தத்துவக் காட்சி, தத்துவத்தூய்மை, பற்றியும், இரண்டாம்பாடல் உயிர்வடிவம், உயர்க்காட்சி, உயிர்த்தூய்மை பற்றியும், மூன்றாம் பாடல் சிவவடிவம் பற்றியும், நான்காம் பாடல் சிவகாட்சி பற்றியும், ஐந்தாம் பாடல் சிவயோகம் பற்றியும், ஆறாம் பாடல் சிவப்பேற்றினைப் பற்றியும் குறிப்பிடுகிறது.

### 12. சங்கற்ப நிராகரணம்

ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். இந்நூல் 20 அகவற்பாக்களை உடையது. அகச் சமயங்களை மறுக்கும் வழியில் சித்தாந்தம் மிக நுட்பமாக உணர்த்தப் பெறுகிறது. இந்நூலில் மாயாவாதம் முதலான ஒன்பது சமயங்களின் வாதங்களைக் கூறி ஆசிரியர் மறுத்துள்ளார். சைவசித்தாந்த நிலையே பல்லாற்றானும் மிகச்சிறந்தது என்பதை இச்சிறுநூல் நன்கு விளக்குகிறது. இந்நூலுக்கு ஞானப்பிரகாச தேசிகர் உரை எழுதியுள்ளார்.

## ஆய்வு நோக்கம்

சைவசமய வரலாற்றில் சிறப்பிடம் பெறுவன சாத்திர நூல்களாகும். சாத்திர நூல்களில் தத்ததுவக் கருத்துகளும், வாழ்வியல் நெறிகளும், சமுதாயக் கோட்பாடுகளும் பிண்ணிப் பிணைந்து காணப்படுகின்றன, இத்தகைய உட்பொருளைக் கொண்ட சாத்திர நூல்களில் மெய்கண்டாரின் சிவஞான போதம் மிகச் சுருங்கிய நிலையில் கருத்துக்களை விளக்குகிறது. மனவாசங்கடந்தாரின் உண்மை விளக்கம், சைவ தத்துவங்களையும், ஆணவம், கன்மம் என்ற இரண்டு மலங்களையும் குறிப்பிட்டாலும், சாத்திரக் கொள்கைகளை முழுமையும் தெளிவாக்கவில்லை.

உமாபதி சிவாசாரியாரின் எட்டுச்சாத்திர நூல்களும் சைவ சித்தாந்தக் கொள்கைகளைப் பகுதி பகுதியாகக் கூறுகின்றனவேயன்றி, முழுமையாகக் கூறிடவில்லை. ஆனால் அருணந்தி சிவாசாரியாரின் சிவஞான சித்தியார் சைவசமய உட்பொருட் கருத்துகளை மிக விரிவான நிலையில் ஒருசேர எடுத்தியம்புகிறது. எனவே சிவஞான சித்தியாரையும், இருபா இருபஃதையும் ஆராய்வது, சைவ சித்தாந்தக் கருத்துகளைத் தெளிவதற்குத் துணைபுரிகின்றன என்பதால் அவ்விரண்டு நூல்களும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளன.

## ஆய்வுக்களம்

சைவசித்தாந்தச் சாத்திரங்களில் சைவசமயக் கொள்கைகள் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ காட்டப் பெற்றுள்ளன. இத்தகைய இரு நிலைகளில் சிவஞான சித்தியார் விரிவாக, எளிமையாக, வெளிப்படையாகக் கருத்துகளை வெளிப்படுத்துவதால் சித்தியாரே ஆய்வுக் களமாக அமைகிறது. இருபா இருபஃது அருணந்தி சிவாசாரியார் தம் ஞானாசிரியாராகிய மெய்கண்டார் மேல் கொண்டிருந்த குருபக்தியைச் சுட்டுவதோடு மட்டுமல்லாமல் அருணந்தி சிவாசாரியாரின் இயல்பையும், வெளிப்படுத்துவதால் இந்நூல் துணைக்களமாக அமைகிறது.

## ஆய்வின் தேவை

அருணந்தி சிவாசாரியார் நூல்களில் தனித்த ஒரு ஆய்வு இதுவரை வெளிவரவில்லை. சிவஞானசித்தியார் ஆராய்ச்சி என்ற நூலைத் தூத்துக்குடி ந.சிவகுருநாதன் பிள்ளை அவர்கள் படைத்துள்ளார். அந்நூலில் சிவஞான சித்தியாரின் சுபக்கத்தில் உள்ள பாடல்களின் கருத்துகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. டாக்டர் வ.ஆ.தேவசேனாபதி அவர்கள் சிவஞான சித்தியார் சுபக்கப் பகுதிக்குரிய அறுவர் உரைகளை ஆய்வு செய்துள்ளார். இந்தஆய்வுநூல் மூலம் சுபக்கத்தின் அறுவர் உரையில் காணப்பெறுகின்ற தத்துவக் கருத்துகளை உரையின் அடிப்படையில் காணமுடிகிறது. சிவஞான சித்தியார் வினாவிடை

என்ற நூலைச் சிதம்பரம் சபா.சிவப்பிரகாசம் பிள்ளை படைத்துள்ளார். இந்நூல் சுபக்கத்தில் கூறப்பெற்றிருக்கின்ற கருத்துகளை வினாவிடையில் தருகிறது. இம்மூன்று நூல்களும் சுபக்கம் பற்றியே அமைந்திருக்கின்ற காரணத்தால் பரபக்கம், சுபக்கம் இரண்டின் அடிப்படையில் சிவஞான சித்தியார் பற்றிய ஆய்வாக இவ்வாய்வு அமைகிறது.

## ஆய்வின் எல்லை

பதினான்கு சாத்திரங்களில் இருபா இருபஃது, சிவஞான சித்தியார் என்ற நூல்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பெற்றிருப்பதால் பிற சாத்திரங்கள், கருத்தொற்றுமைக்கு ஆங்காங்கு எடுத்தாளப் பெற்றுள்ளன. இருபா இருபஃது நூலிற்குச் சீர்காழித் தத்துவராயர் உரையும், சிவஞான சித்தியார் நூலிற்குச் சிவஞான முனிவர், மு.திருவிளங்கம் ஆகியோர் உரைகளும் ஆய்வில் கையாளப் பெற்றுள்ளன, ஆய்வில் இடம் பெற்றுள்ள சிவஞான சித்தியார் பாடல் எண்கள் சைவசித்தாந்தப் பெருமன்றம் 1940 ஆம் ஆண்டு வெளியிட்ட பதிப்பில் காணப்பெறும் பாடல் அடிப்படையில் குறிக்கப் பெற்றுள்ளன.

ஆய்வில் தத்துவச் சொற்களுக்குரிய தமிழாக்கம் தி.கி.நாராயணசாமி அவர்களின் "சமய சாத்திர அகராதி"யின்படியும் கா.சுப்பிரமணியபிள்ளை அவர்களின் சிவஞான சித்தியார் உரைநடையின்படியும் கையாளப் பெற்றுள்ளது. ஒரு சில தத்துவச் சொற்களுக்குத் தமிழாக்கம் உரியமுறையில் அமைக்க முடியாமையால் வடசொல்லாலே அச்சொற்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

## ஆய்வுப் பகுப்புகள்

### இயல் ஒன்று

ஆசிரியரின் வரலாறு இப்பகுதியில் அமைகிறது. குருபரம்பரையின் வரலாறு,பரம்பரையின் பிரிவுகள், பரம்பரையில் ஆசிரியரின் தனிநிலை, அவர் வரலாற்றைக் கூறும் நூல்களில்

காணப்பெறும் செய்திகளின் உண்மைநிலை. கால ஆய்வு ஆகியவைகள் இப்பகுதியில் விளக்கப் பெறுகின்றன.

### இயல் இரண்டு

இவ்வியலில் சைவத் தத்துவக் கருத்துகளின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய செய்திகள் முதலில் அமைக்கப் பெற்றுள்ளன, தத்துவ வரலாற்றில் அருணந்தி சிவாசாரியாரின் இடம் பற்றிக் குறிப்பிடப் பெற்று, அவரின் இருநூல்கள் அறிமுகப் படுத்தப் பெறுகின்றன, அவ்விரு நூல்களில் இருபா இருபஃது நூலே முதல் நூல் என்பதை நிறுவிப், பின்னர் அந்நூல் தோன்றக் காரணமும், அடுத்து அந்நூலின் அமைப்பும் குறிப்பிடப் பெற்றுள்ளன. இதில் காணப்பெறும் அவையடக்கம், காப்புச் செய்யுள் பற்றிய கருத்துகள் அடுத்து வெளிப்படுத்தப் பெற்றுள்ளன. இவ்விருநூல்களின் உரைகளும், பதிப்புகளும் அட்டவணைப் படுத்தி காட்டப் பெற்றுள்ளன.

### இயல் மூன்று

அருணந்தி சிவாசாரியாரின் நூல்களில் காணப்பெறும் தத்துவக்கொள்கைகள் இவ்வியலில் விளக்கப் பெற்றுள்ளன. மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கில் சிவஞான சித்தியாரில்தான் முதன் முதலாகக் கூறப்பெற்ற அளவை பற்றிய செய்திகள் ஆசிரியர் வழிநின்று விளக்கப் பெற்றுள்ளன. சைவ சித்தாந்தத் தத்துவத்தின் அடிப்படையாக விளங்கும் முப்பொருள் இயல்புகளை விளக்கும் முகத்தான் ஆசிரியர், இறை பற்றி, உயிர் பற்றி, தளை பற்றிப் கூறுகின்ற கருத்துகள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. இக் கருத்துகளைத் தொகுத்துரைக்கும் பொழுது ஆசிரியரின் தற்சார்புக் கருத்துகளே தொகுத்துரைக்கப் பெற்றுள்ளன.

### இயல் நான்கு

மெய்கண்டாரையும், அருணந்தி சிவாசாரியாரையும் ஒப்பீடு செய்யும் முறையில் இவ்வியல் கருத்துகள் முறைப்படுத்தப் பெற்றுள்ளன. சிவஞான போதத்திற்கும், சிவஞான சித்தியாருக்கும்

இடையே காணப்பெறுகின்ற யாப்புநிலை, கருத்து விரிநிலை, கருத்து ஒற்றுமைநிலை, உவமை, ஒற்றுமை நிலை ஆகியவை சான்றுகளுடன் காட்டப் பெற்றுள்ளன. மெய்கண்டார் நூலில் குறிப்பாக காட்டப் பெற்று, அருணந்தி சிவாசாரியார் நூல்களில் விரிவாகக் காட்டப் பெற்றுள்ள சத்தி நிலைகள், உயிர் உணர்வு நிலைகள் (அவத்தைகள்) சைவ சாதனங்கள், அணைந்தோர் தன்மை ஆகியவை பற்றிய செய்திகளும் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளன.

**இயல் ஐந்து**

இவ்வியலில் அருணந்தி சிவாசாரியார் நூல்களில் காணப்பெறுகின்ற யாப்பமைதியும், அணிகளும்,அணிகளில் சிறப்பிடம் பெறுகின்ற உவமை வகைகளும், ஒலிநயமும்,நடையழகும்,சொல்லமைப்புத் திறனும், உத்திகளும் ஆய்வு செய்யப் பெற்றுள்ளன.

இயல் ஆறு

ஆசிரியர் நூல்களால் அறியப் பெறும் சமயவழிபாட்டு முறைகளும், இறைவனின் திருமேனி பற்றிய செய்திகளும், ஆசிரியர் குறிப்பிடுகின்ற சிவமுத்தி நிலையும் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளன. சாத்திர நூலாக இருப்பினும் அந்நூல்களில் காணப்பெறுகின்ற சமுதாயக் கோட்பாடுகளும், அடியார் பெருமைகளும் ஆசிரியர் வழிநின்று எடுத்துக் காட்டப் பெற்றுள்ளன.

இறுதியில் ஆய்வின் முடிவுகள் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளது.

பின்னிணைப்பாகப் பதிப்புப் பட்டியலும், தத்துவக் கலைச் சொற்களின் தமிழாக்கமும் தரப் பெற்றுள்ளன.

## விளக்கக் குறிப்பு

1. சைவ சமயத்தோற்றமும் வளர்ச்சியும் ; 1979 ; ப-9.

2. தொல் ; பொருள்; சூ-5.

3. இராசமாணிக்கம். மா ; சைவசமயம் ; 1959 ; ப-28.

4. சிலம்பு ; கா. 5; வரி-169.

5. மணி ; கா. 1 ; வரி-54.

6. இராசமாணிக்கம். மா;சைவ சமய வளர்ச்சி; 1972; ப-10

7. தருமை ஆதீனம் மாசிலாமணி தேசிகரின் மாணவராகிய குமரகுருபரசுவாமிகளால் 17ஆம் நூற்றாண்டில் காசியில் "**குமாரசாமி மடம்**" தோற்றுவிக்கப்பெற்றது. இத்திருமடத்தின் 6ம் பட்டத்திற்குரியவராக தில்லை நாயக சுவாமிகள் காசியிலிருந்து பெரும் பொருள் கொண்டு வந்து கி.பி 1720ல் திருப்பனந்தாளில் ஒரு மடம் கட்டினார்கள். அதுமுதல் திருப்பனந்தாளில் காசிமடம் செயல் புரிந்து வருகிறது. திருமுறை சாத்திரப்பதிப்புகள் பல இத்திருமடத்தின் மூலம் வெளிவந்துள்ளன. 1949ல் சிவஞான சித்தியார் சுபக்கமும், 1966ல் திருவருட்பயனும், 1978ல் உண்மைநெறி விளக்கமும் வெளியிடப்பெற்றுள்ளன. இந்நாளில் கு.சுந்தரமூர்த்தி உரையுடன் சாத்திரங்கள் முறையாக வெளியிடப் பெற்று வருகின்றன.

# 1. அருணந்தி சிவாசாரியாரின் வரலாறு

முன்னுரை: மெய்கண்டாரின் வரலாற்று குறிப்பு; அருணந்தி சிவாசாரியாரின் தோற்றம்; குருபரம்பரையினர்; வரலாறு கூறும் நூல்கள்; வரலாற்று நூல்களில் காணப்பெறும் செய்திகளின் உண்மை நிலை; கல்வி, காலம்; முத்தி, முடிவுரை.

*முன்னுரை*

சைவ சமய வரலாற்றில் 13 ஆம் நூற்றாண்டு சைவ சமையச் சாத்திரங்களின் தோற்றத்திற்குரிய நூற்றாண்டாக விளங்கிச் சைவசமய வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கிறது. 13 ஆம் நூற்றாண்டில் தோன்றிய சைவ இலக்கியச் சாத்திரம் என்பது சைவ சித்தாந்தச் சாத்திரங்களின் தோற்றத்தின் சரித்திரம் என்று கூறப்பெறுகிறது.[1] சரித்திரத்தில் முதலிடம் பெற்று விளங்குபவர் மெய்கண்டார். மெய்கண்டாரை அடுத்துச் சிறப்பிடம் பெற்றவர் அருணந்தி சிவாசாரியார் ஆவார். மெய்கண்டாரின் வாழ்வியல் நிகழ்ச்சிகளும், அருணந்தி சிவாசாரியாரின் வாழ்வியல் நிகழ்ச்சிகளும் சித்தாந்தச் சாத்திர வரலாற்றில் பின்னிப் பிணைந்து காணப் பெறுகின்றன. எனவே அருணந்தி சிவாசாரியாரின் வரலாற்றை அறியுமுன் மெய்கண்டாரின் வாழ்க்கைக் குறிப்பினை அறிய வேண்டுவது இன்றியமையாததாகிறது.

## மெய்கண்டாரின் வரலாற்றுக் குறிப்பு

"முகில்தோய் கொடிதோன்றும் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடம்"[2] எனப் புகழ்பெறும் பெண்ணாகடத்திலிருந்த அச்சுதகளப்பாளர் என்பார் தமக்கு மகப்பேறு இல்லையென்றுத் தம் குல குருவாகிய சகலாகமபண்டிதரிடம் குறையிரந்தார். இச்சகலாகம பண்டிதரே பின்னர் அருணந்தி சிவாசாரியார் என்ற திருப்பெயர் பெற்றுச் சிறந்தவர். அவர் திருஞான சம்பந்தர் தேவாரத் திருமுறைகளில் கயிறு சாத்திப் பார்த்தபோது திருவெண்காட்டுப் பதிகத்தின் "பேயடையா" என்ற திருப்பாடல் கிடைத்தது.[3] அப்பாடலில் அமைந்திருந்த "பிள்ளையினோடு உள்ள நினைவாயினவே வரம் பெறுவர்" என்ற திருவாக்கால் குலகுருவும், மாணவரும் மனம் மகிழ்ந்தனர். அவ்வாக்கின்படி அச்சுதகளப்பாளர் தம் மனைவியோடு திருவெண்காடு சென்று இறைவனை நாள்தோறும் வழிபட்டார்.

வழிபாட்டின் பயனாய் அச்சுதகளப்பாளர் மனைவிக்கு ஆண் மகவு பிறந்தது. திருவெண்காடர் என்ற பொருளை உடைய "சுவேதவனப் பெருமாள்" என்ற திருப்பெயர் குழந்தைக்கு இடப்பெற்றது. மாமன் ஊராகிய திருவெண்ணெய்நல்லூரில் சுவேதவனப் பெருமாள் வாழ்ந்து வரும்பொழுது பரஞ்சோதி முனிவரால் சிவஞான அருளுரை (உபதேசம்) குழந்தைப் பருவத்திலேயே அவருக்குக் கிடைத்தது. அத்துடன் பரஞ்சோதி முனிவரால் மெய்கண்டார் என்ற பெயரும் சூட்டப்பெற்றது. அன்று முதல் தமக்குக் கிடைத்த சிவஞானப் பேரறிவைத் தன்னை நாடிவந்த மாணவர்களுக்கு மெய்கண்டார் அருளுரை செய்து வந்தார். இது மெய்கண்டாரின் வரலாறாக வழங்கி வருகிறது.

## அருணந்தி சிவாசாரியார் தோற்றம்

தமிழ்நாட்டின் நடுநாட்டுப் பகுதி திருமுனைப்பாடி நாடாகும். தீநெறிமாற - சிவநெறி சிறக்கத் திருநாவுக்கரசரும், ஆலாலசுந்தரரும் பிறந்திட அருள் பெற்ற நாடு என்று பெருமையாக அந்நாடு பேசப்பெறும்.[4] அந்நாட்டின் ஒரு பகுதியான திருத்துறையூரில்[5] பிறந்தவர் அருணந்தி சிவாசாரியார். "ஆதிசைவ அருணந்தியே" எனச் சந்தானாசாரியார் புராண சங்கிரகம் கூறுவதினின்று அவர் ஆதிசைவர் மரபைச் சேர்ந்தவர் எனத் தெரிகிறது. ஆதிசைவர் மரபு மாதொரு பாகனார்க்கு வழி வழி அடிமை செய்யும் மரபாகும், "சிவப்பிராமணர்களே ஆதிசைவர். சதாசிவ மூர்த்தியின் ஐந்து முகங்களிலும் கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியர் என்ற ஐவர் தோன்றினர். அவர்களின் மரபினரே ஆதிசைவர் எனப்படுகின்றனர். இவர்கள் சிவாலயங்களில் பூசை செய்வதற்கு அதிகாரிகளாக நியமிக்கப் பெறும் அந்தணர்கள் ஆவர்[6] என்பர்." இவர்களே அன்றிச் சைவ வேளாளராகிய சிவாசாரியர்களும் பண்டு தொட்டு ஆதிசைவர் எனக் கூறப்படுவதுண்டு[7]. பெரியபுராணத்தில் இடம் பெற்றுள்ள புகழ்த்துணை நாயனார் இவ்வழி வந்த சிவாசாரியார் ஆவார். எனவே ஆதிசைவர் என்பதற்கு அந்தணரில் ஒரு பிரிவினர் என்றும், சைவ வேளாளர்களே ஆதிசைவர் என்றும் இருவிதமாக விளக்கம் கூறப்பெறுகின்றது. இவ்விரு விளக்கமும் பொதுவாகச் சிவனுக்குத் தொண்டியற்றும் மரபைக் குறிக்கிறது.

எனவே அருணந்தி சிவாசாரியார் ஆர்வமிகு அன்பினராய் முப்போதும் வழிபடுவார் முதல் சைவர் என்றபடி சிவபெருமானுக்குத் திருத்தொண்டு புரியும் ஆதிசைவர் மரபில் தோன்றினார் எனக் கொள்ளலாம். இவரின் இயற்பெயர் சதாசிவராயர் என்பதாகும். இவர்தம் பெற்றோர்களைப் பற்றிய செய்திகள் அறிய முடிந்தில.

இவர் இளமையிலேயே வடமொழி அறிவும், தென்மொழி அறிவும் ஒருங்கே வாய்க்கப் பெற்றிருந்தவர். ஆதலால் வேத ஆகமங்களில் சிறந்த புலமை பெற்றவராகத் திகழ முடிந்தது. அதிலும் ஆகமப் புலமையில் மிகச் சிறந்து விளங்கினார். எனவே சகலாகம பண்டிதர் என்று உலகோரால் அழைக்கப் பெற்றார்.[8] பொய்ச் சமய இருள் அகலவும், மெய்ச்சமய ஒளி மேவவும், தமிழ்நாட்டின்கண் பல இடங்களுக்குச் சென்று ஆகமக் கருத்துகளை அறிவுறுத்தி வந்தார்.[9]

இவ்வாறு இவர் அருளுரை வழங்கி வந்தபோழ்து மாணாக்கர்களாய் அமைந்த பலரில் ஒருவர்தான் பெண்ணாகடம் அச்சுதகளப்பாளர். அச்சுதகளப்பாளர் தமக்கு மகவு இன்மை குறித்து குறையிரந்திட அப்பொழுது குருவாகிய சகலாகம பண்டிதர் கயிறு சாத்தி மெய்கண்டார் தோன்றுதற்குரிய வழிபாட்டினைக் கூறியருளினார். மெய்கண்டார் மூன்று வயதுக் குழந்தையாய்த் திருவெண்ணெய் நல்லூரில் தம் மாணவர்களுக்கு அருளுரை செய்து கொண்டிருந்தபோது - சகலாகம பண்டிதர் திருத்துறையூரில் தம் மாணவர்களுக்கு அருளுரை செய்து கொண்டிருந்தார். மெய்கண்டாரின் பெருமையைக் கேள்வியுற்று மெய்கண்டாரைக் காணச் சகலாகம பண்டிதர் திருத்துறையூரினின்று திருவெண்ணெய்நல்லூர் சென்றார்.

திருவெண்ணெய் நல்லூரிலிருந்த பண்டிதரின் மாணவர்கள் அவரை வரவேற்றனர். தம்மை வரவேற்ற மாணவர்களுள் மெய்கண்டார் இல்லை என்பதை அவர் உணர்ந்தார். இதனால் மெய்கண்டார் இருக்கும் இடம் தேடி அவரே சென்றார். அப்பொழுது மெய்கண்டார் தம் மாணவர்களுக்கு முப்பொருள்களின் பொதுவியல்பு பற்றி விளக்கம் கூறிக்கொண்டிருந்தார். அவரின் அருளுரை விளக்கப் பெருமையையுணர்ந்து சகலாகம பண்டிதர் மெய்கண்டாரைப் பணிந்து போற்றினார். மெய்கண்டார் சகலாகம பண்டிதருக்குத் திருப்பார்வை அருளிச் (நயனதீக்கை) செய்து, சிவஞான

அருளுரையும் செய்தருளி, அருணந்தி என்ற தீக்கைப் பெயரும் சூட்டினார்.

அதுமுதல் அருணந்தி சிவாசாரியாரும் மெய்கண்டாரின் மாணவராகி அவரின் அருளுரைகளைப் பெற்று, மெய்கண்டாரின் காலத்திற்குப் பிறகு சில ஆண்டுகள் வாழ்ந்து மறைஞான சம்பந்தர் உள்ளிட்ட மாணவர்களுக்கு அருளுரை வழங்கித் திருத்துறையூரில் புரட்டாசித் திங்கள் பூரநாளில் சிவவடிவத்தில் இரண்டறக் கலந்தார். இதுவே அருணந்தி சிவாசாரியாரின் வரலாறாகக் கூறப்பெற்று வருகிறது. இவ்வரலாற்றுச் செய்திகள் பின்னர் வந்த நூல்களில் இடம் பெற்றுள்ளனவேயன்றி-அகச் சான்றுகள் மூலம் அமைந்தன அல்ல.

குருபரம்பரையினர்

அருணந்தி சிவாசாரியார் புறச் சந்தானாசாரியர் நால்வரில் ஒருவர். இதனை முதன் முதலில் குறிப்பிட்டவர் உமாபதி சிவாசரியார் ஆவார். சந்தானம் என்ற சொல் பரம்பரை என்ற பொருளுடையது. ஆசாரியார் என்பது குரு எனப்படும். எனவே சந்தானாசாரியார் என்பது குரு பரம்பரை என்ற பொருளில் அமைந்துள்ளது. சைவ சித்தாந்தக் கொள்கைகளை முதலில் சிவபெருமான் ஆகமங்களாக நந்தியம் பெருமானுக்குக் கூற அவர் சனற்குமார முனிவருக்கு உபதேசித்தார். அம்முனிவர் சத்திய ஞான தரிசினிகளுக்கு அருளினார். சத்திய ஞான தரிசினிகள் தம் மாணவராகிய பரஞ்சோதி முனிவருக்கு அருளினார். நந்தியம் பெருமான் முதலாகிய இந் நால்வரும் திருக்கயிலையில் வாழ்ந்ததால் அகச்சந்தானம் எனப்பட்டனர்.

பரஞ்சோதி முனிவர் மெய்கண்டாருக்குச் சிவாகமப் பொருளை வழங்கினார். மெய்கண்டார் அருணந்தி சிவாசரியாருக்கு அருளுரை செய்தார். அவர் மறைஞான சம்பந்தருக்கு அருளிட - அவர் உமாபதி சிவாசாரியாருக்கு அருளுரை செய்தார். மெய்கண்டார் முதலிய இந்நால்வரும் நில உலகில் வாழ்ந்தமையால் புறச் சந்தானாசாரியர் எனப்பெற்றனர். இக் குருபரம்பரையை அருணந்தி சிவாசாரியார் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[10] அருணந்தி சிவாசாரியாரின் பாடலில் நந்தியம் பெருமான், சனற்குமாரர் பெயர்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளன.

பின்வந்த உமாபதி சிவாசாரியார் சிவப்பிரகாசம் என்னும் தம் நூலில் குருபரம்பரையைக் குறிப்பிடுகிறார்.[11] சிவப்பிரகாசப் பாடலில் நந்தியம் பெருமான், சனற்குமாரர், சத்தியஞானதரிசினி, பரஞ்சோதியார், மெய்கண்டார், அருணந்தி, மறைஞான சம்பந்தர் என்ற பெயர்கள் இடம் பெற்றுள்ளன. உமாபதி சிவாசாரியார் பாடலில்தான் முழுமையான குருபரம்பரை கூறப்பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. அவர் இவ்வாறு குறிப்பிடக் காரணம் 13ஆம் நூற்றாண்டுச் சூழ்நிலையே ஆகும்.

13 ஆம் நூற்றாண்டில் வைணவக் குருபரம்பரை கூறும் "குருபரம்பரா ப்ரபாவம்" என்னும் நூல் தோன்றியது. அதனையொட்டி, வைணவத்தில் பல குரு பரம்பரை நூல்கள் தோன்றின. எனவே அருணந்தி சிவாசாரியார் வைணவக் குருபரம்பரைபோல் சைவத்தில் பரம்பரையைச் சுட்டிட எண்ணித் தொடங்கி வைத்தார் எனலாம். அவர் தொடங்கியதை விரிவாக்கித் தந்தவர் முன்பு குறிப்பிட்டபடி உமாபதி சிவாசாரியார் ஆவார். நந்தியம் பெருமானில் தொடங்கி உமாபதி சிவாசாரியாரோடு குருபரம்பரையைச் சைவ உலகம் நிறுத்தியிருக்கிறது. இவ்வாறு நிறுத்தியதற்குக் காரணம் முன்னவர்களுக்குப் பெருமை கொடுப்பதற்காகவே ஆகும். "காப்பியமா ஐந்து, நாயன்மார்களா அறுபத்து மூவர், சமயக் குரவரா நால்வர், திருமுறைகளா பன்னிரண்டு." இப்படித் தொகை கொடுத்து மேலும் வளரவிடாதபடித் தடுக்கும் இயல்பு பரம்பரையாக வழங்கிவருதல் போலப் புறச்சந்தானம் நான்கு என்ற அளவில் சந்தான பரம்பரை நிறுத்தப் பெற்றிருக்கவேண்டும் என்றும் காரணம் கூறுவர்.[12] இத்தகைய குருபரம்பரையில் புறச்சந்தானாசாரியரில் இரண்டாம் குருவாக விளங்குபவர் அருணந்தி சிவாசாரியார் ஆவார்.

வரலாறு கூறும் நூல்கள்

புறச் சந்தானாசாரியார் நால்வரின் வரலாற்றுக் குறிப்புகளைத் தமிழகத்தில் எழுந்த தலபுராணங்கள்தாம் முதன் முதலில் குறிப்பிடுகின்றன. தலபுராணங்கள் கடவுள் வாழ்த்துப் பகுதியில் சிவன், உமாதேவியார், விநாயகர், முருகர் வணக்கங்களைத் தொடர்ந்து, சைவ சமயாசாரியர்களின்

வணக்கத்தைக் கூறிப் பின்னர்ச் சந்தானாசாரியர் வணக்கத்தை அமைத்துள்ளன. இவ்வாறு அமைத்ததற்குக் காரணம் - அவ்வத் திருத்தலங்கள் தேவாரப் பாடல் பெற்றவையாக அமைந்து - தேவார வைப்புத் தலங்கள் எனச் சிறப்புப் பெற்றன அத்தலங்களில் சமயக் குரவர்களோடு குருபரம்பரையினர் வழிபாடும் நடந்திருக்க வேண்டும்.

எனவே சமயக் குரவர்களும், சந்தானகுரவர்களும் வழிபட்ட இடங்களின் வரலாற்றை அவர்களையும் வணங்கித் தொடங்குவது சிறப்புடைத்தாகும் என்று கருதியிருக்கவேண்டும். கிடைத்திருக்கும் தல புராணங்களில் காரைக்குடி சொக்கலிங்கஞ் செட்டியார் இயற்றிய சித்தவட மான்மியம் பழமையானதாகக் காணப் பெறுகிறது. அந்நூலில் அருணந்தி சிவாசாரியாரின் வாழ்த்து தனியே காணப் பெறுகிறது. தலபுராணங்களில் காணப்பெறும் செய்திகள் வரலாற்றுக் குறிப்பாகவே அமைந்துள்ளன. அவற்றுள் சந்தானாசாரியார்களின் இயற்பெயர், ஊர்ப்பெயர், முத்திபெற்ற நட்சத்திரம் போன்ற சிறு சிறு குறிப்புகளே காணப்பெறுகின்றன. குருபரம்பரையின் முழு வரலாற்றை கி.பி. 1857ல் திருவாரூர் சாமிநாத தேசிகர் 126 செய்யுள்களாக, "சந்தானாசாரியர் புராண சங்கிரகம்" என்ற தலைப்பில் எழுதியுள்ளார்.

கி.பி. 19ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எழுதிய புலவர் புராணத்திலும் சந்தானாசாரியர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் காணப்பெறுகின்றன. கி.பி.20ஆம் நூற்றாண்டைச் சார்ந்த திருமயிலை சண்முகம் பிள்ளையவர்கள் எழுதிய "சந்தானகுரவர் நான்மணிமாலை" என்ற நூலிலும் வரலாற்றுச் செய்திகள் அமைந்துள்ளன. தருமையாதீன சண்முக சுவாமிகள் இயற்றிய "சந்தான தேசிகர் போற்றிக் கலிவெண்பா"விலும் வரலாற்றுச் செய்திகள் காணப்படுகின்றன. இவை நான்கிலும், சந்தானாசாரியார் புராணசங்கிரகம் என்பது மட்டும் "வரலாற்று நூலாகவே" அமைந்துள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

வரலாற்று நூல்களில் காணப்பெறும் செய்திகளின் உண்மை நிலை

மேற்கூறப்பெற்ற நூல்களின் வாயிலாக அறியும் வரலாற்று நிகழ்ச்சியில் பின்கண்ட குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி ஒன்று கூறப்பெற்றுள்ளது. சகலாகம பண்டிதர் திருவெண்ணெய் நல்லூரில்

தம்மை மெய்கண்டார் வரவேற்க வாராமையால் மெய்கண்டார் இருக்குமிடத்திற்குச் சினத்தோடு சென்றார். அங்கு மெய்கண்டார் மாணவர்களுக்கு ஆணவம் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார். சகலாகம பண்டிதர் வந்ததை மெய்கண்டார் அறியாதவர் போல் தம் தொழிலில் ஈடுபட்டிருந்தார். சினத்தோடு வந்த சகலாகமபண்டிதருக்கு மேலும் சினம் ஏற்பட்டது. மெய்கண்டாரை நோக்கி ஆணவத்தின் பொருள் யாது? எனக் கேட்டார். மெய்கண்டார் அதற்கு அவரையே சுட்டிக் காட்டினார். சகலாகம பண்டிதரும் உடனே தம் தவறு உணர்ந்து அவரைப் பணிந்து மாணவராயினார் என்று கூறப்பெறுகின்றது.

சகலாகம பண்டிதர் மெய்கண்டாரிடம் ஞானம் பெற்று அருணந்தியானார் என்பதை விளக்க இந்நிகழ்ச்சி வரலாற்றில் இணைக்கப் பெற்றுள்ளது. ஆயின் இந்நிகழ்ச்சி நடந்தமைக்குச் சந்தானாசாரியர் புராண சங்கிரகச் சான்று தவிர வேறு சான்றில்லை. எனவே பின்வந்தோரே இதனைக் கற்பித்திருக்க வேண்டும். அருணந்தி சிவாசாரியார் தம் நூலில் வாழ்த்துக் கூறுமிடத்தில் மெய்கண்டாரின் திருவடிப் பெருமையினைக் கூறுகிறாரேயன்றி மெண்கண்டார் தம் ஆணவத்தைச் சுட்டிக் காட்டியதாகக் கூறவே இல்லை. மேலும் சகலாகம பண்டிதராக இருந்தபோது ஆணவம் அவரிடத்தில் இருக்குமானால் - மெய்கண்டாரை - அதாவது தம் மாணவ மரபில் இருப்பவரைக் காணத் தானே வலிந்து சென்றிருக்க மாட்டார். எனவே மெய்கண்டாரின் பெருமையைக் கேள்வியுற்றுச் சகலாகமபண்டிதர் அவரைக் காணச் சென்று - மெய்கண்டாரின் சித்தாந்த விளக்கத்தின் சிறப்பை எண்ணி - வியந்து அவரையே சிவனாகக் கொண்டு - அவருக்கு மாணவரானார் எனக்கொள்வதே சிறப்பு. எனவே தான் இருபா இருபஃதில் மெய்கண்டாரைப் பாடல்தோறும் சிவனாகக் கூறி - சித்தியாரில் தம்மைப் பவமாகிய கடலில் அழுந்தாது மீட்டார்[13] என்று குறிப்பிடுகிறார். இலங்கை திருவிளங்கம் உரைப் பதிப்பில் மேற்கூறிய நிகழச்சி இடம் பெறாமையும் அக் குறிப்பிட்ட நிகழ்வின் உண்மையை ஐயத்திற்கிடமாக்குகிறது.

அருணந்தி சிவாசாரியாரின் நூல்களின் வாயிலாக அவரின் வாழ்க்கைக் குறிப்புகளாகச் சிலவற்றை ஊகிக்கலாம். இடகலை, பிங்கலை நாடிகள் பற்றிய செய்திகள்,[14] யோக சாதனைகளின்

இயல்புகள்[15] பற்றிய செய்திகள் ஆகியவை சித்தியார் சுபக்கத்தில் இடம்பெற்றுள்ளன. அவை ஆசிரியர் யோகப் பயிற்சி பெற்றவராக இருந்திருக்க வேண்டும் என்பதற்குச் சான்றாகத் திகழ்கின்றன. சிற்றின்பத்தைப் பற்றி அவர் கூறியிருக்கும் செய்திகள்[16] அருணந்தி சிவாசாரியார் இல்லற நெறியை விடுத்து முனிவராக இருந்து மாணவர்களுக்கு அருளுரை வழங்கியிருக்க வேண்டும் என்பதையும் உணர்த்துகின்றன, வரலாறு கூறும் நூல்கள் இல்வாழ்க்கையைப் பற்றிக் கூறாததும் இதனை வலியுறுத்தும்.

கல்வி

அருணந்தி சிவாசாரியார் வடமொழிப் பயிற்சி மிக்குடையவராகத் திகழ்ந்திருக்கிறார். ஆகமங்கள் வடமொழியில் இருந்தமையால் - அவற்றை அறிந்திட அவரின் வடமொழிப் பயிற்சி பெரிதும் துணை புரிந்திருக்கிறது. ஆகமங்களைக் கற்றுத் தேர்ந்து - பிறருக்குக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியராகவும் விளங்கியிருக்கிறார். எனவேதான் சகலாகம பண்டிதர் என்ற சிறப்புப் பெயரும் - அவருக்கு வழங்கப் பெற்றிருக்கிறது. சித்தியாரில் பரபக்கக் கருத்துகளை அவர் கையாண்டிருப்பது வடமொழி நூல்களை அடிப்படையாகக் கொண்டே என்பர்.[17] மேலும் அவர் வேத அகமங்களைக் கற்றுத் தேர்ந்தமையால் தம் நூலில் ஆங்காங்கு மறைகளைப் பற்றி எடுத்தாண்டுள்ளார்.[18] அவரின் தமிழ்ப் புலமையைச் சிவஞான சித்தியாரிலும், இருபா இருபஃதிலும் பரக்கக் காணலாம்.

காலம்

மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர் மூவரும் ஒரே காலத்தைச் சேர்ந்தவராவர். அவர்கள் காலம் கி.பி.13 ஆவது நூற்றாண்டு. மெய்கண்டாரின் காலத்தை 13ஆம் நூற்றாண்டாகக் கணக்கிட்ட வரலாற்று ஆசிரியர்கள் மூன்றாம் இராசராசனின் பதினைந்தாம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த திருவண்ணாமலைக் கல்வெட்டை ஆதாரமாகக் காட்டுகின்றனர்.[19] "திருவண்ணாமலையில் காணப்படும் கல்வெட்டு ஒன்று கி.பி.1232ல் திருவெண்ணெய் நல்லூருடையார் மெய்கண்ட தேவர் என்பார்

செங்குன்ற நாட்டு மாத்தூர் ஆகிய இராசராச நல்லூரில் மெய்கண்டீச்சுவரமுடைய சிவபெருமானை எழுந்தருளுவித்து வழிபாட்டிற்கு நிவந்தமாக இறையிலி நிலம் அளித்தனர் என்றும், அவ்வூரிலேயே மெய்கண்ட தேவப் புத்தேரி என்ற ஏரி ஒன்று அமைத்தனர் என்றும் கூறுகின்றது - இக்கல்வெட்டு வரையப் பெற்ற காலம், இதில் சொல்லப்படும் பெரியாரின் பெயர், அவருடைய ஊர், அவர் புரிந்துள்ள அறச்செயல்கள் ஆகியவற்றை ஆராயுமிடத்து அவரே தமிழ் மொழியில் சிவஞானபோதம் இயற்றிய அறிஞர் பெருமானாக இருத்தல் வேண்டும் என்பது நன்குத் துணியப்படும்" என்பது அவர்களின் கருத்தாகும். எனவே இத்தகைய வரலாற்று ஆசிரியர்கள் வழியில் மெய்கண்டாரின் காலத்தை 13ஆம் நூற்றாண்டு எனக் கொள்வதால்- சமகாலத்தவராகிய அருணந்தி சிவாசாரியாரின் காலத்தையும் கி,பி.13 ஆம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம். தே,ஆ.சீனிவாசன் அவர்கள் கி.பி.1195-1250 எனக் காலத்தை வரையறுப்பார்.[20] மெய்கண்டாரின் காலத்தை கி.பி. 11 ஆம் நூற்றாண்டு எனக் கொள்வார் மு.அருணாசலம் அவர்கள்.[21] ஆயின் அவரே மெய்கண்டாரின் கால ஆய்வுக் கட்டுரையின் இறுதிப் பகுதியில் "மேற்குறித்த கால எல்லையை, நம் ஆசிரியர்கள் காலம் எவ்வளவு பழமையாக இருந்திருத்தல் கூடும் என்பதைச் சுட்டிக் காட்டவே குறிப்பிட்டோம். இது முடிவான வார்த்தையல்ல" என்று கூறியிருப்பதால் இலக்கிய ஆதாரமோ, கல்வெட்டு ஆதாரமோ கிடைக்கும் வரையில் மெய்கண்டார் - அருணந்தி சிவாசாரியார் காலத்தை கி.பி. 13 ஆம் நூற்றாண்டு என்று கொள்வதே பொருத்தம் உடையது.

முத்தி

உலகில் நீண்டநாள் வாழ்ந்தவர் அருணந்தி சிவாசாரியார் ஆவார். மெய்கண்டாரின் பிறப்புக்கு ஆசி கூறி - பின்னர் அவரிடமே ஞானம் பெற்று, மறைஞான சம்பந்தர் உள்ளிட்ட மாணவர்களுக்கு உபதேசம் செய்திருக்கிறார் என்றால் பல

ஆண்டுகள் அவர் வாழ்ந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது. அவர் முத்திபெற்ற திங்கள் புரட்டாசி. நாள் பூர நாள். இதனை,

*"சித்திரை யத்தம் உமாபதி; ஆவணித் திங்கள் தன்னில்*
*உத்திரஞ் சீர்கொள் மறைஞான சம்பந்தர் ஓதுகன்னிச்*
*சுத்தமெய்ப் பூரம் அருணந்தி ஐப்பசி சோதி தன்னில்*
*வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினாரே"* [22]

என்ற பாடல் வலியுறுத்தும். திருத்துறையூரில் அவருடைய பெயரில் சமாதிக்கோயில் ஒன்றுள்ளது. இச்சமாதிக் கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தாரால் புதுப்பிக்கப் பெற்றிருக்கிறது. சிறிய முன்மண்டபமும், கருவறையும் கொண்டதாக இக்கோயில் விளங்குகிறது. கோயில் கிழக்கு நோக்கிய முகப்பினை உடையது. கருவறையின் நடுவில் சமாதிமேடை போன்ற ஓர் அமைப்பு காணப்பெறுகிறது. அக் கல்மேடைக்கு மேலே இரண்டு திருவடிகள் பொறிக்கப் பட்டுள்ளன. இந்தச் சமாதியைச் ஜீவிய சமாதி என்று குறிப்பிடுகின்றனர். ஜீவிய சமாதி என்பது உயிரோடு இருக்கும் பொழுதே சமாதிநிலை எய்தியதைக் குறிப்பதாகும். சமாதியில் உள்ள திருவடிக்கு நாள் வழிபாடும், திங்கள் தோறும் பூரநாளில் சிறப்பு வழிபாடும் புரட்டாசிப் பூர நாளில் குருபூசை வழிபாடும் நடைபெறுகிறது.

முடிவுரை

கி.பி.13ஆம் நூற்றாண்டுச் சைவசமய சாத்திரங்களின் வளர்ச்சியில் முக்கிய இடம் பெற்ற அருணந்தி சிவாசாரியார் - மெய்கண்டாருக்குக் குலகுருவாக இருந்து - பின்னர் மாணவராகிய அம் மெய்கண்டார் திறம் கண்டு - மாணவரையே தமக்கு ஞானாசிரியராக ஏற்றுக் கொண்ட சிறப்பினைப் பெற்றவர் என்பது வெளிப்படுகிறது.

அருணந்தி சிவாசாரியார் வரலாற்றுக்கு அகச் சான்றுகள் முழுமையும் கிடைக்க வில்லை என்றாலும் ஒருசில நிகழ்வுகளை அறிவதற்கு சான்றுகள் உள்ளன என்பதும் தெளிவாகிறது.

அருணந்தி சிவாசாரியாரின் காலம் கிடைத்திருக்கும் திருவண்ணாமலைக் கல்வெட்டுச் சான்றின்படி கி.பி.13 ஆம் நூற்றாண்டு எனத் தெரிகிறது. வடமொழி அறிவும், தென்மொழி அறிவும் ஒருங்கே வாய்க்கப்பெற்றமையால் அருணந்தி சிவாசாரியாரால் சைவ உலகிற்குச் சிறந்த தத்துவ நூல்களைப் படைத்திட முடிந்தது என்பதும் வெளிப்படுகிறது.

## 2.அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள் -அறிமுகம்

முன்னுரை : தத்துவக் கருத்துகளின் தோற்றமும், வளர்ச்சியும்; அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள்; இருபா இருபஃது நூல் தோன்றக் காரணம்; நூலமைப்பு, உரைகளும் - பதிப்பும்; சிவஞான சித்தியார் நூல் தோன்றக் காரணம்; நூலமைப்பு; உரைகளும்-பதிப்பும்; காப்புச் செய்யுள்; அவையடக்கம்; முடிவுரை.

### முன்னுரை

சைவசித்தாந்தச் சாத்திரங்கள் மெய்கண்டாரின் சிவஞான போதத்தினை முதன்மையாகக் கொண்டு அமைந்தமையால் மெய்கண்ட சாத்திரங்கள்[அ] எனப் பெயர் பெற்றன. சாத்திரங்கள் பதினான்கினையும் படைத்தருளிய பெருமக்கள் அறுவரில் அருணந்தி சிவாசாரியார்தான் தத்துவக் கருத்துகளை வகுத்தமைத்து விரிநூல் படைத்துச் சிறப்புற்றவர்.

### தத்துவக் கருத்துகளின் தோற்றமும் வளர்ச்சியும்

சிவ வழிபாடு தொன்று தொட்டே தமிழரிடம் இருந்துள்ளது. சிந்துவெளியில் கிடைத்த பழம் பொருள்களில் எருது வடிவம் பொறித்த சிறு நாணயங்கள் இருந்தமை சிவ வழிபாட்டின் பழமையை உணர்த்துகின்றன. பழந்தமிழரிடம் இருந்த கடவுள் கொள்கைகளைப் பழைய இலக்கண இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. தொல்காப்பியம் கருப்பொருளில் தெய்வத்தையே முதலாவதாகக் கூறுகின்றது. முழுமுதற் பொருளாகிய கடவுள் பற்றிய சிந்தனையும் அக்காலத்து இடம் பெற்றிருந்தது.[1] நல்வினை தீவினைப்பகுப்புகள் இருந்தமையும் இறைவன் கூட்ட நல்வினையால் காதல் வாழ்வு அமையும் என்பதையும் அக்கால வாழ்வியல் முறையில் காணமுடிகிறது.[2] நிலையாமை பற்றிய கருத்துகளும்[3] அக்காலத்தில் நிலவி வந்துள்ளன.

இத்தகைய கடவுட் கொள்கைகள் தொல்காப்பியர் காலத்தில் நிலவியமை அந்நூல்வழிப் பெறப்படுகின்றன. சங்க காலத்தில் அக்கொள்கைகள் மேலும் வளர்ந்துள்ளமை சங்க இலக்கியங்களால் அறியப் பெறுகின்றன. உலகத் தோற்றத்திற்குச் சிவனே காரணம் என்ற கொள்கை மாங்குடி மருதனார் பாடலில் கூறப்பெற்றுள்ளது.[4] சிவபெருமான் உருவ அமைப்பு, சிவன் கல்லால மரத்தின் கீழிருந்து வேதம் உரைத்தமை ஆகிய செய்திகளும் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு தொல்காப்பிய, சங்க காலங்களில் சிவ வழிபாடும், கடவுள் கொள்கைகளும் மக்கள் மத்தியில் காணப்பெற்றமை அறியமுடிகின்றது.

இவ்வழிபாட்டுக் கொள்கைகள் வளர்ந்து கி.பி. ஆறாம் நூற்றாண்டில் திருமந்திர நூலில் முழுமையும் இடம்பெற்றன. தமிழ் ஆகமமாகத் திகழ்ந்தது திருமந்திரம் எனலாம். சைவ சமயத்தின் கடவுள் கொள்கைகளைச் சித்தாந்தத் தத்துவங்களாக முதலில் வடிவு கொடுத்து காட்டியது திருமந்திரமேயாகும். சித்தாந்தம் என்ற சொல்லை முதன் முதலில் கையாண்டதும் அந்நூலேயாகும்.[5] மேலும் திருமந்திரத்தின் ஐந்தாம் தந்திரத்தில் சைவப் பிரிவுகள் பலவும் குறிக்கப்பெறுகின்றன. இவ்வாறு பிற்காலத்தில் சைவசித்தாந்தச் சாத்திரங்கள் வளர்வதற்குத் திருமந்திரம் ஓர் ஊற்றுக்கண்ணாக அமைந்தது என்பர்.[6] பல்லவர் காலச் சைவக் கொள்கை “சைவ சிந்தாந்தம்” என்று கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது.[7] பிற்காலப் பல்லவர் காலத்தில் சிவனடியார்கள், சமயக்குரவர்கள் தங்கள் பாமாலைகளால் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரை சைவ சமயத் தத்துவங்களை வெளிப்படுத்தினர். பல்வேறு காலத்தில் வாழ்ந்த அடியார்களின் பாடல்கள் திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றன. அவை சைவ சித்தாந்தத் தத்துவத்தின் அடிப்படைகளாக விளங்கின. இவ்வாறு கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரை சைவசித்தாந்தக் கொள்கைகள் “தோத்திரப் பனுவல்களாக” அமைந்து சைவசமயத்தின் எழுச்சிக்கும், வளர்ச்சிக்கும் உறுதுணை புரிந்து வந்தன.

கி.பி.12 ஆம் நூற்றாண்டில் வேதாந்த சமயம், விசிஷ்டாத்துவைதம், துவைதம் ஆகிய சமயங்கள் தத்தம் கொள்கைகளைத் தத்துவ நூல்களாக[7அ] வெளிப்படுத்தின. பிற சமய வளர்ச்சியோடு இந்த நூற்றான்டில் சைவ சமயமும் தம்

கொள்கைகளைத் தத்துவ நூல்களாக வெளிப்படுத்த வேண்டிய நிலைக்கு உரியதாயிற்று. இச்சூழலில் தோன்றியது சைவ சித்தாந்தச் சாத்திர நூலாகிய ஞானாமிர்தம். ஞானாமிர்த ஆசிரியர் வாகிச முனிவர் ஞானாமிர்தத்தில் சைவசித்தாந்தக் கொள்கைகளையும், மாறுபட்ட கொள்கையினரை மறுத்தலையும் அமைத்துள்ளார். சுருங்கச் சொன்னால்.

ஞானாமிர்தம் ஆன்மீக வாழ்க்கையின் தத்துவங்களைப் பற்றிச் சொல்கிறது எனலாம். ஞானாமிர்தத்திற்குப் பின்னர் அதே நூற்றாண்டில் திருவுந்தியாரும், திருக்களிற்றுப் படியாரும் தோன்றிச் சைவசித்தாந்த வளர்ச்சிக்கு அடிகோலின. இம்மூன்று நூல்களும் சிவஞான போதத்திற்கு முன்னர்த் தோன்றிய சைவ சித்தாந்த நூல்களாகும். இவை மூன்றும் சைவசித்தாந்தக் கொள்கைகளை ஆன்மீக வாழ்வின் நெறிநின்று உணர்த்தின. இத்தகு சூழ்நிலையில் சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகளைத் தனித்து எடுத்துக்கூறவேண்டிய நிலை சைவசமயத்திற்கு ஏற்பட்டது. அதாவது சித்தாந்த நெறியின் அடிப்படையாக விளங்கும் அத்துவிதக் கொள்கையை எடுத்துக்கூற வேண்டிய சூழல் ஏற்பட்டது. இத்தகைய அரும்பணியை சைவசித்தாந்தக் கொள்கையைத் தனித்து வடித்துக் கொடுக்கும் பணியை கி.பி.13ஆம் நூற்றாண்டில் தோன்றிய மெய்கண்டாரும், அருணந்தி சிவாசாரியாரும் செய்தனர். சைவ சித்தாந்தத்திற்கு வேத ஆகம நூல்களே பிரமாணநூல்களாகும்.இவை முதன் முதலில் தமிழில்தான் இருந்தன என்பது கா.சுப்பிரமனிய பிள்ளையின் கருத்து.[8]

வேத ஆகமநூல்களில் ஆகம நூல்களே சைவ சித்தாந்தத் தத்துவ நூல்களுக்கு முக்கிய ஆதாரமாகக் கருதப் பட்டன. ஆகமம் என்ற சொல் "ஒன்றிலிருந்து வந்தது" என்ற பொருளைத் தரும் என்பர்.[9] அதாவது சிவனிடத்திலிருந்து வந்தமை என்ற பொருளைத் தரும். இவ்வாகமங்கள் 28 ஆகும்.[10] இவற்றுள் பத்து ஆகமங்கள் நேரே இறைவனால் அருளப் பெற்றவை என்றும், ஏனையவை இறைவழி நின்ற ஞானிகளால் அருளப் பெற்றவை என்றும் கொள்ளுவது மரபாக இருந்து வருகிறது. ஒவ்வொரு ஆகமமும் ஞான காண்டம், யோக காண்டம், கிரியா காண்ட ம், சரியா காண்டம் என நான்கு பகுதிகளை உடையது. இதில் ஞான காண்டமே தத்துவக் கருத்துகளை மிகுதியாகக் கொண்டது. ஆகமங்கள் நூல் வடிவு பெற்ற காலம் கிருத்துவிற்கு ஆயிரத்தைந்நூறு ஆண்டுகட்கு

முன்னது என்பர்.[11] இந்த ஆகமங்களில் காணப்பட்ட முரண்பாடுகளை நீக்கவும் தமிழில் ஆகமக் கருத்தின் தெளிவை வெளிப்படுத்தவும் 12ஆவது நூற்றாண்டிற்குப் பின்னர் மெய்கண்ட நூல்கள் தோன்றின என்பது முடிபு.

இத்தகைய சைவ சித்தாந்த வளர்ச்சியில் தான் அருணந்தி சிவாசாரியாரின் பணி தொடங்குகிறது.

## அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள்

சைவாகமங்களை நன்கு கற்றுத் தேர்ந்த அருணந்தி சிவாசாரியாருக்குப் பாசம் பற்றிய கருத்துகளில் ஐயம் ஏற்பட்டிருக்கிறது. அவ் ஐயத்தைத் தம் ஞானாசிரியரிடம் கேட்டுத் தெளிவு பெற்றிருக்கிறார். அவ் ஐயத்தாலும் பின்னர் எற்பட்ட தெளிவாலும் எழுந்தவையே அவருடைய நூல்கள். அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள் இரண்டு என்பது சித்தாந்த முடிபாகும்.[12] இருபா இருபஃது, சிவஞானசித்தியார் என்பன அவ்விரு நூல்கள். இவர் இயற்றியதாக வேறு நூல்கள் அறியப்படவில்லை. ஆனால் சிவஞானபோதச் சிறப்புப் பாயிரத்தை இவர் எழுதினார் என்று கூறுவாருண்டு.[13] அவர்கள் அவ்வாறு கூறுவதற்கு காரணம் சிவஞானபோத பாண்டிப் பெருமாள் உரையில் காணப்பெறும் குறிப்பேயாகும். ஆனால் சிவஞானபோதச் சிறப்புப் பாயிரம் அருணந்தி சிவாச்சாரியார் எழுதியதாகக் கொள்வதற்கு வேறு தக்க சான்றுகள் கிடைக்கவில்லை.

சிவஞானபோதச் சிற்றுரையிலோ, மாபாடியத்திலோ சிவஞான முனிவர் பாயிரத்தை எழுதியது இன்னார் என்று குறிப்பிடப்படவில்லை. வேறு பிறர் உரைகளிலும் பாயிரம் எழுதியவர் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. மேலும் பாண்டிப்பெருமாள் உரையைப் பதிப்பித்த மயிலை திரு.சொ.சண்முகம் பிள்ளை பதிப்பில் மட்டும், "மலர்தலை யுலகின்" என்னும் இப்பாயிர மூலத்திற்கு முன் "அருணந்தி தேவர் செய்த சிறப்பு பாயிரம்" எனத் தலைப்பிடப்பட்டுள்ளது. இக் குறிப்பைக் கொண்டு சிவஞானபோதச் சிறப்புப் பாயிரத்தை அருணந்தி சிவாசாரியார் எழுதியது என்று குறிப்பிட முடியாது.

மேலும் பதிப்பாசிரியர் அவ்வாறு குறிப்பிட்டதற்குக் காரணமும் குறிக்கவில்லை. எனவே தக்க சான்றுகள் கிடைக்கும் வரை சிவஞான போதப் பாயிரம் அருணந்தி சிவாசாரியார் எழுதவில்லை என்றே கொள்ளுதல் வேண்டும்.

அருணந்தி சிவாசாரியார் எழுதிய நூல்களில் இருபா இருபஃதும், சிவஞான சித்தியாரும் சாத்திரங்கள் பதினான்கில் இடம் பெற்றவையாகும். சிவஞான சித்தியார் சைவ சித்தாந்தக் கொள்கைகளை விரிவாக எடுத்தியம்பும் நூலாகும். இந்நூலின் பெருமை உணர்ந்து சைவப் பெரியார்கள் இதற்கு உயர்வுப் பன்மை விகுதியாகிய ஆர் என்பதைச் சேர்த்துச் சிவஞான சித்தியார் என்று வழங்கினார்கள். இரு நூல்களைப் பற்றிய அறிமுகம் இனி தனித்தனியே விளக்கப் பெறுகின்றது.

## இருபா இருபஃது

அருணந்தியாரின் இரண்டு நூல்களில் இருபா இருபஃது என்னும் நூல் பாவகையானும், தொகை வகையானும் பெயரினைப் பெற்றது. ஆசிரியரால் இந்நூலிற்கு இப்பெயர் சூட்டப் பெற்றமைக்குச் சான்று இல்லை. பின்னர் பா அமைப்பால் இப்பெயர் ஏற்பட்டிருக்கிறது. பத்து வெண்பாக்களும், பத்து அகவற்பாக்களும் கொண்ட சிறு நூல் இது. மெய்கண்ட நூல்கள் பதினான்கிலும் பாவகையானும், தொகைவகையானும் பெயர் பெற்ற நூல் இது ஒன்றே ஆகும்.

## நூல் தோன்றக் காரணம்

அருணந்தி சிவாசாரியார் மெய்கண்டாரிடம் தனக்கேற்பட்ட ஐயங்களை அவ்வப்போது வினவ அவற்றிற்கு மெய்கண்டார் விடைகளை கூறித் தெளிவு படுத்தியுள்ளார். அத் தெளிவுகளால் மெய்ஞ்ஞானம் வாய்க்கப் பெற்ற அருணந்தியார் தம் ஆசிரியரின் பெருமையுணர்ந்து அவரைப் பாராட்டும் முகத்தான் இந்நூலை எழுதியுள்ளார். ஆசிரியரைப் போற்றும் வகையில் ஒவ்வொரு பாடலிலும் ஆசிரியரின் பெருமை பேசப் பெற்றுள்ளமை

இறுதி மூன்று பாடல்களில் முழுக்க முழுக்க ஆசிரியர் பெருமை பேசப் பெற்றுள்ளமை, இதனை மெய்ப்பிக்கும். எனவே மெய்கண்டார் பெருமை பேச வேண்டும் என்பதனை அடிப்படையாகக் கொண்டு தத்துவ விளக்கங்களையும் உடன் சேர்த்து நூலை அமைத்துள்ளார் எனலாம்.

மெய்கண்ட சாத்திரங்களை வரிசைப் படுத்திய பட்டியலில் சிவஞான சித்தியாருக்கு அடுத்து இருபா இருபஃது வைக்கப் பெற்றுள்ளது.[14] ஆனால் அருணந்தி சிவாசாரியார் முதலில் இருபா இருபஃது பாடிப் பின்னர்தான் சிவஞான சித்தியார் பாடியிருக்க வேண்டும். இருபா இருபஃதில் ஆசிரியரை நோக்கிக் கேட்கப் பெற்ற வினாக்கள் பலவற்றிற்குரிய விளக்கங்கள் சிவஞான சித்தியாரில் இடம் பெற்றுள்ளன.

எடுத்துக்காட்டுக்குச் சில....

**"மும்மலம் சடம் என மொழிந்தனை அம்ம!**
**மாறுகோள் கூறல் போலும்"** 4:18,19.

என்ற இருபா இருபஃதில் மும்மலங்கள் அறிவுடையனவா? அல்லவா? எனக் கேட்கப் பெற்றுள்ளது. மலங்கள் அறிவுடையன அல்ல, சடமே என்பது சைவ சித்தாந்த முடிபு.

இதனை,

**"நித்தமா யருவா யேக நிலயதா யகிலத்துக்கோர்**
**வித்துமாய் அசித்தாய்"** (சித்.சுப:143)

என்று சித்தியாரின் சுபக்கத்தில் மலங்கள் சடம் (அசித்தாய்) என்றே அருணந்தி சிவாசாரியார் விளக்கம் தந்துள்ளார்.

மேலும் இருபா இருபஃதின் 6 ஆவது பாடலில் "இல்லது இலதாய் உள்ளது உளதெனும்" என்னும் வரி தொடங்கி, "மனக்கினியாய் இனி மற்றது மொழியே" என்ற வரி வரை, "உயிர் ஒரு தன்மைத்தாகவும், அது எடுக்கும் உடல் பெருத்தும், சிறுத்தும் காணப்படக் காரணம் என்ன?" என்ற வினாப் பொருள்

அமைந்துள்ளது. இதற்குப் பதில் அப்பாடலில் இடம் பெறவில்லை. ஆனால் செய்த வினையால் உடல் பெருத்தும் சிறுத்தும் விளங்குகின்றன என்ற விடைத் தெளிவு சிவஞான சித்தியாரின் சுபக்கம் 179 ஆம் பாடலில் காணப்பெறுகிறது.

இதுபோல 8 ஆம் பாடலில் "உயிர்க்கு இறைவனே எதனையும் அறிவிப்பன் எனின் அவன் உயிர்க்குக் கருவியாவான். உயிரே தலைமையுடையதாகும். அத்தகைய உயிருக்கு ஏன் அறியும் இயல்பு இல்லை" என்ற வினாப் பொருள் அமைந்துள்ளது. இதற்கு அப்பாடலில் பதில் இல்லை. ஆனால் சிவஞான சித்தியாரில் பாடல் 280ல் (சுப.) "உயிர் தன் வயம் இன்றித் திருவருள் வயப்பட்டு நிற்பின் அனைத்தையும் காணும்" என்ற விளக்கம் அமைந்துள்ளது. இவ்வாறு இருபா இருபஃதில் உள்ள வினாக்களுக்குத் தெளிந்த விடை சித்தியாரில் காணப்பெறுவதை நோக்கும் போது, இருபா இருபஃது முதலில் எழுதப்பெற்று ஆசிரியரால் ஐயங்களுக்குத் தெளிவு படுத்தப் பெற்ற பின் சித்தியார் எழுதப் பெற்றிருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது. சாத்திரப் பகுப்பில் இருபா இருபஃது சித்தியாருக்குப் பின்னர் வைக்கப் பெற்றமைக்குச் சிவஞான போதத்தின் வழிநூல் சிவஞான சித்தியாராக இருப்பதால் முதல் நூலினோடு வழிநூல் ஒருசேர வைக்கவேண்டும் என்பது காரணமாக இருக்கவேண்டும்.

## இருபா இருபஃதின் நூலமைப்பு

இந்நூலில் காணப்பெறுகின்ற 20 பாடல்களும் அந்தாதி முறையில் அமைந்துள்ளன. பாடல்கள், மெய்கண்டாரின் பெருமையுடன், ஆசிரியர் தம் மனத்தகத்து உண்டாகிய தத்துவக் கருத்துகளின் ஐயங்கள் சிலவற்றைத் தம் ஞானாசிரியரிடம் வினவுவதாக-அவற்றிற்கு அவர் விடை வழங்குவதாக அமைந்துள்ளன. இருப்பினும் இவ்வகையில் முழுமையாக அமைந்த பாடல் 2ஆம் பாடல் மட்டுமே. மற்றப்பாடல்களில் வெண்பா யாப்பில் உள்ள 2, 3, 5, 7, 9, 11, 13, 15, 17 ஆகிய வரிசை எண்களைப் பெற்ற ஒன்பது பாடல்களும் வினா அமைப்பில் தான் காணப்பெறுகின்றன. விடை அவற்றில் இல்லை. ஆசிரிய யாப்பில் அமைந்துள்ள பாடல்களில் 4, 6, 8, 10, 12, 14, 16 ஆகிய வரிசை எண்களைக் கொண்ட ஏழு பாடல்கள் வினா முதலில் அமைய,

அவ்வினாவிற்கு விடை அடுத்து அமைய, அவ்விடையில் மேலும் ஓர் வினா அமைய அதற்கு விடையமைய இவ்வாறு வினா-விடை தொடர்ந்தமைய இறுதியில் வினாவோடு முடிகின்றன. எனவே இவ்வமைப்பைக் காணுகின்றபோது ஆசிரியரின் ஐயங்களுக்காகவே இந்நூலின் தத்துவப் பகுதி அமைந்தது போலும் என்று எண்ணத் தோன்றுகிறது.

இருபது பாடல்களிலும் வினாவாகவும், விடையாகவும் அமைந்த தத்துவப் பொருள்களை வகுத்துப் பார்த்தால், முதற்பாடல் குரு வணக்கமாகவும், 2, 12, 17 ஆகிய மூன்று பாடல்கள் இறை பற்றியனவாகவும், 3, 5, 6, 7, 8, 9, 11, 13 ஆகிய எட்டுப் பாடல்கள் உயிர் பற்றியனவாகவும், 4, 10, 14, 15, 16 ஆகிய ஐந்து பாடல்கள் தளை பற்றியனவாகவும், 18, 19, 20 ஆகிய மூன்று பாடல்கள் ஆசிரியரின் அருளைப் போற்றி நினைக்கும் பாடல்களாகவும் அமைந்துள்ளன எனலாம்.

இந்நூலின் தனிநிலை என்று பார்க்கும் போது ஆசிரியர் மெய்கண்டாரை இறைவனாகக் கருதிப் போற்றும் பாங்குக் குறிப்பிடத் தக்கதாக அமைகிறது. "கண்ணுதலுங் கண்டக் கறையும் கரந்தருளி"(1), "ஊரும் பேரும் உருவுங்கொண்டென் ஊரும் பேரும் உருவுங் கொடுத்த" (பா:2), "பெண்ணையாளும் வெண்ணெய் மெய்ய" (பா:8), "பெருமான் திருவெண்ணெய் நல்லூர் சுவேதவனத்தான் உரு என்ன வந்தெடுத்தானுற்று" (பா:19) என ஆசிரியர் மெய்கண்டாரைச் சிவன் எனவே கருதுதல் குறிப்பிடத் தக்கதாகும்.

## உரைகளும் - பதிப்பும்

இருபா இருபஃதுக்குச் சீர்காழித் தத்துவராயர், மதுரை சிவப்பிரகாசர், நமச்சிவாயத் தம்பிரான், ஆகியோர்களின் உரைகள் பழைய உரைகளாகக் கருதப்படுகின்றன. திருவாடுதுறை ஆதீன வெளியீடாக 1955-ல் தே.ஆ. ஸ்ரீநிவாசாசாரியரின் விரிவுக் கட்டுரை வெளியிடப் பெற்றுள்ளது. அண்மைக் காலத்தில் கு.சுந்தரமூர்த்தியின் விளக்க உரை திருப்பனந்தாள் மடத்து வெளியீடாக வெளியிடப் பெற்றுள்ளது. தருமபுர ஆதீனத்தின் வெளியீடாக உரைநடையும் வெளிவந்துள்ளது. இப்பொழுது

கிடைத்திருக்கும் பதிப்புகளில் மிகவும் தொன்மையனது காஞ்சி நாகலிங்க முதலியாரால் கி.பி.1897ஆம் ஆண்டில் அச்சிடப்பட்ட மெய்கண்ட சாத்திரம் மூலமும் உரையும் என்ற வெளியீடாகும். அதன் இரண்டாம் பதிப்பு கி.பி.1905-ல் வெளிவந்துள்ளது. அப்பதிப்பிற்குப் பொருள் உதவி செய்த பெருமை பாண்டித்துரைத் தேவர் அவர்களைச் சாரும். தே.ஆ. ஸ்ரீநிவாசாசாரியரின் விரிவுக்கட்டுரை ஆய்வுக்குதவும் வகையில் விரிவாக எழுதப்பெற்றுள்ளது.

## சிவஞான சித்தியார்

சிவஞான போதத்திற்குச் செய்யுள் வடிவில் விளக்கமாக அமைந்தது சிவஞான சித்தியார் ஆகும். சித்தியார் இரு பகுதிகளை உடையது ; முதற்பகுதி பரபக்கம் எனவும், இரண்டாம் பகுதி சுபக்கம் எனவும் அமைக்கப்பெற்றுள்ளது. நூலிற்குச் சிவஞான சித்தி என்ற பெயரை ஆசிரியரே அமைத்துள்ளார்.

**"எம் குருநாதன் கொண்டு,**
**தீதகல எமக்களித்த ஞானநூலைத்**
**தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தியென்றே"** [15]

என்பது ஆசிரியரின் வாக்கு. ஆர் விகுதி பின்னர் அறிஞர்களால் பெருமை கருதிச் சேர்க்கப் பெற்றது.

சிவஞான சித்தி என்று தம் நூலிற்குப் பெயர் சூட்டிய ஆசிரியர் தம் நூலை இரு பகுதிகளாகப் பிரித்துப் பாடியிருக்கிறார். முதற்பகுதியில் விநாயகர் காப்பாக முதற்பாடலை அமைத்துப் பின் மங்கல வாழ்த்தாகப் பத்துப் பாடல்களை அமைத்துப் பின் 14 சமயங்களைப் பற்றிய கொள்கை, மறுதலைகளை அமைத்து மொத்தம் 301 பாடல்களை முதற்பகுதியில் அமைத்துள்ளார். அடுத்த பகுதியைத் தொடங்கும் முன் மீண்டும் விநாயகர் காப்புப் பாடலை அமைத்துப் பின் 5 பாடல்களைப் பாயிரமாக அமைத்துள்ளார். பகுதி தோறும் கடவுள் வாழ்த்து அமைவது நூல்களின் இயல்பு என்றாலும் ஆசிரியர் நூலில் காப்புச் செய்யுளைப் பகுதி தோறும் அமைத்திருப்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். அதன் பின்னர் அளவை இலக்கணத்தைப்

பதினான்கு பாடல்களில் கூறிப் பின் பன்னிரண்டு சூத்திரங்களுக்குரிய நிலையில் 308 பாடல்களை அமைத்துள்ளார்.

## நூல் தோன்றக் காரணம்

இந்நூலை இயற்றுதலுக்குரிய காரணத்தை இரு பகுதிகளிலும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். முதற்பகுதியைப் பாடியதற்குக் காரணம் பரசமயிகள் கொள்ளும் நூல்கள் அனைத்தும் பசுநூல்கள் ஆதலால் அவைகளை ஏற்றோர் முத்தியடைய மாட்டார்கள். எனவே மெய்கண்டார் கூறிய ஞான நூலை–அஞ்ஞானம் நீங்க அருளிச் செய்த நூலை உலகோர் கொள்ளவே இந்நூலைப் பகர்ந்தேன் என 8, 9 ஆம் எண்ணுள்ள நூற் சிறப்புப் பாடல்களில் குறிப்பிடுகின்றார். எனவே முதற் பகுதியை ஆசிரியர் பாடுவதற்குக் காரணம் பரசமயிகள் கூறும் கருத்துக்களை மறுக்கவே என்பது வெளிப்படுகிறது. ஆதலால்தான் அப்பகுதி பரபக்கம் எனப்பட்டது. பரபக்கம் என்பதற்கு "விரோதம்"[16] "பிறர் நிலை சொல்லும் பகுதி"[17] என்பன பொருள்களாகும்.

அடுத்த பகுதியை தாம் பாடுவதற்குரிய காரணத்தை இரு பாடல்களில் குறிப்பிடுகின்றார். மெய்கண்ட தேவர் அருளிச் செய்த சிவஞான போத நூலை முதல் நூலாகக் கொண்டு, சைவத்தின் திறத்தினை தெரிவிக்கலுற்றேன் என்றும் (பா:304), வீடுபெற ஆசையுடைய சன்மார்க்கருக்கு அவனின் புண்டரீகத் தாள் சேரும் முறையினைக் கூறலுற்றேன் என்றும் (பா:305) சுபக்கம் பாடுவதற்குரிய காரணத்தை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய காரணங்களைக் கொண்டு பார்க்கும் பொழுது இப்பகுதி சைவசமயக் கருத்துக்களைக் கூறுவது என்பது தெற்றெனப் புலப்படுகிறது. எனவேதான் இப்பகுதி சுபக்கம் எனப்பட்டது. சுபக்கம் என்பது "தன் கொள்கை" என்ற பொருளை உடையது.

ஆசிரியர் மெய்கண்டாரின் ஞானநூலாம் சிவஞான போதத்தைத் தேர்ந்து சிவஞான சித்தியராகத் தந்தாலும் முதற்பகுதியில் பிறசமயக் கருத்துகளையும், இரண்டாம் பகுதியில் சைவ சமயக் கருத்துகளையும் கூறியுள்ளார் என்பது முடிந்த முடிபாகும்.

## நூலமைப்பு

தம் நூலாகிய சிவஞான சித்தி,மின்னமர் பொழில் சூழ் வெண்ணெய் மேவி வாழ் மெய்கண்டானூல் வழி வந்தது என்பதனைக் கூறி[18] தம்மால் கூறப்பெறும் தத்துவக்கருத்துகள் எம்முறையில் கூறப்பெறுகின்றன என்பதையும் வகுத்துக் காட்டியுள்ளார்.

> "இறைவனையு மிறைவனா லியம்பு நூலும்
> ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டும் செய்தி
> முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லாம்
> மூதுலகில் எமக்கியன்ற முயற்சியாலே
> சிறையுலவும் புனலிலவித் தோன்றும் பேய்த்தேர்ச்
> செய்கைபோ லுண்டாய பொய்கொள் மார்க்கத்
> துறைபலவும் கடாவிடையாற் சொல்லிப் போக்கிற்
> துகடீர இந்நூ லிற் சொல்லு கிற்பாம்"[19]

என்ற பாடல் அவர் தம்நூலைப் பகுத்துக் கொண்ட முறைமையினைக் காட்டுகிறது. தீதகல குருநாதன் தமக்களித்த ஞான நூலாம் சிவஞான போதத்தினைக் கொண்டு சிவஞான சித்தி எனும் பெயரில் நூலைத் தேர்ந்துரைப்பன் என முதற்பாடலில் கூறிய ஆசிரியர், இப்பாடலில் தம் தேர்ந்துரைக்கும் பாங்கினை வகைப்படுத்திக் காட்டியிருப்பது வேறுஎவரிடத்தும் காணாத முறைமையாகும். தம் நூல் எப்பொருள்களை வகுத்துக் காட்டுகிறது என்பதை நூலின் முதலிலேயே விளக்கி விட்டால் நூல் பயில்வார்க்கு அது எளிமையாக இருக்கும் என ஆசிரியர் நினைத்த பாங்கு அவர்தம் ஆசிரியத் தொழிலால் ஏற்பட்ட பயிற்சியாகும். சகலாகம பண்டிதராய் விளங்கி மாணவர்கள் பலருக்குப் பாடம் சொல்லிய பயிற்சிதான் இத்தகைய ஒரு பாங்கினை அவருக்கு ஏற்படுத்தியிருக்கிறது. சிவஞான சித்தியார் இவ்வமைப்பின் படியேதான் அமைந்துள்ளது.

இப்பாடலின் பொருள்

நீர்போல் தோன்றி, பருகுவதற்கு அணுகும்போது பொய்யாய் மறையும் பேய்த்தேர் போல உள்ள உலகாயதம் முதலிய சமயக் கோட்பாடுகளை வினா விடையால் சொல்லி மறுப்போம். மறுத்தபின் ஈண்டைக்கு இறைவன் ஆவான் இவன் என்பதை விளக்குவோம். அவனால் மக்கட்குக் கொடுக்கப்பட்ட உண்மை நூல்கள் (பிராமண நூல்கள்) இவை என்பதைக் கூறுவோம். அடுத்துப் பொருள் உண்மைகளைக் காட்டும் அளவைகளையும், பொருள்களை வேறுபடுத்திக் காட்டும் இலக்கணங்களையும், பிறப்பின் நீங்கி வீடுபேறு எய்துவதற்குரிய கருவிகளையும், அவற்றால் எய்தும் பயன்களையும், பிறப்பு, வீடு எல்லாவற்றையும் இந்நூலின் கண் விளக்குவோம் என்பது இப்பாடலின் பொருளாகும்.

1. "பொய் கொள் மார்க்கத் துறை பலவும் கடாவிடையாற் சொல்லிப் போக்கி" என்பதற்கிணங்கச் சிவஞான சித்தியாரின் பரபக்கத்தில் உலகாயதம் ஆருகதம், மீமாஞ்சை, ஏகான்ம வாதம், சாங்கியம், பாஞ்சராத்திரம் ஆகிய மதங்கள் வினா விடைகளால் மறுக்கப் பெற்று அவற்றின் கொள்கைகள் நீக்கப்பெற்றன.

2. இறைவனையும், இறைவன் இயம்பு நூலையும் கூறுவோம் என்பதற்கிணங்கச் சுபக்கத்தில் இருபத்தோராம் பாடல் முதல் முப்பத்தொன்பதாம் பாடல்வரை இறைவனாகிய சிவனின் திறத்தையும், இருநூற்றறுபத்தைந்தாம் பாடல் முதல் இருநூற்றறுபத்தியேழாம் பாடல் வரை இறைவனால் இயம்பப் பெற்ற நூல்களையும் குறிப்பிடுகின்றார்.

3. பொருள் உண்மைகளைக் காட்டும் அளவைகளைக் கூறுவாம் என்பதற்கிணங்க சுபக்கத்தில் 7 ஆம் பாடல் முதல் 20 ஆம் பாடல் வரை பதினான்கு பாடல்களில் அளவைகளைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகிறார்.

4. பொருளியல்பு கூறுவாம் என்பதற்கிணங்க ஆன்ம இலக்கணங்களை 196 முதல் 232 வரை உள்ள பாடல்களிலும், உடம்பு, உலகம் இவற்றின் இலக்கணங்களை முறையே 137 முதல் 140 பாடல்கள் வரையிலும், 144 முதல் 163 பாடல்கள் வரையிலும்,

தளை இலக்கணங்களைப் பற்றி 170 முதல் 175 பாடல்கள் வரையிலும் கூறியுள்ளார்.

5. கருவிவகைகளைப் பற்றிக் கூறுவாம் என்பதற்கிணங்கச் சுபக்கத்தில் 270 ஆம் பாடல் முதல் 275 ஆம் பாடல் வரையிலும் கருவிகள் வரையறை செய்யப் பெற்றுள்ளன.

6. பிறப்பு முத்தி கூறுவாம் என்பதற்கிணங்கப் பிறப்பின் முறைமை பற்றி 176 முதல் 180 பாடல்கள் வரையிலும், முத்தி பற்றி 264 ஆம் பாடலிலும், முத்தி பெற்றாரைப் பற்றி 290 முதல் 311 ஆம் பாடல் வரையிலும் கூறித் தான் வகுத்துக்கொண்ட பொருள் அமைப்புகளை நிறைவு படுத்துகிறார். இத்தகைய பொருள் அமைப்புகள் முதல்நூலில் கூறிய பொருள்களின் விளக்கமாக - விரிவாக அமைந்துள்ளன என்பது மேற்கூறப்பெற்ற பொருட் பாகுபாடுகளிலிருந்து தெரியப்படும்.

மெய்கண்டார் 12 சூத்திரங்களில் எவ்வெப் பொருள்களை விளக்கியுள்ளாரோ அவ்வப் பொருள்களைத் தம் சிவஞான சித்தியாரின் சுபக்கப் பன்னிரண்டு சூத்திரங்களில் அருணந்தி சிவாசாரியார் கூறியுள்ளார். சூத்திரத்தற்கு விளக்கம் கூறும்போதுதான், தமக்கு வேத ஆகமங்களிலிருந்து கிடைத்த பயிற்சியின் காரணத்தால் கருத்துகளை விரித்துப் பொருள் விளக்கம் தருகின்றார். உதாரணமாகச் சிவஞான போதத்தில் முதல் சூத்திரம்:

**"அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்**
**தோற்றிய திதியே, ஒடுங்கி மலத்துளதாம்**
**அந்தம் ஆதி என்மனார் புலவர்"**

என்று அழியதற்குக் காரணமாய் உள்ள முதலையே முடிபாக உடைத்து இவ்வுலகம் என்பதனை விளக்குகிறது. இக்கருத்தினையே சிவஞான சித்தியாரில் முதல் சூத்திரத்தின் முதல் விருத்தமாகப் பாடியுள்ளார் அருணந்தி சிவாசாரியார்.

**"ஒருவனோடு ஒருத்தி என்று**
**உரைத்திடும் உலகம் எல்லாம்**

வருமுறை வந்து நின்று
போவது ஆத லாலே
தருபவன் ஒருவன் வேண்டும்
தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த
சித்துஉரு மன்னி நின்றே"

என்பது அவ்விருத்தமாகும். இத் தலை விருத்தம் இப்பிரபஞ்சத்திற்கு ஒரு கர்த்தா உண்டு என்றும், அந்தக் கர்த்தா சங்கார கர்த்தா என்றும் உணர்த்துகிறது.[20] எனவே மெய்கண்டார் கூறிய கருத்தையே அருணந்தி சிவாசாரியாரும் விருத்தமாகக் கூறியுள்ளார் என்பது தெளிவாகிறது. இவ்வாறு மெய்கண்டார் கூறிய கருத்துகளைத் தம் 328 விருத்தங்களில் கூறியுள்ளார். மெய்கண்டாரின் 12 சூத்திரங்கள் எவ்வாறு பாகுபடுத்தப் பெற்றனவோ அதுபோல அருணந்தி சிவாசாரியாரின் 12 சூத்திரங்களைக் கீழ்க்கண்டவாறு பாகுபடுத்தலாம்.

1. சுபக்கத்தில் முதல் 5 சூத்திரங்கள் பதி, பசு, பாசம் என்ற மூன்றின் பொது இயல்பு என்னும் தடத்த இயல்புகளைக் கூறுகின்றன.

2. ஆறாம் சூத்திரம் பதியின் தன்னியல்பு இலக்கணமாகிய சிறப்பு இலக்கணம் கூறுகிறது.

3. ஏழாம் சூத்திரம் ஆன்மாவின் சிறப்பு இலக்கணம் கூறுகிறது.

4. எட்டாம் சூத்திரம் உயிரோடு உடனாய் இருந்து வரும் திருவருளாகிய சிவஞானத்தினை உணரும் முறைமை கூறுகிறது.

5. ஒன்பதாம் சூத்திரம் முதல்வனாகிய ஞேயத்தைச் சிவஞானத்தால் ஒருவன் தன் அறிவின் கண் காணுமாறு கூறுகிறது.

6. பத்தாம் சூத்திரம் பிறப்பு நிலையில் இறைவன் உயிரின் பின்னாகி-மறைந்து உயிராக நின்றாற்போல - வீட்டு நிலையில் உயிர் இறைவனை முன்னிட்டு அவனோடு ஒன்றி முதல்வனேயாக நிற்றல் வேண்டும் என்று கூறுகிறது.

7. பதினொன்றாம் சூத்திரம் உயிர் முதல்வன் திருவடி எனப்படும் பேரின்ப வெள்ளத்தில் அழுந்தி நிற்குமாறு கூறுகிறது.

8. பன்னிரண்டாம் சூத்திரம் இறைவனை அணைந்தோர் உலகமுகப்படும் போதும் தம் அறிவு, விழைவு, செயல்களை முதல்வனையே புலப்படக் கொண்டு நிற்கும் வகையைக் கூறுகிறது.

இவ்வாறு பரபக்கத்தின் மூலம் பிறமதக் கொள்கைகளை மறுத்து, சுபக்கத்தில் தம் கொள்கைகளாகிய சைவக் கொள்கைகளை வகைப்படுத்தி - இருபா இருபஃது மூலம் தளைவிளக்கங்களை வினா - விடையில் அமைத்து அருணந்தி சிவாசாரியார் சைவ சித்தாந்தக் கொள்கைகளைத் தம் நூல்களில் விளக்கியுள்ளார்.

## *பாடல் அமைப்பு*

### பரபக்கம்

விநாயகர் காப்பு : 1 பாடல்
மங்கல வாழ்த்து : 10 பாடல்கள்

| | மதம் | மறுதலை |
|---|---|---|
| உலகாயதன் | 21 | 31 |
| சௌத்திராந்திகன் | 31 | 40 |
| யோகசாரன் | 1 | 2 |
| மாத்தியமிகன் | 1 | 2 |
| வைபாடிகன் | 1 | 1 |
| நிகண்டவாதி | 8 | 14 |
| ஆசீவகன் | 10 | 6 |
| பட்டாச்சாரியன் | 13 | 10 |
| பிரபாகரன் | 2 | 2 |
| சத்தப்பிரமவாதி | 12 | 8 |
| பாற்கரியன் | 2 | 5 |
| நிரீச்சுரசாங்கியன் | 1 | 3 |
| பாஞ்சராத்திரி | 7 | 31 |
| மாயாவாதி | 1 | 1 |

ஆக 301 விருத்தப் பாடல்கள் அமைந்துள்ளன

சுபக்கம்

| | | |
|---|---|---|
| காப்புச் செய்யுள் | - | 1 |
| மங்கல வாழ்த்து | - | 5 |
| அளவை | - | 14 |
| முதற்சூத்திரம் | - | 70 |
| இரண்டாம் சூத்திரம் | - | 96 |
| மூன்றாம் சூத்திரம் | - | 4 |
| நான்காம் சூத்திரம் | - | 40 |
| ஐந்தாம் சூத்திரம் | - | 9 |
| ஆறாம் சூத்திரம் | - | 9 |
| ஏழாம் சூத்திரம் | - | 4 |
| எட்டாம் சூத்திரம் | - | 39 |
| ஒன்பதாம் சூத்திரம் | - | 12 |
| பத்தாம் சூத்திரம் | - | 6 |
| பதினோராம் சூத்திரம் | - | 12 |
| பன்னிரண்டாம் சூத்திரம் | - | 7 |

ஆக 328 விருத்தப்பாக்களைக் கொண்டுள்ளது.

**உரைகளும் பதிப்பும்**

சிவஞான சித்தியாரின் இருபகுதிக்கும் தனித்தனியே உரைகள் எழுதப் பெற்றிருக்கின்றன. பரபக்கத்திற்குத் திருவொற்றியூர் ஸ்ரீஞானப் பிரகாசரும், அவர் மாணவர் திருவொற்றியூர் ஸ்ரீதத்துவப்பிரகாசரும், திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீவேலப்ப பண்டாரமும் உரை எழுதியுள்ளனர். இதில் ஞானப் பிரகாசர் உரை மிக விரிந்தது. தத்துவப் பிரகாசர் உரையில் பதவுரையே காணப் பெறுகிறது. சரஸ்வதி மஹாலில் ஸ்ரீஅம்பலவாண முனிவர் எழுதிய உரை ஏட்டுச்சுவடியாக உள்ளது. அதன் காலம் கி.பி.1842. ஏடுகள் பழுதில்லாமல் உள்ளன. இதில் சுபக்கத்திற்கு மறைஞான தேசிகர் உரை உள்ளது. தத்துவப் பிரகாசர் உரையோடு திருவாவடுதுறைஆதீனத்தாரால் 1955ல் உரைநடை வெளியிடப் பெற்றுள்ளது. இப்பதிப்பு மிகவும் இவ்வாய்விற்குப் பயன்பட்டது. பிழையின்றியும், திருத்தமாகவும் இப்பதிப்பு அமைந்துள்ளது. தத்துவப் பிரகாசர் உரையோடு மயிலை அழகப்ப முதலியாரால் சாதாரண வருடத்தில்(1880ல்) ஓர் பதிப்பு

வெளிவந்துள்ளது. இதுவே கிடைத்திருக்கும் பதிப்புகளில் தொன்மையானதாகத் தெரிகிறது. உரையாசிரியர் ஸ்ரீ வேலப்ப பண்டாரம் அவர்களின் காலம் கி.பி.1678[21] என்பர். ஸ்ரீதத்துவப் பிரகாசரும், ஞானப்பிரகாசரும் வேலப்ப பண்டாரத்திற்கு முற்பட்டவர்கள். ஆயின் அவர்கள் வரலாறு சரிவரத் தெரிந்தில. எனவே ஸ்ரீவேலப்ப பண்டாரத்திற்கு முற்பட்டே பரபக்க உரை எழுந்தமையால் 17ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டே உரை எழுதிருந்தமை புலனாகிறது.

சுபக்கத்திற்கு அறுவர் உரை எழுதியுள்ளனர். நிரம்ப அழகிய தேசிகர், மறைஞான தேசிகர், சிவாக்கிர யோகியார், ஞானப்பிரகாசர், சிவஞான சுவாமிகள், சுப்பிரமணிய தேசிகர் ஆகியோர் ஆவர். இவர்களில் நிரம்ப அழகிய தேசிகர் காலத்தால் முற்பட்டவர். அவரின் காலம் 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதி.[22] சித்தாந்தச் சாத்திரங்களை 1866ல் மதுரை நாயகம்பிள்ளை என்பவர் வெளியிட்டுள்ளார் எனத் தெரிகிறது.[23] அப்பதிப்பு கிடைக்கவில்லை. 1895ல் சுபக்கத்திற்கு அறுவர் உரை சொ.சண்முகசுந்தர முதலியார் அவர்களால் பதிப்பித்து வெளியிடப்பெற்றது. அதுவே இப்பொழுது கிடைக்கும் பதிப்புகளில் தொன்மையானது. கி.பி.1914ல் தூத்துக்குடி பொ.முத்தையா பிள்ளையின் சிறந்த பதிப்பு வெளிவந்துள்ளது. கி.பி.1944ல் சைவ சித்தாந்த சமாஜம் பதினான்கு சாத்திர மூலமும் உரையும் பதிப்பித்து வெளியிட்டது. பின்னர் வந்த பதிப்புகளில் இலங்கை மு.திருவிளங்கம் பிள்ளை பதிப்பு (கி.பி.1925) குறிப்பிடத் தக்கதாகும். தெளிவான விளக்கங்களைக் கொண்டு விளங்குகிறது. பொ.முத்தையா பிள்ளை பதிப்பும், மு.திருவிளங்கம் பதிப்பும் சுபக்கப் பதிப்புகளில் ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்களில் குறிப்பிடத் தக்கனவாகும். மற்றப்பதிப்புகள், இணைப்பு 2ல் குறிக்கப் பெற்றுள்ளன.

### காப்புச் செய்யுள்

சிவஞான சித்தியாரின் கருத்துகளில் சில குறிப்படத்தக்க பகுதிகள் உள்ளன. அவற்றுள் ஒன்று காப்புச் செய்யுளாகும். பரபக்கத்திலும், சுபக்கத்திலும் காப்புச் செய்யுள் காணப் பெறுகிறது. இரண்டு இடத்திலும் ஒரே காப்புச் செய்யுள் காணப்பெறுகிறது. கி.பி.9 ஆம் நூற்றாண்டில் நூல் இனிது முடிய விநாயகக் கடவுள் மீது கடவுள் வாழ்த்துப் பாடும் மரபு வழக்கத்தில் இருந்திருக்கிறது.[24]

அந்நூற்றாண்டில் தோன்றிய நந்திக் கலம்பகம் தான் முதன் முதலில் கடவுள் வாழ்த்தினைப் பெற்ற நூல் என்று கூறுவர்.[25] அம்முறை கந்தபுராணக் காலத்தில் விநாயகர் மீது நூல் இனிது முடியக் காப்புச் செய்யுள் பாடும் மரபாக மாற்றம் பெற்றது. அதாவது வாழ்த்து, காப்பாக மாறிற்று. அத்துடன் இத்தகு காப்புக்குப் பின்னர் வாழ்த்துப் பாடல்களும் அமைந்தன. அன்று தொடங்கிய அம் மரபு இன்றுவரை தொடர்ந்து வருகிறது.

சைவ நூல்கள் மட்டுமின்றி வைணவ நூல்களிலும் விநாயகர் காப்பு வணக்கம் காணப்பெறுகிறது. வில்லிபுத்தூரார் பாரதத்தை இங்குச் சுட்டலாம். இந்த அடிப்படையில் சைவ சித்தாந்தத் தத்துவ நூல்களும் காப்புச் செய்யுளை - கடவுள் வாழ்த்துகளைப் பெற்று இலங்குகின்றன. தத்துவ நூல்களில் காலத்தால் முற்பட்டவை ஆகிய திருவுந்தியார், திருக்களிற்றுப்படியாரில் நூலின் செய்திகள் மட்டும் காணப் பெறுகின்றன. வாழ்த்துகள் இல்லை. சிவஞான போதத்தில் பொல்லாப் பிள்ளையாரின் மேல் பாடப்பெற்ற பாடல் முதற்கண் காணப்பெறுகிறது. இது காப்புச் செய்யுள் என்பார் சிவஞான முனிவர்.[26] அதன் வழி நூலாகிய சிவஞான சித்தியாரில் பரபக்கத்தில் காப்புச் செய்யுள் ஒன்றும், கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஐந்துமாக (இரு பகுதிகளும்) ஆறு பாடல்கள் காணப்பெறுகின்றன. சுபக்கத்தில் காப்புச் செய்யுள் 1ம், வாழ்த்துச் செய்யுள் நான்கும் காணப்பெறுகின்றன.

காப்புச் செய்யுள் மட்டும் ஒரு பாடலே இரு பகுதிகளிலும் அமைய வாழ்த்துச் செய்யுள்கள் வேறுவேறு செய்யப்பெற்றுள்ளன. இதனைப் பார்க்கும் போது வாழ்த்து வேறு வேறு பாடி காப்புச் செய்யுளை வேறு வேறு பாடாது ஆசிரியர் ஏன் விடுத்தார்? என்ற ஐயம் ஏற்படுகிறது. ஆசிரியர் நூலை இருபகுதிகளாகப் பிரித்தாலும் இருவேறு நூல்களாக அதனைக் கருதவில்லை. எனவே தொடக்கத்தில் காப்புச் செய்யுளையே எழுதி - பகுதி தோறும் வாழ்த்துச் செய்யுள் எழுதும் இலக்கிய மரபுப்படி வாழ்த்துக்களை இரு பகுதிகளிலும் பாடியுள்ளார். பின்னர் வந்தவர்கள் தான் முன் பகுதியில் இருந்த காப்புச் செய்யுளைப் பின் பகுதியில் சேர்த்திருக்கிறார்கள். ஆசிரியர் பின் பகுதியிலும் காப்பு எழுத வேண்டும் என எண்ணியிருப்பின் வாழ்த்து வேறு வேறு எழுதியது போல - காப்பும் எழுதியிருப்பார். எனவே காப்புச் செய்யுளைப் பின்பகுதியில் சேர்த்தவர்கள் பதிப்பாளர்களே ஆவர்.

## அவையடக்கம்

பரபக்கத்திலும் சுபக்கத்திலும் அவையடக்கப் பாடல்கள் அமைந்துள்ளன. அவையடக்கம் என்பது இலக்கிய இலக்கண நூல்களில் இடம்பெறும் ஓர் உறுப்பு ஆகும். அவையடக்கத்தை நூலாசிரியர்கள் வாழ்த்து/வணக்கம் என்ற முதற்பகுதிக்கு அடுத்து அமைத்துள்ளனர். சிவஞான சித்தியாரிலும், நூலாசிரியர் அருணந்தி சிவாசாரியார் தம் அவையடக்கப் பாடலை நூலில் காப்பு, வாழ்த்துச் செய்யுட்களை அடுத்து வைத்திருக்கிறார்.

அவையடக்கம் என்ற சொல்லிற்கு இரு பொருள்களை ஆசிரியர்கள் கையாண்டுள்ளனர். நச்சினார்க்கினியர்[27] "அவைக்குத் தாம் அடங்கிக் கூறுவது" என்று கூறுவார். சி.கே.சுப்பிரமணிய முதலியார்[28] அவையைத் தன்னுள்ளே அடக்குதல், அதாவது "தன்னைத் தாழ்த்துதலால் அவை அடங்கும் என்பது" என்று கூறி முன்னவர் கருத்தை வலியுறுத்துவார். யாழ்ப்பாணம் பருத்தித்துறை ச.சுப்பிரமணிய சாஸ்திரிகள்[29] "அவையடக்கம் என்பது அவைக்கு அடங்குதலை உணர்த்தும் பகுதி என விரியும்" என்று கூறி (அவை-பெரியோர் குழு; அடக்கம் - தாழ்மை) "கடவுளை வாழ்த்தியபின் கற்றுணர்ந்த பெரியோரைப் பணிந்து தாம் இந்நூல் செய்யப் புகுந்த காரண முதலியவற்றைக் கூறியே எடுத்துக்கொண்ட பொருளைக் கூறத் தொடங்குதல் முறைமையாகலான் இது கடவுள் வாழ்த்தின் பின் வைக்கப்பெற்றது" என்று வைப்புமுறையும் கூறுவர். எனவே இத்தகைய உரையாசிரியர்களின் விளக்கத்தின்படி அவையடக்கம் என்பது அவைக்குத் தாம் தாழ்ந்து வணங்கிக் கூறும் பகுதி எனப்படும்.

ஆயின் சில உரையாசிரியர்கள் அவையடக்கம் என்பது "அவையத்தார்க்கு மனவெறுப்பு முதலியன தோன்றாமல் அன்னாரை அடங்குமாறு செய்தல் எனினுமாம்" என்று பொருள் கொள்கின்றனர்.[30] அதாவது அவையத்தாரை அடக்குதல் என்பது அவர்கள் கொள்ளும் பொருளாகும். இத்தகைய இரு பொருள்களில் "அவையத்தார்க்குத் தாம் அடங்கிக் கூறும் வணக்கமே அவையடக்கம் கூறும் முறையாகும்" என்பதைக் கொள்ளுதலே நன்று. ஏனெனின் அத்தகு நிலையில் தான் கம்பர், சேக்கிழார், வீரமாமுனிவர், கச்சியப்பர், அருணந்தி சிவாசாரியார் போன்றவர்கள் தங்களைத் தாழ்த்தி அடையடக்கம் கூறியுள்ளனர்.

இருபா இருபஃதில் அவையடக்கப் பாடல் இல்லை. அந்நூல் வினா - விடை அமைப்பில் அமைந்திருப்பதால் அமைக்கப்படவில்லை போலும். வாழ்த்துப் பகுதியும் இல்லை. மெய்கண்டாருக்குப் பெருமை கூறும் பாடல் ஒன்றே காணப்பெறுகின்றது. சிவஞான சித்தியாரில் மூன்று பாடல்கள் அடையடக்கப் பாடல்களாக அமைந்துள்ளன. அவை மூன்றும் ஒரே இடத்தில் அமையவில்லை. சித்தியாரின் முதல் பிரிவான பரபக்கத்திலும் இரண்டு பாடல்களும் - மற்றொரு பிரிவான சுபக்கத்தில் ஒரு பாடலும் அமைந்திருக்கின்றன. ஒரே நூலில் பல பகுதிகள் இடம் பெற்றதால் பகுதி தோறும் வாழ்த்து/வணக்கப் பாடல்கள் தான் நூலாசிரியர்களால் பாடப்பெறும். உதாரணமாக கம்ப இராமாயணம், பாரதம் ஆகியற்றைக் கூறலாம். ஆனால் பகுதி தோறும் அவையடக்கப் பாடலை அமைத்து எந்த நூலாசிரியரும் பாடவில்லை. அருணந்தி சிவாசாரியார் தம் சித்தியாரில் பகுதிதோறும் அவையடக்கத்தை அமைத்துள்ளார்.

பரபக்கத்தில் அமைந்திருக்கின்ற இரு அவையடக்கப் பாடல்களிலும் உவமை அமைந்துள்ளது. சுபக்கத்தில் அமைந்துள்ள பாடலில் தத்துவம் அமைந்துள்ளது. பரபக்கம் அருணந்தி சிவாசாரியாரின் சொந்தக் கருத்துகளை - திறமையைக் கொண்டது என்றதால் அடையடக்கப் பாடல் இரண்டும் - மற்ற நூல்களில் இடம் பெற்றிருப்பதுபோல் தம்மை மிகவும் தாழ்த்திக்கொள்ளும் பாங்கினைப் பெற்றுள்ளன. சுபக்கம் முதல்நூலாசிரியர் மெய்கண்டாரின் வழியில் கூறப்பெறுவதால் - அதாவது மெய்கண்டாரின் கருத்துகளை விரித்துக் கூறுவதால் - அவரைப் போலவே தத்துவக் கருத்துகளை உள்ளடக்கி - பிறருக்கு நகையை உண்டாக்கும் என்ற எளிமை நிலையை மட்டுமே கொண்டுள்ளது.

இரு பகுதிகளிலும் இறைவன் பெருமை கூறப்பெறும் பொழுது, "மால்,அயன்,மறை,அறியா இறைவன்" என்ற சிறப்பு கூறப்பெறுகிறது.

*மாலயன் மறை அறியா ஆதி* -பரபக்கம் முதற்பாடல்
*மறையினான் அயனான் மாலான் . . .*
*கூறொணொாதாகி நின்ற இறைவனார்* -சுபக்கம்.

இத்தகைய ஒற்றுமை வேற்றுமைகளை உடைய சித்தியாரின் அவையடக்கச் செய்யுள்கள் அருணந்தியாரின் உள்ளுணர்வை நன்றாகப் படம் பிடிப்பனவாகும்.

தான் அனைத்து ஆகமங்களையும் கற்றுணர்ந்ததால் சகல ஆகமபண்டிதர் என அழைக்கப் பெற்றாலும், மெய்கண்டாரால் ஆட்கொள்ளப் பெற்ற பிறகுத் தம்மைவிட மெய்யுணர்ந்தோர் உளர் என்பதை உணர்ந்தவர் அருணந்தியார். எனவே தான் அவையடக்கத்தின் தொடக்கத்திலேயே,

*"வையகத்து ஆகமம் வேதம் மற்றுமுள்ள*
*நூலையெல்லாம் உணர்ந்து இறைவன் சுழலநோக்கு*
*நோன்மை அருந்தவர் முன்யான் நுவலுமாறு"*

என அறிஞர்களைக் குறிப்பிட்டு, அவர்களுக்கு முன் யான் மிக எளியவன் என்பதைக் காட்டிக் கொள்கிறார். எளிமையைக் கூட ஒன்றும் அறியாப் பாலகனாகக் "கூடுமொழி மழலையோடு குழறி ஒன்றும் குறிப்பரிதாயிடினும்" என்று இரண்டாம் பாடலில் கூறுவதன் மூலம் அமைத்துக் கொள்வது மிகவும் நினைந்து இன்புறத் தக்கதாகும். இவ்வாறு பரபக்கத்தில் அறிவுசால் மெய்யுணர்வுடையோர்களுக்கு முன் தன் எளிமையை வெளிப்படுத்தி அருணந்தி சிவாசாரியார் சுபக்கத்தில் தத்துவக் கருத்துகளை உள்ளடக்கியிருப்பது - மெய்கண்டாரால் மெய்யுணர்வு பெற்ற நிலையைக் காட்டுகிறது. இத்தகு வேறுபாட்டோடு அவையடக்கம் பாடியிருக்கும் அருணந்தி சிவாசாரியாரை நாம் போற்றிப் புகழாமல் இருக்க இயலாது.

சுபக்கத்தில் அமைந்துள்ள,

**"மறையினான் அயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றும்**
**குறைவிலா அளவினானும் கூறஒணாதாகி நின்ற**
**இறைவனார் கமல பாதம்"**

என்ற பகுதியில் அயன் என்பது அவனாற் செய்யப்பட்ட புராணங்களையும், மால் என்பது திருமாலின் அவதாரமாகிய வியாசரால் இயற்றப்பட்ட இதிகாசத்தையும், மனம் என்பது மநு முதலிய முனிவர் மனத்தால் உணர்ந்து செய்யப்பட்ட மிருதியையும்,

வாக்கு என்பது வேதத்தைக் கன்மகாண்டம், ஞானகாண்டம் எனப் பிரித்துக்கொண்டு ஆராயும் பூர்வ மீமாம்சை, உத்திர மீமாம்சையையும், அளவு என்பது தருக்க நூல்களையும், ஆகு பெயரால் உணர்த்தும் என்று சிவஞான முனிவர் உரை கூறுவார். எனவே தம் கருத்தாக அமைந்த பரபக்கத்தில் தம் எளிமையையும், மெய்கண்டரால் ஞானம் பெற்று அவரின் வழியின் அடைந்த சுபக்கத்தில் தத்துவத்தையும் அருணந்தி சிவாசாரியார் கூறவேண்டியதால் அதற்கேற்ப அவையடக்கத்தை அமைத்திருக்கிறார்.

பரபக்கப் பாடல்களில் இரண்டு உவமைகள் அமைந்துள்ளன. அவற்றுள் முதல் பாட்டில், "அருந்தவர் முன் யான் நூலைக் கூறுவது, அலைகள் மிகுந்த கடல் ஏழும் ஒன்றுபட நின்ற இடத்தைப் பசுவின் குளம்படியில் நின்ற நீருக்கு ஒப்பு" என்று கூறுவது போன்றது என்று கூறி உவமையை அமைத்துள்ளார். அறிஞர்களைக் கடல் ஏழுக்கும் தம்மை பசுவின் குளம்படி நீருக்கும் உவமையாக்கியிருப்பது வேறு எங்கும் காணா உவமையாகும். இவ்வாறு தான் கூறுவதை அறிஞர் பொறுத்திடல் வேண்டும் என்பதை உவமை மூலம் அடுத்த பாடலில் கூறி இயைபு படுத்துகிறார். உலகமக்கள், தம் மழலைகளிடம் உண்டாகும் மொழி, இளமையோடு, தடுமாறி ஒன்றுத் தெரிதற்கரிதாயிருந்தாலும் அதனை மிகவும் கொண்டாடி மகிழ்வது போல, தமிழ்ப் புலவர்கள் என் பாடுகவிக் குற்றங்களைப் பாரார் என்று ஆசிரியர் உவமைகளை அமைத்திருப்பது மகிழ்வூட்டுவதாகும். ஆனால் அதே நேரத்தில் சுபக்கத்தில் உவமை கையாளப் பெறாமை சிந்தனைக்கு உரியது.

முடிவுரை

இருபா இருபஃது, சிவஞான சித்தியார் என்னும் இரு நூல்கள் மூலம் ஆசிரியரைப் பற்றி அறியப் பெறும் செய்திகள்:

தமிழகத்தில் சமயப் போராட்டங்கள் நடைபெற்ற 13-ம் நூற்றாண்டில் சைவ சித்தாந்தக் கருத்துகளை வடிவமைத்துத் தந்தவராக விளங்குகிறார் அருணந்தி சிவாசாரியார்.

தம் இருபா இருபஃது நூல் மூலம் ஆசிரியர் புகழ்பாடி சிறந்த மாணவர்க்குரிய மரபை நிலை நாட்டினார் என்பதும் புலனாகின்றது.

பிறமதக் கருத்துக்களை மறுக்கும் முகத்தான் சிவஞான சித்தியார் பரபக்கத்தை அமைத்து, அதன்மூலம் மற்ற எல்லாச் சமயங்களைக் காட்டிலும் சைவசமயமே உயர்ந்தது என்பதையும், மூல முதல்வனாகச் சிவபெருமானே விளங்குகிறான் என்பதையும் விளக்கியதால் சைவ சித்தாந்த மரபினைக் காத்தவராகவும் விளங்குகிறார்.

தத்துவக் கருத்துகளை விளக்கிட ஆசிரியரின் வழியைப் பின்பற்றி - அவரின் கருத்துகளை விரித்துரைத்த பாங்கால் வழிநூலாசிரிய மரபுக்கு எடுத்துக்காட்டாகவும் விளங்குகிறார்.

கடவுள் வாழ்த்து - அவையடக்கம் ஆகிய இரு பகுதிகளையும் - தம் காலச்சூழலுக்கேற்பவும் - தம் நூற்பொருளுக்கேற்பவும் அமைத்து - நூல் மரபைப் பேணியவராகவும் விளங்குகிறார்.

# 3. நூல்களில் காணப்பெறும் தத்துவக் கொள்கைகள்

முன்னுரை; அளவை - அளவை : பொருள் விளக்கம் - அருணந்தி சிவாசாரியார் கொள்ளும் அளவை வகைகள் - காட்சி அளவை - கருதல் அளவை - உரையளவை ; முப்பொருள் நிலை; இறை பற்றிய செய்திகள் - இறை உண்டு என்பதற்குரிய அளவைகள் - இறைவனின் தொழில்கள் - இறைவனின் தன்மைகள்; உயிர் பற்றிய கருத்துகள் - உணர்வு நிலைகள் - உயிர்களின் வகை - உயிர்கள் பிறப்பும், உடம்பு ஏற்பும் - இறையும், உயிரும்; தளை பற்றிய கருத்துகள் - ஆணவம் - கன்மம் - மாயை; மாயையின் திரிபுகளும், மறைத்தலும் - குற்றங்களைப் போக்க வழி; முடிவுரை.

## முன்னுரை

சைவ சித்தாந்தம் என்ற பொருளில் சைவக் கொள்கைகள் பேசப்பெறுகின்றன. **"சித்தாந்தம்"** என்பதற்கு முடிந்த முடிபு என்பது பொருளாகும். எந்த ஒரு பொருளைப் பற்றியும் முதற்கண் அதன் இயல்பு, சிறப்பு பற்றி ஒரு முடிவு கொள்ளப்படுதல் இயல்பாக அமையும். பின்பு அப்பொருளை நன்கு ஆராய்ந்து பார்த்து இறுதியாக ஒரு முடிவு கொள்ளப்படும். இதனை முடிந்த முடிபு எனலாம். மேலும் சில பொருள்களில் முதல் முடிபே முடிந்த முடிபாகவும் அமையலாம். இருப்பினும் அதனை மேலும் மேலும் ஆராய்ந்து அம் முதல் கருத்தினையே நிலைத்து நிற்கும் முடிபாகக் கொள்வதும் முடிந்த முடிபாகும்.[1] இத்தகைய இரு கருத்துகளில் இரண்டாம் கருத்தின் அடிப்படையில் எழுந்தனவே சைவ சித்தாந்தக் கொள்கைகள். அதாவது இறை, உயிர், தளை (பதி,பசு,பாசம்) என்ற மூன்றும் தோற்றமில்லாதன (அநாதி) என்ற முதல் முடிபு - பல நிலைகளில் பின்னர் ஆராயப் பெற்று அம் முதல் முடிபே முடிந்த முடிபாகக் கொள்ளப் பெறுவது சைவசித்தாந்தம் ஆகும். இம் முடிந்த முடிபையே சைவத் தத்துவ நூல்கள் அனைத்தும் பலவேறு கோணங்களில் நிலை நாட்டுகின்றன.

சிவஞானபோதம் 12 சூத்திரங்களால் சைவ சித்தாந்தத்தைக் கூறியுள்ளது. சூத்திரங்களில் கூறப்பெற்றுள்ள கருத்துச்சுருக்கத்தை 39 அதிகரணங்களும், 81 எடுத்துக்காட்டு வெண்பாக்களும் விரித்துரைக்கின்றன. முதல் ஆறு சூத்திரங்கள் பொது அதிகாரம் என்றும், பின் ஆறு சூத்திரங்கள் உண்மை அதிகாரம் என்றும், சித்தாந்த அறிஞர்களால் பாகுபடுத்தப் பெற்றுள்ளன. முதல் ஆறு சூத்திரங்களில் முதல் மூன்று சூத்திரங்கள் இறை உண்மையையும், உயிர் உண்மையையும், தளை உண்மையையும் கூறுகின்றன. அடுத்த மூன்று சூத்திரங்கள் உயிர் இலக்கணம், தளை இலக்கணம், இறை இலக்கணம் என்ற மூன்றினையும் கூறுகின்றன. பின் ஆறு சூத்திரங்களில் முதல் மூன்று சூத்திரங்கள் உயிரின் சிறப்பு இலக்கணத்தையும், குரு உணர்த்தும் முறைமையினையும், உயிர்த்தூய்மையினையும் (ஆன்ம சுத்தியினையும்) கூறுகின்றன. இறுதி மூன்று சூத்திரங்கள் தளையின் நீக்கத்தையும், சிவப்பேற்றினையும், உயிரின் வீடு பேற்றினையும் கூறுகின்றன. இத்தகைய அமைப்பில் சைவ சித்தாந்தக் கொள்கைகளை மெய்கண்டார் சிவஞான போதத்தில் அமைத்துக் கொண்டுள்ளார். மெய்கண்டாரை ஞானாசிரியராகப் பெற்ற அருணந்தி சிவாசாரியார் தம்மிரு நூல்களில் மேற்கண்ட கொள்கைகளை விரிவாக்கித் தந்துள்ளார்.

## அளவை

உலகத்துப் பொருள்களை எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் அளவை வகையினால் அளந்து அறியுமாறு போல, இறை, உயிர் முதலிய பொருள்களை அளந்து அறிவதற்குரிய கருவிகள் அளவை எனப்படும். அளவைகளைக் கூறும் இயல் அளவைஇயல் ஆயிற்று.

இந்தியத் தத்துவக் கொள்கைகள் தாம் கொள்ளும் முடிபுகளை மட்டும் தாராமல் எம்முறைகளில் அவை விளைந்தன என்பதையும் காட்டுகின்றன. இவை, தாம் எடுத்துக் கொண்ட பொருளை ஆராய்வதற்கு முன் "அறிவு ஆய்வியல்" (Critique of Knowledge) என்று கருதக் கூடியவற்றைத் தந்து, உண்மையை எப்படி எய்துகிறோம் என்பதையும் சிந்திக்கத் தொடங்குகின்றன. இச் சிந்தனையின் முக்கியப் பிரிவுதான் அளவையியல் என்பது.

இப்பொதுவான இந்தியத் தத்துவ அமைப்பைப் பின்பற்றி அருணந்தி சிவாசாரியார் பதினான்கு விருத்தங்களில் அளவை இயலை விளக்குகிறார். தமிழில் உள்ள சைவ சித்தாந்த நூல்களில் சிவஞான சித்தியாரில் தான் முதல் முதலாக அளவை எடுத்துரைக்கப் பெறுகிறது. ஆயின் தமிழகத்தின் தத்துவ உலகில் பண்டுதொட்டு அளவை இருந்தது என்பதை மறுக்க இயலாது. மணிமேகலையில் 10 அளவைகள் கூறப்பெற்றுள்ளன. அவை காட்சி அளவை, கருதல் அளவை, உவம அளவை, ஆகம அளவை, அருத்தாபத்தி அளவை, இயல்பு அளவை, ஐதீக அளவை, அபாவ அளவை, மீட்சி அளவை, உண்டாம்நெறி அளவை என்பன. இவற்றில் வேத வியாதனும், கிருதகோடியும், சைமினியும் முறையே பத்து, எட்டு, ஆறு அளவைகளை உணர்த்தினர். இறுதியில் உலகாயதமும், பௌத்தமும், சாங்கியமும், வைசேடிகமும், மீமாம்சையும் ஆகிய மதங்கள் காட்சி, கருதல், ஆகமம், உவமம், அருத்தா பத்தி, அபாவம் ஆகிய ஆறு அளவைககளை மேற்கொண்டிருந்தன என்று மணிமேகலை[2] கூறுகிறது. எனவே கி.பி.2ஆம் நூற்றாண்டிலேயே தமிழகச் சமய தத்துவங்களில் அளவை முறை இருந்தமை புலனாகின்றது.

மெய்கண்டார் சிவஞான போதத்தில் அளவை முறைகளைக் காட்டவில்லை. ஆனால் அருணந்தி சிவாசாரியார் சுபக்கத்தில் தொடக்கத்திலேயே அளவை பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். ஞான ஆசிரியர் கூறவில்லை என்றாலும் தம்முடைய வடமொழி அறிவினால் - உலகில் சைவத் தத்துவக் கொள்கைகளைப் பரப்ப - அளவையைத் தம் நூலில் அமைத்துக் கொண்டிருக்கிறார். மேலும் பிற சமய மறுப்புகளை அருணந்தி சிவாசாரியார் செய்து வந்தமையால் - அம்மறுப்புக்கு இன்றியமையாததாகிய அளவை முறையை அவர் கையாள வேண்டியிருந்திருக்கிறது. பிற சமயத்தார்கள் அளவை முறையை அடிப்படையாகக் கொண்டே தத்தம் கொள்கைகளை வலியுறுத்தி வந்தனர். எனவேதான் சைவ சித்தாந்தக் கொள்கைக்குரிய அளவைமுறையை வெளிப்படுத்தி அவற்றின் மூலம் சைவ சித்தாந்தக் கொள்கைகளை வலியுறுத்தி மெய்கண்டாரிடமிருந்து அருணந்தி சிவாசாரியார் ஓர் வளர்ச்சி நிலையை ஏற்படுத்தியிருக்கிறார்.

## அளவை பொருள் விளக்கம்

அளவை என்பதற்கு உரையாசிரியர்கள் தெளிவான உரை தந்துள்ளனர்.

> *"அளவை என்பது அளந்தறியப் படுவது. அஃது எவ்வாறாம் எனின், உலகத்துப் பதார்த்தங்களை எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை அளவினால் அளந்தறியுமாறு போல, பதி முதலிய பொருள்களைப் பக்குவான்மாக்கட்கு அளந்து அறிவிக்கையின் பொருட்டு, அளவைப் பிரமாணங்கள் முதலில் கூறப்பெற்றன."*

என்பார் மறைஞான சம்பந்தர்.[3] "அளவையினியல்பு உணர்ந்தார்க்கு அன்றிப் பொருளுண்மை எடுத்துக் காட்ட இயலாது."[4] என அளவையின் இன்றியமையாமையைச் சிவஞான முனிவர் கூறுவார். "தர்க்க யுத்தியாயுள்ளவையும் இந்த அளவையினாலே சொல்லப்படுவது அறிந்து அர்த்தப் பிரயோகம் பண்ணவேணும் ஆகையால் முதற்கண் கூறியது என்க" என அருணந்தி சிவாசாரியார் சுபக்கத்தின் முதற் பகுதியில் அளவையை வைத்தற்குரிய ஏதுவைச் சிவாக்கிர யோகியார் கூறுவார்.[5] எனவே அளவை என்பது அளந்தறியப்படும் செயலைக் குறிப்பது என்பதும், அளவை அறிந்தார்க்கே பொருளியல்பும், தர்க்க உணர்வும் அறியப்படும் என்பதும் பெறப்படுகிறது. வட மொழியில் இதனைப் பிரமாணம் என்று கூறுவர். அளவைஅறிவின் இத்தகைய பெருமைகருதி அருணந்தி சிவாசாரியாரும் அளவை பற்றிய செய்திகளைத் தம் நூலில் இன்றியமையாததாக்கிக் கொண்டார் என்பது தெளிவாகிறது.

## அருணந்தி சிவாசாரியார் கொள்ளும் வகைகள்

அளவைக்கு விளக்கம் கூறுகின்ற பொழுது அருணந்தி சிவாசாரியார் "உயிரினோடு உணர்வு" எனக் குறிக்கிறார்.[6] அதற்கு உரை வகுக்கும் சிவஞான முனிவர் "தன்னை நோக்கி நிற்கும்

அறிவாகிய சிற்சக்தி" என உரைக்கின்றார். இத்தகைய பொருளுடைய அளவையை மூன்றாகக் கொள்வார் அருணந்தி சிவாசாரியார். அருணந்தி சிவாசாரியார் காலத்திற்கு முன் 10 அளவைகள் இருந்தமையை மணிமேகலை நமக்கு எடுத்துக்காட்டுகிறது. அதே காலத்தில் பத்து அளவைகள் ஆறு அளவைகளாகச் சுருங்கியிருக்கின்றன. இக்கருத்தையும் நமக்கு மணிமேகலை எடுத்துக் காட்டுகிறது.

*"மெய்ப் பிரத்தியம் அனுமானஞ் சாத்தம்*
*உவமானம் அருத்தாபத்தி அபாவம்*
*இவையே இப்போதியன்றுள அளவைகள்"* 27;83-85.

இப்பகுதி மூலம் காட்சி, கருதல், ஆகமம், உவமானம், அருத்தாபத்தி, அபாவம் என்ற ஆறு அளவைகள் இருந்தன எனத் தெரிகிறது. அருணந்தி சிவாசாரியாருக்குப் பிற்பட்டவராகிய பரிமேலழகர் காலத்தில் இந்த ஆறு அளவைகள் மூன்று அளவைகளாக விளங்கின எனத் தெரிகிறது.[7]

*"அளவைகளாவன பொறிகளாற் கானும் காட்சியும், குறிகளான் உய்த்துணரும் அனுமானமும், கருத்தா மொழியாகிய ஆகமமும் என மூன்று. ஒப்புப் பற்றி உணரும் உவமையும், இங்ஙனம் அன்றாயின் இது கூடாது என்றுணரும் அருத்தாபத்தியும், உண்மைக்கு மாறாய இன்மையும் என இவற்றைக் கூட்டி ஆறு என்பாரும் உளர். அவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே அடங்குதலின், மூன்றெனலே கருத்து"*[8]

பரிமேலழகர் ஆறினை மூன்றாகக் கொண்டது அவர் காலத்திற்குச் சில ஆண்டுகள் முற்பட்டவராகிய அருணந்தி சிவாசாரியாரின் கொள்கையிலிருந்தே என்பதைத் தெளிவாக உணர முடிகிறது. ஏனெனின் ஆறினை மூன்றாக்கியவர் - அருணந்தி சிவாசாரியாரேயாவார்.

*"அளவை காண்டல் கருதிலுரை*
*அபாவம் பொருளொப் பாறென்பார்*

*அளவை மேலும் ஒழிபுண்மை*
*ஐதி கத்தோ டியல்பெனநான்*
*களவை காண்பர் அவையிற்றின்*
*மேலும் அறைவர் அவையெல்லாம்*
*அளவை காண்டல் கருதலுரை*
*என்றிம் மூன்றின் அடங்கிடுமே"*[9]

என்று ஆறினை மூன்றாக்கி அருணந்தி சிவாசாரியார் அளவைகளை வகைப்படுத்துவார். பத்து அளவைகளுக்கும் விளக்கங்களை உரையாசிரியர்கள் தந்துள்ளனர்.

### 1. காட்சி அளவை

இது காண்டல் அளவை எனக் கூறப்பெறும். எதிர்ப்பட்ட பொருளை அறிதற்குக் கருவியாக உள்ளவையே காட்சி அளவை என்று சொல்லப்படும். இதனை வடநூலார் பிரத்தியட்சப் பிரமாணம் என்பர்.

### 2. கருதல் அளவை

தொலைவில் உள்ள ஓரிடத்தில் புகையைக் கண்ட ஒருவன் அங்கு நெருப்பு உண்டு என்று அறிவது. இதனை அனுமான அளவை என்றும், வழி அளவை என்றும் கூறுவர்.

### 3. ஆகம அளவை

கண்டும் கருதியும் அறியப்படாத பொருள்களை - நூல்களைக் கொண்டு அறிந்து கொள்வது ஆகம அளவை எனப்படும். அதிலும் அவ்வளவைக்கு மிகவும் பயன்படுவது அந்நூல்களில் உள்ள சொற்றொடர்களாகும். அவையே இங்கு ஆகம அளவையாகும்.

### 4. உவமை அளவை

பூனையைப் போலப் புலி இருக்கும் என்பதை அறிந்த ஒருவன் காட்டிற்குச் சென்ற பொழுது பூனை போன்றதொரு விலங்கைக்கண்டால் அவ் ஒப்புமையால் அம்மிருகத்தைப் புலி என உணர்கிறான். இதுவே உவமை அளவையாகும்.

### *5.அருத்தாபத்தி அளவை*

உணவு கொள்ளாத ஒருவர் உடல் பருத்து, வலிமையுடன் காணப்பட்டால் அவர் பிறர் காணாமல் உண்கின்றவர் என்பதை அறிகின்றோம். இதுவே அருத்தாபத்தி அளவையாகும்.

### *6.அபாவ அளவை*

இதனை இன்மை அளவை என்று கூறுவர். ஒருவர் இருக்கும் செயலகத்தில் அவரைக் காணவில்லை என்றால் செயலகத்திற்கு அவர் வரவில்லை என அறிகிறோம். இது அபாவஅளவையாகும்.

### *7.இயல்பு அளவை*

யானைமேல் ஏறி இருந்த ஒருவன் கொடு என்று கையை நீட்டியபொழுது, அவன் கேட்கும் பொருள் தோட்டியே என்று அறிந்து அதனைக் கொடுப்பது இயல்பு அளவையாகும்.

### *8.ஐதீக அளவை*

ஒரு மரத்தைக் குறித்து இதில் பேய் ஒன்று உறைகிறது என்று நெடுநாளாகக் கூறி வருதலால் அதனைக் கேட்டோர் அம்மரத்தில் பேய் உளது என்று துணிதல் இவ்வளவையாகும்.

### *9.மீட்சி அளவை*

இராமன் வென்றான் என்றால் இராவணன் தோற்றான் என்று உணர்வது மீட்சி அளவையாகும்.

### *10. உண்டாம் நெறி அளவை*

இரும்புக்கோலின் சுழற்சியால் அவ்விரும்பில் காந்தம் இருப்பதை அறிவது இவ்வளவையாகும்.

இப்பத்தில் காட்சி, கருதல், உரை ஆகிய மூன்றையே அளவைகளாகக் கொள்கிறார் அருணந்தி சிவாசாரியார். இம் மூன்று அளவைகளையும் விளக்கி - அவற்றின் வகைகளை - எடுத்துக் காட்டுகளோடு 14 விருத்தங்களில் விளக்கியுள்ளார். அவற்றின் சுருக்கம் தரப்பெற்றுள்ளன. காட்சி அளவை என்பது ஐயம், திரிபு முதலிய் குற்றம் இன்றிப் பொருளை அறிவதாகும். கருதல் அளவை என்பது நேரே அறியப் படாது மறைந்து நின்ற பொருளை, அதனைவிட்டு நீங்காது, உடன் நிகழ்வதாகச் சொல்லப்படும் ஏதுவைக் கொண்டு, அறிவதாகும். உரையளவை; காட்சி, கருதல் என்னும் இவ்விரண்டு அளவைகளாலும் அறியப்படாத பொருள்களை நூலுரை கொண்டு அறிவதாகும் என்று மூன்று அளவைகளுக்கு விளக்கம் கூறுவார்.[10]

## காட்சி அளவை

காட்சி அளவை வாயிற் காட்சி, மானதக் காட்சி, தன்வேதனைக் காட்சி, யோகக் காட்சி என நான்கு வகைப்படும். உயிரின் ஞான அறிவு (சிற்சத்தி) ஐம்பொறிகளாகிய வாயில்களுள் ஒன்றைப் பற்றி எதிர்ப்பட்டதொரு பொருளை அறிவது வாயிற் காட்சியாகும். இங்குப் பொருளின் உண்மை மட்டும் அறியப் பட்டு அதனை வேறுபடுத்தி அறியாமையினால் இவ்வாயிற் காட்சியை நிருவிகற்பக் காட்சி என்பார் அருணந்தி சிவாசாரியார்.[11] இவ்வாறு வாயில்களுளும் ஒன்றால் வேறுபாடின்றி (நிருவிகற்பமாக) அறிந்த அறிவு, பின் மனம் முதலிய அகக் கருவிகளில் வந்து சேர்கின்றது. மனம் அவ்வறிவைப் பற்றி முன் நினைவோடு கலந்து "இஃது இன்னதாகலாம்" என நினைந்தும் "இதுவோ அதுவோ" என ஐயப்பட்டும் நிற்கும். இறுதியில் மனம் அப்பொருளைத் தெளிவு படுத்தும். இதுவே மானதக் காட்சி. இதனைச் சவிகற்பக் காட்சி என்றும் கூறுவர். இத்தகைய மானதக் காட்சியின் பயனாய் அறிவு, சத்துவ, இராசத, தாமத என்ற மூன்று குணங்களுள் யாதேனும் ஒரு குணமாய் வேறுபட்டு (பரிணமித்து) நிற்க - அதனை உயிரின் அறிவு வித்தை எனும் தத்துவத்தைக் காட்டாகக் கொண்டு அறிவது தன்வேதனைக் காட்சியாகும். தியான சமாதிகளால் உயிரின் அறியாமை ஓரளவு நீங்குதலால் ஒருவன் ஓரிடத்தே ஒரு காலத்தே இருந்து முக்காலத்துப் பொருளையும், மூவிடத்துப் பொருளையும் தெளிய உணர்வதாகிய உயிரின் ஞான அறிவு யோகக் காட்சியாகும்.[12]

கருதல் அளவை

தன் பொருட்டுக் கருதல், பிறர் பொருட்டுக் கருதல் எனக் கருதல் அளவை இரு வகைப்படும். தன் பொருட்டுக் கருதல் என்பது தானே யாதேனும் ஒரு ஏதுவைக் கொண்டு, அதனால் அதனை விட்டு நீங்காத மறைவிடத்தில் உள்ள ஒரு பொருளை ஆய்ந்துணர்தல் ஆகும். பிறர் பொருட்டுக் கருதல் என்பது அவ்வாறு தான் உணர்ந்த உணர்வைப் பிறரும் அறிதல் வேண்டும் என்ற கருத்துடன் சொற்றொடர் வடிவில் வைத்துப் பிறருக்கு உணர்த்துவதாகும். அச் சொற்றொடர் மூன்று உறுப்புகளை உடையது. மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு என்பவை அவை.

(எடு): இம்மலை நெருப்புடைத்து (மேற்கோள்)

புகையுடைமையால் (ஏது)

அடுக்களை போல (எடுத்துக்காட்டு)

இச் சொற்றொடர் உடன்பாட்டுத் தொடர் என்றும். எதிர்மறைத் தொடர் என்றும் இரு வகைப்படும். மேற்கூறியது உடன்பாட்டுத் தொடராகும். எடுத்துக்காட்டை மொழிவதற்கு முன் ஏதுவிற்கும் துணியப்படும் பொருளுக்குமுள்ள தொடர்பை அறிவிக்கும் சொற்றொடரை உடன் கூட்டிச் சொல்லாலாம். அதற்கு விரிவுரை (வியாத்தியுரை) என்று பெயர். இங்கு "யாண்டு யாண்டு புகை ஆண்டு ஆண்டு நெருப்பு" விரிவுரையாக அமைகிறது. இதே விரிவுரை எதிர்மறையில் அமைந்தால் அது எதிர்மறைத் தொடர் ஆகும்.

(எடு). "யாண்டு யாண்டு நெருப்பிலையோ ஆண்டு
ஆண்டு புகையும் இல்லையாம்"

"தாமரை பூத்த தடாகம் போல"

இவ்வாறு தொடர்கள் இரண்டுபட்டு ஒரு பொருள் அறியப் படுகிறது. அப்பொருள் இருக்குமிடத்தை மூன்று பக்கங்களாக அருணந்தி சிவாசாரியார் காட்டுகிறார்.

பக்கம், சபக்கம், விபக்கம் என்பன அம்மூன்று பக்கங்கள்.

1. சந்தேகித்துத் துணியப்படும் பொருள் இருக்குமிடம் பக்கம் எனப்படும். மேற்கூறப்பெற்ற உதாரணத்தில் புகை இருக்கும் மலை, பக்கத்தைச் சார்ந்தது.

2. சபக்கம் என்பது துணியப்படுவதாகிய பொருளுக்கு உதாரணமாகக் காட்டப்படும் பொருள் இருக்கும் இடமாகும். மேற்கூறப் பெற்ற உதாரணத்தில் எடுத்துக்காட்டாக அமைந்துள்ள அடுக்களை, சபக்கமாகும்.

3. விபக்கம் என்பது துணிந்த பொருளில்லாத இடமாகும். உதாரணத்தில் அமையாத தடாகம் இங்கு விபக்கமாகும்.

இவ்வாறு ஏதுவாகிய காரணங்களையும். எடுத்துக்காட்டுகளையும் கொண்டு ஒரு பொருளின் உண்மை நிலையை அறிந்து கொள்வது கருதல் அளவையாகிறது. கருதல் அளவைக்கு முக்கியமாக அமைகின்ற ஏதுவையும் அருணந்தி சிவாசாரியார் மூன்று வகைகளாக காட்டுகிறார். இயல்பு ஏது, காரிய ஏது, அனுபலத்தி ஏது என்பன அவை. அதில் இயல்பு ஏது என்பது மா முதலிய சொற்கள் தமக்கு இயல்பாக உள்ள ஆற்றலால் மரம் முதலிய பொருள்களை உணர்த்துதல். காரிய ஏது என்பது புகை முதலிய காரியங்கள் தத்தம் காரணங்களாகிய நெருப்பு முதலியவற்றை உணர்த்துதல் ஆகும். அனுபலத்தி ஏது என்பது குளிர் இன்மையாகிய காரியமின்மை, பனி இன்மையும், பனி இன்மையாகிய காரண இன்மை குளிர் வாராமையும் உணர்த்துதல் ஆகும்.

**உரையளவை**

இயல்பாகவே தளைகளில் நீங்கி மெய்யுணர்வும் பேரருளும் உடைய முதல்வன் திருவருளால் வெளிப்படும் நூல் பொது நூல், சிறப்பு நூல் என்று இருவகைப்படும். அவற்றால் அறிவதே உரையளவை ஆகும். அத்தகைய நூல்களாகிய வேத ஆகமங்கள் கருமகாண்டம், உபாசனா காண்டம், ஞான காண்டம்

என்ற மூன்று பகுதிகளைக் கொண்டவையாகும். கருமகாண்டம் என்பது செய்ய வேண்டிய கடமைகளை உணர்த்தும் பகுதியாகும்.உபாசனாகாண்டம் என்பது இறைவனை மனம், மொழி, மெய்களால் உணர்த்துவது. ஞான காண்டம் என்பது முப்பொருள் இயல்புகளை உணர்த்துவது. கருமகாண்டம் உயிரின் ஞான அறிவு தெரிவது தந்திர உரையளவை ஆகும். உபாசனா காண்டம் பற்றித் தெரிகின்ற மந்திர உரையளவை ஆகும். ஞான காண்டம் பற்றித் தெரிவது உபதேச உரையளவை ஆகும்.

இவ்வாறு மூன்று அளவைகளைப் பற்றிய விளக்கங்களை அருணந்தி சிவாசாரியார் குறிப்பிட்டுக் காட்டி உலகத்தில் உள்ள பொருள்களை அறிவதற்கு அளவை முறைகளை அமைத்துள்ளார். இம்மூன்று அளவைகளில் உரையளவைக்கே தம் நூலில் அருணந்தி சிவாசாரியார் முக்கியத்துவம் அளித்துள்ளார். உரையளவைக்கு ஆதாரமாகிய வேத ஆகமங்களை அவர் சிறப்பித்திருக்கும் இடங்கள்[13] இக்கருத்திற்குச் சான்றுகளாக விளங்குகின்றன. மற்ற இரு அளவைகளில் சைவ சித்தாந்த மரபுப்படி உலகைக் கொண்டுக் கடவுள் உண்டு என உணரலாம் என்பன போன்ற நிலையில் கருதல் அளவையையும், பிறமத மறுப்பு போன்ற நிலையில் காட்சி அளவையையும் ஆசிரியர் பயன் படுத்தியுள்ளார்.

## முப்பொருள் நிலை

சைவ சித்தாந்தம் உள் பொருள்களை இறை, உயிர், தளை என்ற மூன்றாகக் கொள்ளும். முப்பொருள்களையும்,

"சுத்தமெய்ஞ் ஞான மேனிச்
சோதிபால் அசத்துஅஞ் ஞானம்
ஒத்துறா குற்றம் எல்லாம்
உற்றிடும், உயிரின் கண்ணே
சத்துஉள போதே வேறாம்
சதசத்தும் அசத்தும் எல்லாம்
வைத்திடும், அநாதி யாக
வாரிநீர் லவணம் போலும்" ( 251 )

என்ற பாடலில் அருணந்தி சிவாசாரியார் ஒரு சேரச் சுட்டிக் காட்டியுள்ளார். இம் முப்பொருள் இயல்புகளை மெய்கண்டார் வழி நின்று அருணந்தி சிவாசாரியார் சுபக்கத்தில் விளக்கியுள்ளார். அவை முறையாகச் சுருக்கமாகக் குறிக்கப் பெற்றுள்ளன.

## இறை பற்றிய செய்திகள்

அருணந்தி சிவாசாரியார் பரமன், இறைவன், சிவன், கடவுள், ஈசன், பரன், உடையன், முன்னவன், கர்த்தா, உத்தமன், அறிவன், நின்மலன், நாதன், சதாசிவன், அமலன், நாயகன், அரன், ஆண்டவன், மாதொரு பாகன் என்ற பெயர்களால் இறைவனை குறிப்பிடுகின்றார்.

## இறை உண்டு என்பதற்குரிய அளவைகள்

சைவ சித்தாந்தம் முப்பொருளையும் தோற்றமில்லாதவை (அநாதி) என்று கூறும்.

“பதிபசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போல் பாசம் அநாதி”

என்று திருமந்திரமும்(115), “பதியினைப் போல் நித்தம் பசு பாசம் என்றாய்” என்று உண்மை விளக்கமும்(49) கூறுவதை இங்குக் குறிப்பிடலாம். எனவே இறை, உயிர், தளை மூன்றும் தனித்தனிப் பொருள்களே. இவைகளில் எந்தப் பொருளும் தோன்றுவதும் இல்லை, அழிவதும் இல்லை என்பதால் அவை தோற்றமில்லாதவை (அநாதி) எனப்பட்டன. சித்தியாரும் இறைவனை குறிக்கும் பொழுது “தான் முதல் ஈறுமாகி மருவிடு அநாதி” (21) என்று குறிப்பிடுகிறது. இறை உண்டு என்பதைக் கீழ்க்கண்ட செய்திகளால் சித்தியார் குறிப்பிடுகிறது.

1. உலகம் தோற்றம், அழிவுகளைக் கொண்டது. அவை ஒன்றுக்கொன்று வேறுபட்டவை (விகாரமாதலின்) ஆதலின் அவைகளை உலகிற்கு இயல்பு என்று கூற இயலாது. எனவே உலகம் படைக்கப் பட்டிருப்பதால் அதனைப் படைக்க ஒருவன் வேண்டும் என்பது பெறப்படுகிறது. அவ்வொருவன் தான் இறை (பாடல்.24) என்கிறார்.

2. உலகத்தில் தோற்ற, அழிவுகள் நடைபெறுவது காலத்தால் என தார்க்கீக மதத்தார் கூறுவர். அது தவறு. ஏனெனின் அறிவில்லாத பொருள் தானே இயங்காது. அதனை இயக்க ஒருவன் வேண்டும். அந்த அறிவுடைய ஒருவன் தான் இறை. அவன் வினைமுதற் காரணன் (நிமித்த காரணன்). காலம் போன்ற துணைக் காரணங்களை இயக்குகின்றான். எனவே காலம் இயங்குவதைக் காணுவதால் இறை உண்டு என்பதை உணரலாம் (பாட்டு 30)

## இறைவனின் தொழில்கள்

இறைவன் உண்டு என்று நிறுவிய ஆசிரியர் இறைவனின் தொழில்களை மிகச் சிறப்பாக விளக்குகிறார். இறைவன் முத் தொழில்களை உடையவன். “தோற்றுவித்தழித்துப் பின்னும் துடைத்தருள் தொழில்கள் மூன்றும்” என்பது அருணந்தி சிவாசாரியார் வாக்கு ஆகும். (பாடல்53). இவ்வாறு முத்தொழில்களையும் இறைவன் செய்யும் பொழுது இறைவனுக்கு வேறுபாடு (விகாரம்) ஏற்படாது. இதனை உவமையால் விளக்குகிறார் ஆசிரியர்.

> “சாற்றிய கதிரோனிற்கத் தாமரை யலரும் காந்தங்
> காற்றிடுங் கனலை நீருங் கரந்திடும் காசினிக்கே” (பா. 53)

சூரியன் முன்னே தாமரை மலரும், சூரிய காந்தக் கல்லில் நெருப்பு தோன்றும், நீர் வற்றும். ஆனால் இம்மூன்று தொழில் நடைபெறினும் சூரியன் வேறுபடுவதில்லை. அதுபோல இறைவன் தோற்றல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழிலைச் செய்தாலும் வேறுபடுதல் இல்லை என்று நிறுவுகிறார். இம் முத் தொழிலோடு மறைத்தல், அருளல் என்ற இரு தொழில்களையும் இறைவன் செய்கின்றான். ஐந்து தொழில்களையும் செய்வதற்குக் காரணம் அருளிச் செயலேயாகும், என்பதும் அருணந்தி சிவாசாரியார் கருத்தாகும். அருளைத் தவிர மற்றப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் என்ற நான்கும் துன்பங் கொடுப்பனவாயிற்றே என்று எண்ணலாம். அதற்கு ஆசிரியர் கூறும் விளக்கம், “உயிர்களை அழித்தலும், தோற்றுவித்தலும் தளைப்பிடிப்பு நீங்குதல் (மலபரிபாகம்) செய்வதற்கு ஆகும். காத்தல் - அவரவர் செய்த

கன்மங்களின் பயனைப் (புசிப்பித்து) அனுபவிக்கச் செய்து அவற்றை நீக்குதற் பொருட்டாகும். மறைத்தல் இருவினைஒப்பு வருவித்துத் தளைகள் எல்லாவற்றையும் நீக்குதற் பொருட்டாம். அருளல் தளைகளை நீக்கி முத்தி கொடுத்தற் பொருட்டாம்" எனக் கூறி (பாடல்.57) ஐந்து தொழிலையும் இறைவன் அருள் நிலையிலேயே செய்கிறான் என்று ஆசிரியர் குறிப்பிட்டுத் தெளிவு படுத்துகிறார்.

இத்தகைய தொழில்களை உடையவன் ஆகிய இறைவன்தான், உலகத்தினைத் தோற்றுவிக்கின்றான். மாயையை முதற் காரணமாகக் கொண்டு, சத்தியைத் துணைக் காரணமாகக் கொண்டு, தான் வினைமுதற் காரணமாக நின்று உலகத்தை இறைவன் தோற்றுவிக்கிறான். இது எவ்வாறு எனின் மண்ணாகியமுதற்காரணத்தையும், தண்டச் சக்கரமாகிய துணைக் காரணங்களையும் கொண்டு, வினைமுதற் காரணனாகிய குயவன் குடம் முதலியவற்றைச் செய்வது போலப் படைக்கிறான் என்று குறிப்பிடுகின்றார். உலகத்தைத் தோற்றுவிக்கும் முறைமையையும் அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார். முதற்காரணம் எனப்பட்ட சுத்த மாயையினின்றும் அசுத்த மாயை தோன்றுகிறது. அசுத்த மாயையினின்று மூலகாரண (பிரகிருதி) மாயை தோன்றும். சுத்த மாயையினின்றும், வைகரி முதலிய நால்வகை வாக்குத் தோன்றும். அசுத்த மாயையினின்று அராகம் முதலிய காரணத் தத்துவங்கள் ஐந்தும் மூலகாரணத்திற்கு முன்னதாகத் தோன்றும். அதன்பின் மூலகாரண மாயை, குணதத்துவம் முதலிய இருபத்து நான்கு தத்துவத்தையும் தோற்றுவிக்கும். (பாடல்.39) இவ்வாறு இறைவன் உலகைத் தோற்றுவிப்பான் என்று விளக்கியுள்ளார். இறைவன் உண்டு என்பதற்கு உலகைக் காட்டிய ஆசிரியர், அந்த உலகம் எவ்வாறு இறைவனால் தோற்றுவிக்கப் பெறுகிறது என்பதைக் குறிப்பிடுவது மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்.

**இறைவனின் தன்மைகள்**

1. இறைவனின் தன்மைகளைச் சைவ சித்தாந்தம் சிறப்பு (சொரூப) இலக்கணம், பொது (தடத்த) இலக்கணம் என இருவகையாகக் கூறும். சிறப்பு இலக்கணம் என்பது இறைவனின் எண் குணங்களாகும். இவற்றைச் சித்தியார் பல இடங்களில் குறிப்பிடுகிறது.

"இறைவனா வான்ஞான மெல்லா மெல்லா
முதன்மையநுக் கிரகமெல்லா மியல்புடையான்" (பா.269)

இவ்வரிகள் மூலம் முழுமுதற் கடவுள் எனப்படும் இறைவன் முற்றுமுணர்தல், முடிவில் ஆற்றலுடைமை, பேரருள் உடைமை என்னும் மூன்று இலக்கணங்களை இயல்பாகவே உடையவன் என்பது உணர்த்தப் பெறுகின்றது.

"குறித்ததுஒன்று ஆக மாட்டாக்
குறைவுடலன் ஆத லானும்,
நெறிப்பட நிறைந்த ஞானத்
தொழிலுடை நிலைமை யானும்,
வெறுப்பு ஒரு விருப்புத் தன்பால்
மேவுதல் இலாமை யானும்,
நிறுத்திடும், நினைந்த மேனி-
நின்மலன் அருளி னாலே" (பா. 65)

என்ற இவ்வரிகளின் மூலம் இயற்கை உணர்வினன் ஆதல், வரம்பில் இன்பம் உடையவன் ஆதல், இயல்பாகவே பாசங்களில் நீங்குதல் ஆகிய குணங்கள் குறிப்பாகக் காட்டப் பெறுகின்றன. இத்தகையச் சிறப்பு இலக்கணத்தை ஆசிரியர் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

2. இறைவன் 36 தத்துவங்களுக்கும் அப்பாற் பட்டவன் என்பதை,

"மெய்தரு சைவ மாதி
இருமூன்றும் வித்தை ஆதி
எய்துதத் துவங்கள் ஏயும்;
ஒன்றும் இன்று, எம் இறைக்கே" (பா. 163)

என்ற வரிகளால் உறுதிப் படுத்துகிறார். இவ்வரிகளில் எம் இறைக்கு ஒன்றும் இன்று என்று அமைந்துள்ள பகுதி அவரின் கொள்கை உறுதியைக் காட்டுகிறது.

3. இறைவன் உலகுயிர்கள் அனைத்திலும் தானேயாய், பொருட்தன்மையால் அவற்றிலிருந்து வேறுமாய், அவற்றைச் செலுத்தும் தன்மையால் உடனுமாய், சத்தி வடிவமாய், ஓங்கி உலகுயிர்கள் இருவினைக்கு ஈடாக நடந்திட ஆணை செலுத்தும் முதல்வனாய், நின்மலனாய் நிற்பவன் ஆவான் என்பதை இரண்டாம் சூத்திரத்தில் குறிப்பிடுகிறார். இதனையே இருபா இருபஃதில்

"எனது உளம் நீங்கா நிலைமை

..........................................................................

..........................................................................

ஓராலினை யுணர்த்தும் விராய் நின்று" (பா. 2)

என்றும் குறிப்பிடுகிறார். இறைவன் உயிர்களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்கின்றான். (பா.92) இவ்வாறு நிற்பதை அருணந்தி சிவாசாரியார் மேலும் ஓர் உவமை மூலம் விளக்குகிறார். உயிரானது உடம்பையும், ஐம்பொறிகளையும் பற்றிக்கொண்டு நின்றாலும், அவ்வுடம்புக்கும், கரணங்களுக்கும் வேறாய் நிற்பது போல இறைவன் உயிர்களோடு வேறாகாமலும் (அபேதம்), வேறாகவும் (பேதம்), வேறுபட்டும் வேறுபடாமலும் (பேதாபேதம்) நிற்கிறான். (பா.94)

4. சிவபெருமான் உயிர் வேறுபாட்டால் (ஆன்ம பேதத்தால்) சுட்டி அறியப்படும் பொருளா அன்றி ஒருவாற்றானும் அறியப்படாத பொருளா என்றால் அறியப்படும் பொருள்அறிவில்லாமையால் அழிந்து போகும். ஒருவாற்றானும் அறியப்படாத பொருள் இல் பொருளாகும். எனவே இறைவன் சுட்டி அறியப் படுதலும் ஒருவாற்றான் அறியப் படாமையும் ஆகிய இரண்டு தன்மையும் இன்றி விளங்குபவன் என்று ஆறாம் சூத்திரத்தில் குறிப்பிடுகின்றார்.

5. இறைவன் குருவாகி வந்து உயிர்களுக்கு ஞானம் கொடுக்கிறவன் என்பதை எட்டாம் சூத்திரம் மூலமாக அறிவுறுத்துகின்றார். இதனையே இருபா இருபஃதில்,

"பொய்யை மெய்யெனப் புகன்று வையத்து
ஓடாப் பூட்கை நாடி நாட
என்னுள் கரந்து என்பின் வந்தருளி" (பா.18)

என்று குறிப்பிடுகிறார். அவன் உயிர்களைத் தண்டிப்பது பற்றி அருணந்தி சிவாசாரியார் சிறந்த நடைமுறை உவமையைக் கொண்டு விளக்குகிறார்.

"தந்தைதாய் பெற்ற தத்தம்
புதல்வர்கள் தம்சொல் ஆற்றின்
வந்திடா விடின், உறுக்கி
வளாரினால் அடித்து, தீய
பந்தமும் இடுவர்; எல்லாம்
பார்த்திடின், பரிவே ஆகும்;
இந்தநீர் முறைமை யன்றோ -
ஈசனார் முனிவும் என்றும்" (பா.106)

இப்பாடலில், தந்தை தாயார் தம் சொல்லின் வழி ஒழுகாத புதல்வர்களைச் சிறு கம்பினால் அடித்துக் கொடிய விலங்கும் இடுவர். இச் செயல்கள் வெகுளி போலத் தோன்றினும் அவை அவர்கள் மேல் கொண்ட அன்பு காரணமான செயல்களாகும். அது போன்றதே ஈசனார் செயலும் என்கிறார் ஆசிரியர்.

6. இத்தகைய இறைவன் ஒன்பது நிலைகளைக் (நவந்தரு பேத வடிவங்களைக்) கொண்டவன் என்பதையும் குறிப்பிடுகின்றார். சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், திருமால், நான்முகன் ஆகிய இவ்வடிவங்கள் ஒன்றின் ஒன்றாகத் தோன்றும். இந்நிலையில் சிவம், சத்தி, நாதம், விந்து என்பன அருவத் திருமேனிகள் ஆகும். மகேசுவரன், உருத்திரன், திருமால், நான்முகன் ஆகிய நான்கும் உருவத் திருமேனிகள் ஆகும். அவ்வுருவத் திருமேனி சதாசிவம் ஆகும். இவ் ஒன்பது வடிவங்களைக் கொண்டு ஐந்து செயல்களை இறைவன் செய்கின்றான் என்று குறிப்பிடுகின்றார்.

இத்தகைய வடிவங்களைப் பெற்ற இறைவனைத் தமக்குரிய வழிபடு வடிவமாக மாதொரு பாகர் வடிவத்தையே கண்டவர் அருணந்தி சிவாசாரியார்.

"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர்" 115
"இடப்பாக மாதராளோடியைந்து உயிர்க்கின்பம் என்றும்
அடைப்பானாம்" 74
"அறிவினில் அருளால் மன்னி அம்மையோ
டப்பனாகி" 2

என்ற பகுதிகள் அவர் வழிபட்ட தெய்வ வடிவத்தைக் காட்டுகின்றன. மாதொரு பாகனார் "சேவுயர் கொடியினான்" என்றும் (பா.46) அவ்விறைவன், தன் கரங்களில் சூலம், மழு, வாள், வச்சிரம், அபயம், நாகம், பாசம், அங்குசம், கண்டாமணி, அங்கி எனும் ஆயுதங்களை ஏந்தியவன் எனவும் (பா.67) அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார்.

7. இத்தகு மாதொரு பாகனாக விளங்கும் இறைவன் வேத ஆகமங்களைப படைத்தான் என்பதை,

"அநாதியே யமலனாய அறிவன் நூல் ஆகமந்தான்" (பா.19)
"அருமறை யாகம முதனூல் அனைத்தும் உரைக்கையினான்" (பா.266)

என்ற வரிகளால் குறிப்பிடுகின்றார்.

8. இந்நூல்களின் மூலமே இறைவனை அறியலாம் என்பதை,

"அருளினால் ஆக மத்தே
அறியலாம் - அளவி னாலும்
தெருளலாம் - சிவனை, ஞானச்
செய்தியால், சிந்தை யுள்ளே
மருள் எனலாம் நீங்கக் கண்டு,
வாழலாம்; பிறவி மாயா
இருள் எலாம் இரிக்கல் ஆகும்;
அடியரோடு இருக்க லாமே" (பா. 6)

என்ற பாடல் மூலம் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு உலகத்தால் இறைவன் உண்டு எனக் கொண்டு, அவ்விறைவன்தான் உலகத்தைப் படைத்தான் என்பதை உணர்ந்து

அவ்விறைவனின் இலக்கணங்களை அறிந்து அவனை மாதொரு பாகன் வடிவத்தில் வணங்கி, அவன் அருளிய வேதாகமங்களைக் கற்றுத் தேர்ந்து அவற்றின் மூலம் அவ்விறைவனை முழுமையும் அறிந்து பிறவியாம் இருளை நீக்கி வாழ்தலை இறைவனின் செய்திகளாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**உயிர் பற்றிய கருத்துகள்**

முப்பொருள்களில் இரண்டாவதாக விளக்கம் பெறுவது உயிராகும். இதனை ஆன்மா என்றும், உயிர் என்றும் அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார்.

அசித்தரு வியாப கம்போல
வியாபகம் அருவம் இன்றாய்
வசித்திட வரும்வி யாபி
யெனும்வழக் குடைய னாகி
நசித்திடா ஞானச் செய்தி
அநாதியே மறைத்து நிற்கும்
பசுத்துவம் உடைய னாகிப்
பசுவென நிற்கும் ஆன்மா" (பா.210)

என்ற பாடலில் உயிரின் இலக்கணத்தைக் குறிப்பிடுகிறார் ஆசிரியர். உயிரானது இறைவன் போல் நிறைந்து நிற்பதும், நுண்ணிய அறிவுடையாதலுமின்றி, சார்ந்த பொருளிடத்து அப்பொருள் அளவாகப் பரவியிருப்பதாய், விழைவு, அறிவு, செயல் (இச்சா, ஞானம், கிரியை) என்னும் குணங்களை உடையதாய் விளங்கும். அவ்வாறு உடையதாயினும் அவ்விச்சா, ஞானக், கிரியைகள், ஆணவ மலத்தினால் தொழிற்படாமல் மறைப்புண்டு கிடக்கும். அதனால் உயிராய் (தூல சித்தாய்) நிற்கும். இவ்வாறு கட்டுப்பட்டு நிற்குங்கால் உயிர் எனப்படும் என்பது இப்பாடல் தரும் பொருளாகும். இப்பாடலின் கருத்துப்படி உயிர் என்னும் சொல் கட்டுண்டது என்றும் பொருளை உடையது எனப்படுகிறது. இத்தகைய கருத்தைக் கூறிய அருணந்தி சிவாசாரியார் உயிர், உடம்பு முதலியவற்றிலிருந்து வேறுபட்டவை என்பதையும் விளக்குகிறார். மெய்கண்டார் சிவஞான போதத்தில் மூன்றாம் சூத்திரத்திலும், நான்காம் சூத்திரத்திலும் குறிப்பிட்டிருப்பதை அடியொற்றி இக்கருத்துக்களை அமைத்துள்ளார்.

1. உடம்பு உயிர் ஆகாது. ஏனெனின் உடம்பு பிணமாகிய விடத்தும், உறக்கத்திலும் அறிவு நிகழாது. எனவே உடம்பு உயிராகாது. (பா.188)

2. ஐம்பொறிகளும் உயிர் ஆகாது. ஏனெனின் இவ் ஐம்பொறிகளைக் கொண்டு அறியும் பொருளே உயிராகும். ஐம் பொறிகள் தாமாக அறியும் சக்தியுடையன ஆகா. (பா.189)

3. பிராணவாயு உயிர் ஆகாது. ஏனெனின் உடம்பு உறங்குமிடத்துப் பிராணவாயு இயங்கினும் அது செயல்களை அறியாது. மேலும் பிராணவாயுவே அறியுந் தன்மையுடைய கருத்தாவாக இருப்பின் உறக்கத்தில் அது தொழிற்பட்டு நிற்கவும், கருவிகள் தொழிற்படாது நிற்கின்றன ஆதலால் பிராணவாயு உயிர் ஆகாது. (பா.190)

4. உட்கருவிகள் (அந்தக் கரணங்கள்) உயிர் ஆகாது. அந்தக் கரணங்கள் உயிராக அறியும் என்றால் அவற்றுள் ஒன்று அறிந்தவற்றை ஒன்று அறியவேண்டும். அவ்வாறு அறிவதில்லை. எனவே அவை அறியும் பொருள்கள் அல்ல. உட்கருவிகள் நான்கினையும் அறிந்து அவற்றைச் சில செயல்களில் செல்லவொட்டாது தடுத்தும், சில செயல்களில் செலுத்தியும் அவற்றின் வேறாய் யான் என்றும், எனது என்றும் நிற்பது ஆன்மா எனும் உயிர் ஆகும். (பா.191) உட்கருவிகள் உயிரைப் பொருந்தி அவையே உயிர் என்னும்படி ஒன்றித்து நிற்கும். இருப்பினும் கண்ணுக்கு விளக்குப் போல, அவை உயிர், செய்திகளை அறிவதற்குத் துணைக் கருவிகளாக இருக்குமே அன்றி அவையே உயிர் ஆகாது. இதை அறிவதே உயிர்ஞானம் எனக் கூறுவர்.(பா.192)

5. உயிர்கள் பலபொருள் கூட்டமல்ல. (உட்கருவிகள் முதலிய பல பொருள் கூட்டமே உயிர் என்று கூறுவாரும் உண்டு). பலபொருள் கூட்டம் ஒரு பொருள் ஆகாமையால் அது பொருந்தாது.(பா.195)

6. இவ்வாறு கூறிய அருணந்திசிவாசாரியார் இதன் பின்னர்ப்பரிணாமவாதிகள், சாங்கியர், பௌராணிகர், கவுளர், பாதஞ்சலர், வைசேடிகர், பாஞ்சராத்திரிகர், சமணர், பட்டாச்சாரியர், ஐக்கியவாதிகள் ஆகிய பதின்மர்கள் கூறுகின்ற உயிரின்

இலக்கணங்களை மறுத்துச் சைவ சித்தாந்தம் கூறுகின்ற, "உயிர் அருவத் தன்மையும், நிறைந்த தன்மையும், நிலையான (நித்தியத்) தன்மையும் உடையதாகும்" என்ற இலக்கணத்தை நிலைநாட்டுகிறார்.

இவ்வாறு உயிர் உண்டு என்பதை நிலைநாட்டிய அருணந்தி சிவாசாரியார் பின்னர் உயிரானது உடலைப் பெற்று இச்சா, ஞானக், கிரியைகளை உடையதாக இருக்கும் முறைமைகளை விளக்குகிறார். ஆணவ மலத்தாலே மறைப்புண்டு இருள் நிலையில் நிற்கின்ற உயிர் அசுத்த மாயையிலே அசுத்த மாயாதத்துவத்தைப் பொருந்தி, பின்னர் இச்சா, ஞானக் கிரியைகளைப் பொருந்தி, பின்னர் கலையாதி தத்துவங்கள் மூன்றினாலும் சிறப்புற்று, முக்குணங்கள், உட்கருவிகள் முதலிய தத்துவங்கள் யாவும் உடல் உறவுகளாய் அமைய அவற்றொடு உயிர் பிரிவின்றி நிற்கும் என்பதே அவர் கூறும் கருத்துகள்.

**உணர்வுநிலைகள் (அவத்தைகள்)**

உயிர்கள், பரு உயிராகி(தூல சித்தாகி) தளையால் கட்டுண்டு நிற்பதாகும். ஆணவ மலத்தோடு மட்டும் இருந்த உயிர் பின்னர் மாயை கன்மங்களோடு கூடி இருந்து, பின்னர் மலங்கள் நீங்க இறைவனோடு கலக்கும். இவ்வாறு இருந்து வளர்ந்து கலக்கும் நிலையைச் சைவ சித்தாந்தம் மூன்று நிலையாகக் கூறுகின்றது. அந்த மூன்று நிலைகளே மூன்று அவத்தைகள் எனப்படும். இந்த நிலைகளைப் பற்றிய விளக்கங்களைத் திருமந்திரத்தின் 2142, 2226 ஆகிய இரண்டு செய்யுட்களும், விளக்குகின்றன. அருணந்தி சிவாசாரியாரும், அவற்றை யொட்டி இந்த மூன்று நிலைகளைப் பற்றி விளக்கிக் காட்டுகிறார். இருள்நிலை, மருள்நிலை, அருள்நிலை (கேவலம், சகலம், சுத்தம்) என்ற இம் மூன்று நிலைகளை,

"கேவல சகல சுத்தம்
என்றுமூன்று அவத்தை ஆன்மா
மேவுன்; கேவ லம்தன்
உண்மை, மெய் பொறிகள் எல்லாம்
காவலன் கொடுத்த போது
சகலனாம்; மலங்கள் எல்லாம்
ஓவின போது, சுத்தம்
உடையன், உற் பவம்து டைத்தே (பா.227)

என்ற பாடல் மூலம் விளக்குகிறார். உயிர் ஆணவ மலத்தோடு மட்டும் இருக்கும்நிலை இருள்நிலை எனப்படும். இதைக் கேவலம் என்றும் கூறுவர். இருள்நிலையாகிய கேவலத்தில் மூழ்கிக் கிடக்கும் உயிர்களுக்கு இறைவன் இரக்கம் கொண்டு ஆணவ மலத்தை நீக்குவதற்காக மாயை, கன்ம மலங்களைக் கூட்டுகின்றான். அப்பொழுது உயிரானது உடல், பொறி, உட்கருவிகளைப் பெறுகின்றது. அவ்வாறு பெற்றிருக்கும் நிலையைக் சகலம் என்று கூறுவர். இந்நிலையில் உயிரானது சிற்றிச்சை, சிறுதொழில் ஆகியவற்றை உடையதாகும். எனவே இந்நிலையை மருள்நிலை என்று கூறுவர். பின்பு மலங்கள் நீங்கிய விடத்து நின்மலனாகிய இறைவனை அடைந்து இன்புறுநிலை சுத்தம் எனப்படும். இந்நிலையில் உயிர் இறைவனது அருளையே பற்றுக் கோடாகக் கொண்டிருத்தலால் இந்நிலையே அருள்நிலை என்று வழங்குவர். இம்மூன்று அவத்தைகளையும் காரண அவத்தை என்று கூறுவர். இதில் இருள் நிலையால் தான் உயிர் உடம்பைப் பொருந்தி நல்வினை, தீவினைகளைச் செய்து பல பிறவிகளைப் பெற்று உழலுகிறது. (பா.229) இவ்வாறு உயிர்கள் உடம்பை எடுத்து வாழும் நிலையில் நினைவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்) என்னும் ஐந்து வேறுபட்ட நிலைகளை உடையனவாக இருக்கும். இந்த நிலைகள் கீழ் நிலை என்றும், மேல்நிலை என்றும், நடுநிலை என்றும் மூன்று வகைகளாக நிகழும் என்று விளக்குகிறார். (பா.223, 224)

**உயிர்களின் வகை**

இத்தகைய நிலைகளைக் கொண்டு விளங்குகின்ற உயிர்கள் அளவில்லாதன ஆகும். அவற்றை மூன்று வகைகளுக்குள் அடக்கலாம் என்றும் அருணந்தி சிவாசாரியார் கூறுகின்றார். (பா.254) இப்பாடலின் மூலம் உயிர்வகை ஒருமலத்தர்(விஞ்ஞானகலர்), இருமலத்தர்(பிரளயாகலர்), மும்மலத்தர்(சகலர்) என்ற மூன்று வகைப்படும் என்பது பெறப்படுகிறது. விஞ்ஞானகலர் ஆணவம் என்னும் ஒரு மலம் உடையவர். பிரளயாகலர் ஆணவம், கன்மம் என்னும் இருமலம் உடையவர். சகலர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலம் உடையவர். விஞ்ஞானகலர், பிரளயாகலர் என்ற இருவருக்கும் தீவிரம், தீவிரதரம் என்ற இருவகைத்திருஅருளின்

வீழ்ச்சி (சத்திநிபாதம்) நோக்கி முதல்வன் தானே உண்மை ஞானத்தை விளக்கி மலங்களை ஒழிப்பான். சகலருக்கு மந்ததரம் முதலிய நால்வகைத் திருஅருள் வீழ்ச்சி நோக்கி ஒரு குருமூர்த்தியின் மூலம் நின்று தீக்கை செய்து மலத்தை ஒழிப்பான் என்றும் கூறுகிறார். இவ்வாறு தத்துவ நிலையில் உயிர்களை மூன்று வகையாகப் பிரித்தாலும், பொது நிலையில் இரண்டு வகையாகப் பிரிக்கலாம் என்றும் குறிப்பிடுகின்றார். அதாவது சங்கமம், தாவரங்கள் என்று இருவகையாகப் பிரிக்கலாம் என்பார். (பா.131) சங்கமம் என்பது இயங்கியற் பொருள்களைக் குறிக்கும். (உயர்திணை). தாவரம் என்பது இயங்குதல் தன்மை இல்லாத பொருள்களைக் குறிக்கும் (அஃறிணை). எனவே உயர்திணை, அஃறிணைப் பகுப்பையும் அருணந்தி சிவாசாரியார் ஏற்கிறார் என்பது பெறப்படுகிறது. இந்த இரு நிலைகளில் இயங்கு பொருளைச் சேர்ந்த மனிதப் பிறவியே சிறப்பு என்பதையும் அவர் குறிப்பிடுகின்றார்.

"உண்டுபல் யோனி எல்லாம்
ஒழித்துமா னுடத்துஉ தித்தல்
கண்டிடில், கடலைக் கையால்
நீந்தினை காரி யம்காண்" (பா.179)

பலவாகிய பிறப்பு வேறுபாடுகளில் மனிதப் பிறவியில் பிறத்தல் கடலைக் கையினாலே நீந்திக் கரையேறினவன் செயல் போன்ற சிறப்புடைத்தாகும். எனவே அருணந்தி சிவாசாரியின் எண்ணத்தில் மனிதப் பிறவி மிகவும் உயர்ந்ததாக விளங்கியிருக்கிறது, என்பது தெரிகிறது. அவ்வாறு எண்ணுவதற்குரிய காரணத்தையும் அவர் தம் நூலில் குறிப்பிடுகின்றார்.

"மானுடப் பிறவி தானும்
வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத்து ஐந்தும் ஆகும்
அரன் பணிக்காக அன்றோ!" (பா.182)

சிவனை வழிபடுவதற்குரிய பேறு மனிதப் பிறவிக்கு இருப்பதால் அவர் அப்பிறப்பை மதித்திருக்கிறார் எனத் தெரிகிறது.

## உயிர்கள் பிறப்பும் - உடம்பு ஏற்பும்

இவ்வுலகில் உயிர்கள் பிறப்பதற்கும் இறப்பதற்கும் உரிய காரணத்தையும் குறிப்பிடுகிறார் ஆசிரியர். வினைப் பயன் நுகர்தற் பொருட்டு உயிர்கள் உடல்களைப் பொருந்தி இப்பூமியில் பிறந்திறந்து, மீண்டும் இப்பூமிக்கு வருவதும், சுவர்க்க, நரகங்களுக்குச் செல்லுவதுமாயிருக்கும். (பா.94) அவ்வாறு உயிர் உலகில் எடுக்கும் உடம்பு, ஐம்பூதங்களால் வேறுபட்டு உண்டாகிய பூதஉடம்பு எனப்படும். பரு உடம்பு நீங்கியவிடத்து நுண்உடம்பு (சூக்கும உடம்பு) ஏற்படும். அதாவது தன் மாத்திரை ஐந்தும், மனம் புத்தி, அகங்காரம் என்னும் மூன்றும் ஆகிய எட்டும் கூடிய உடம்பு ஆகும். நுண் உடம்பினின்றும் பூதசார உடம்பு ஏற்படும். இந்த உடம்பு சுவர்க்க, நரக இன்பதுன்பங்களை அனுபவிக்கும் உடம்பு ஆகும். (பா.126) இவையெல்லாம் இடைவிடாது நிகழும். இவ்வாறு உயிர்கள் பிறப்பை ஏற்று இறுதியில் இறைவனை அடைகின்றன.

## இறையும் - உயிரும்

உயிருண்டு என்பதையும், உயிர்களின் நிலைகளையும், வகைகளையும், ஏற்றிடும் உடம்புகளையும் கூறிய ஆசிரியர் உயிருக்கும், இறைக்கும் உள்ள தொடர்பையும் ஆங்காங்குச் சுட்டிக் காட்டியுள்ளார். இறை உலகுயிர்கள் தோறும் இருநிலையாகாது (அத்துவிதமாய்) கலந்து பிரிவின்றி நிற்பான் என்பது சித்தாந்தமுடிபு. (போதம். பா.2) அதனையே இவரும் அடியொற்றி அக்கருத்தை உவமையால் விளக்குகிறார். "அக்கரங்கள் தோறும் சென்றிடும் அகரம்போலச் சிவனும் சேர்ந்து நின்றனன்" (பா.92) இவ்வுவமை அனைத்துச் சித்தாந்த நூல்களிலும் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கதாகும். இவ்வாறு உயிர்களோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும், இறைவன் கலந்திருந்தாலும் உயிர்கள் இறைவனாகா, இறைவனும் உயிர்களாகா. (பா.93) அவ் உயிர்களுக்கு, விளைநிலம் அவரவர் கொள்கைக்குத் தக்க பயனைத் தருதல் போலவும், சூரியன் பக்குவமான தாமரை முகைகளை மலர்வித்தல் போலவும், அவ்வவ் உயிர்களின் கன்மத்திற்கேற்ப, ஏற்றத்தாழ்வான அறிவுகளையும், பக்குவமான உயிர்களுக்குப் பரந்துபட்ட (வியாபக) அறிவையும் கொடுப்பான்) என்றும் (பா. 232) குறிப்பிடுகின்றார்.

எனவே தான் இறைவன் அறிவிக்க அதனை உணரும் பாங்குடையது உயிர் என்று சித்ததாந்தம் கூறுகிறது. இதனைக் குறிக்க வந்த அருணந்தி சிவாசாரியார் ஆன்மா என்னும் உயிர் ஒவ்வொரு செய்தியையும் ஒவ்வொரு பொறியால் அறிதலாலும், அங்ஙனம் அறிந்தவற்றை மீள மறத்தலாலும், ஒருவன் அறிவிக்க அறிதலாலும், அறிகின்ற தன்னையும் தான் அறியாமையாலும், அது தானாக அறியும் இயல்புடையதல்ல என்று கூறி சிவன் அறிவிக்க அறியும் இயல்புடைத்து என்றும் குறிப்பிடுகிறார். (பா.233) இவ்வாறு தளையால் கட்டுண்ட - சார்ந்ததன் வண்ணமாக இருக்கின்ற - உணர்த்த உணர்கின்ற உயிர்களைப் பற்றிய கருத்துகளைக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

**தளை பற்றிய கருத்துகள்**

சைவ சித்தாந்த முப்பொருள்களில் மூன்றாவதாக விளக்கம் பெறுவது தளையாகும். தளை என்பதற்குக் "கட்டுவது" என்பது பொருள் "கயிறு" என்ற தமிழ்ச் சொல்லிற்கு வடமொழியாக்கம் பாசம் என்பதாகும். தமிழ்ச் சொல்லையும் வடசொல்லையும் சேர்த்துப் "பாசக்கயிறு" என்று வழங்கும் முறை இன்று நடைமுறையில் காணப் பெறுகிறது. இம்மலத்தைக் குறிக்கச் சைவ சித்தாத்தம் தந்த கலைச் சொற்களில் பாசம், தளை என்ற சொற்கள் கையாளப்படுகின்றன. தளை என்ற சொல் பாசத்திற்குரிய தமிழ்ச் சொல்லாகக் கருதப்பெறுகிறது. ஆயின் பாசத்திற்குத் தளை என்பதோடு அருணந்தி சிவாசாரியார் தடை என்ற சொல்லையும் பயன்படுத்துகிறார்.

"சத்திதன் வடிவே தென்னில்
தடையிலா ஞான மாகும்" (பா. 82)

இதில் வரும் தடை என்பதற்குச் சிவஞான முனிவர் "மறைப்பு" என்று பொருள் எழுதி அது மலத்தைக் குறிக்கிறது என்று குறிப்பிடுவார். எனவே அருணந்தி சிவாசாரியாரின் சொல்லாக்கமாகத் "தடை" என்ற சொல் அமைகிறது எனலாம். சைவசித்தாந்தக் கொள்கையின்படி பாசம் 5 வகைப்படும். ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன அவை.

"மும்மலம், நெல்லி னுக்கு
முளையொடு தவிடு உமிப்போல்,
மம்மர்செய்து, அணுவின் உண்மை
வடிவினை மறைத்து நின்று,
பொய்ம்மைசெய் போக பந்த
போத்திருத் துவங்கள் பண்ணும்.
இம்மலம் மூன்றி னோடும்
இருமலம் இசைப்பன், இன்னும்" (பா.176)

"மாயையின் காரி யத்தை
மாயேய மலமது என்றும்
ஏயும்மும் மலங்கள் தத்தம்
தொழிலினை இயற்ற ஏவும்
தூ யவன் தனதுஓர் சத்தி
திரோதான கரியது என்றும்
ஆய்வர் இம் மலங்கள் ஐந்தும்
அணுக்களை அணைந்து நிற்கும்" (பா.177 )

இப்பாடல்கள் மூலம் சைவ சித்தாந்தக் கொள்கையின்படி ஐந்து மலங்களை அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுவதை உணரலாம். ஐம்மலங்கள் பற்றி அவர் கூறும் கருத்துகள் நூலில் டலவிடங்களில் அமைந்துள்ளன. ஒருசேரக் கூறப்பெறவில்லை.

### ஆணவம்

ஆணவமலத்தைப் பற்றிய விளக்கத்தை மிகச் சிறப்பாகத்தனி ஒரு பாடலில் அருணந்தி சிவாசாரியார் விளக்கியுள்ளார். சித்தாந்தக் கொள்கைகளில் ஆணவம் பற்றி அறிந்துகொள்ளத் தெளிவான விளக்கமாக இப்பாடல் அமைந்துள்ளது எனலாம்.

"ஒன்றதாய், அநேக சத்தி
உடையதாய், உடனாய், ஆதி
அன்றதாய், ஆன்மா வின்தன்
அறிவொடு தொழிலை ஆர்த்து
நின்று, போத் திருத்து வத்தை

நிகழ்த்தி, செம்பினில் களிம்பு ஏய்ந்து
என்றும்அஞ் ஞானம் காட்டும்,
ஆணவம் இயைந்து நின்றே" (பா.170)

இப்பாடலிலிருந்து ஆணவமலமானது ஒன்றாய், எண்ணிறந்த சத்திகளை உடையதாய், உயிர்களோடு கூடி நிற்பதாய், தோற்றமில்லதாய், இருள்நிலையில் உயிர்களின் அறிவையும், தொழிலையும் மறைத்து நிற்பதாய், மருள்நிலை இன்ப நுகர்ச்சிக்கு வினை முதலாதல் தன்மை உண்டாக்குவதாய், செம்பினில் பொருந்திய களிம்பை ஒத்து அவ் உயிர்களோடு விரவி நின்று இருள்நிலை, மருள்நிலை என்ற இரண்டிலும் அஞ்ஞானத்தை நிகழ்த்துவதாய் உள்ளது என்பது பெறப்படுகிறது.

"கூறிய மூன்று மலத்தின் குணக்குறி
வேறுகிளக்கின் விகற்பம் கற்பம்
குரோத மோகம் கொலைஞர் மதநகை
விராய்எண் குணனும் ஆணவம் என விளம்பினை"

(இரு.இரு-4)

என்ற இருபா இருபஃதுப் பகுதி மூலம் ஆணவமலமானது விகற்பம், கற்பம், குரோதம், மோகம், கொலை. அஞர், மதம், நகை ஆகிய எண் குணங்களும் ஆணவ மலத்தின் விளைவால் பெறப்படுகின்றன என்பதை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். இக்கருத்து இருபா இருபஃதில் மட்டுமே காணப்பெறுகிறது என்பது குறிப்பிடத் தக்கது.

இச் செயல்களை உடைய ஆணவ மலம் உயிரின் குணமல்ல என்பதையும் ஆசிரியர் விளக்குகிறார். பாடாண வாதிகள் ஆணவ மலம் உயிரின் குணம் என்பார்கள். அதனைத் தவறு என்று அருணந்தி சிவாசாரியார் மறுத்துக் கண்ணொளியை மறைக்கும் படலம் கண்ணின் குணம் ஆகாதவாறு போல, உயிர் அறிவை மறைக்கும் ஆணவமலம் உயிரின் குணமாகாது என்று குறிப்பிடுகின்றார். (பா.175) இந்த ஆணவமலம் உயிரின் குணமில்லை என்றாலும் உயிரைப் பற்றியுள்ளதே ஆகும். உயிர்களுக்கு ஆணவம்

இல்லை என்றால் இறைவனைப் போலவே மாசற்று விளங்கும். ஆணவம் அறிவில்லாததாகையால் அது, உயிரைப் பற்றாது. இறைவனும், உயிர் ஆணவத்தைப் பற்றுமாறு செய்யமாட்டார். எனவேதான் உயிரோடு கூடிய அநாதி என்று ஆணவத்தைக் கூறுவார்கள்.

"........................ எம்மைவந்து அணைதரத்
தானோ மாட்டாது; யானோ செய்கிலின்
நீயோ செய்யாய் நின்மல னாயிட்டு".

(இரு.. இரு.-4:24-26)

என்று மேற்கூறப்பெற்ற செய்தியை இருபா இருபஃதில் அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகிறார். ஆணவம் உயிருக்குக் குணமாயினும் அது உயிரின் குற்றம் என்பதில் ஐயமில்லை. எனவே அக் குற்றம் நீங்குதல் உண்டு. அதை நீக்குகிறவன் இறைவன் ஆவான். அதை நீக்கவே மாய, கன்ம மலங்கள் அவனால் கொடுக்கப்பெறுகின்றன. ஆணவமலம் காலப்போக்கில் மேற்கூறப்பெற்ற மலங்களால் மெலிவு படுத்தப்படுகிறது. இறுதியில் முத்திநிலை அடைகிறபோது அணவம் இருந்தும் இல்லதுபோல் ஆகிறது. ஆகையால் தான் ஆன்மா ஆணவத்திலிருந்து நீங்கி முத்தியடைதலும், முத்தியிலும் ஆணவம் உளதாதலும் சைவ சத்தாந்தக் கொள்கையாகக் கூறப்பெற்றுள்ளது.

**கன்மம்**

கன்மம் என்பது, இறைவனோடும், மலத்தோடும் சம்பந்தப் பட்டிருக்கும் உயிரினால் செய்யப்படுதலில் அறம் எனவும், பாவம் எனவும் இரு வகைப்படும். இன்ப துன்பம் என்னும் இரு பலனையும் உயிர் நுகர்வதற்கு இக் கன்மம் ஏதுவாக உள்ளது. அப்பொழுது அது மூல கன்மமாக விளங்குகிறது. அம்மூல கன்மத்தின் காரியமாய், உயிர் உடம்பைப் பெறும்போது, நிகழுகின்ற செயலாய் அக்கன்மம் கான்மியம் எனப் பெயர் பெறுகிறது. இந்தக் கன்மத்தைப் பற்றி அருணந்தி சிவாசாரியார்,

"தன்மமோடு அதன்மம் ஆகி,
தான் இருபயனும் தந்து,
நன்மை தீமையினும் இன்பத்
துன்பினும் நாடிக் காண,-

முன்னமே ஆன்மா வின்தன்
மும்மலத்து ஒன்ற தாகி,
கன்மமும், மூலம் காட்டிக்
காமிய மலமாய், - நிற்கும்" (பா.129)

என்ற பாடலில் தொகுத்து விளக்கியுள்ளார். ஆன்மாவினால் செய்யப்படும் இரு வினைகளும் பாவ, புண்ணிய வடிவமாகி இன்ப, துன்பமாகிய இரு பயன்களையும் தருகின்றன. நன்மை, தீமைகளைச் செய்யும் பொழுதும், இன்ப,. துன்பங்களை அனுபவிக்கும் பொழுதும் அவை ஆராய்ந்து அறியப் படுகின்றன. இதனால் உயிரைப் பொருந்திய மும்மலங்களில் ஒன்றாக விளங்குகிறது. தனக்கு முதற்காரணம் உண்டு என்பதையும் காட்டி, கான்மீக மலம் எனும் பெயருடன் நிற்கக் கூடியதாகவும் உள்ளது எனக் குறிப்பிடுகின்றார். இக் கன்மமலம் இருத்தல், கிடத்தல், இருவினை இயற்றல், விடுத்தல், பிறரை இகழ்தல் ஆகிய ஆறு குணங்களில் தோன்றுவதை இருபா இருபஃதில் குறிப்பிடுகிறார்.

"இருத்தலும் கிடத்தலும் இருவினை இயற்றலும்
விடுத்தலும் பரநிந்தை மேவல்என் றெடுத்த
அறுவகைக் குணனும் கரமத் தருளினை"
(இரு.இரு.4:8-10)

இந்தக் கன்மவினையே ஆணவ மலத்தைச் சார்ந்து மாயையின் செயலாகிய உடம்புகளில் பொருந்தி உயிர்களைப் பிணிக்கிறது. அதனால் பலவகைப்பட்ட பிறப்பு வேறுபாடுகளை அடைந்து முதல்வன் ஆணையில் நடக்கிறது என்றும் (பா.130ல்) அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார். இந்தப் பலவகைப் பிறப்பு வேறுபாடுகளை உயிர் பெறுவதற்குக் கன்மமலம் காரணமாய் இருப்பதால் இந்தப் பலவகைப் பிறப்புகளைப் பற்றியும் ஆசிரியர் தொடர்ந்து விளக்கிச் செல்கிறார். உடம்பினுடைய வகைகள், இறைவனது அருளால் பிறப்புகள் மாறுபடுதல் ஆகியவற்றையும் ஆசிரியர் விளக்கிச் செல்கிறார். இந்த விளக்கம் பின்னர் எழுந்த தத்துவ நூல்களுக்கு வழிகாட்டியாக அமைந்தது எனலாம். இத்தைகைய நிலையில் கன்ம வினைகளின் இலக்கணத்தை ஆசிரியர் சுட்டிக் காட்டியுள்ளார்.

**மாயை**

உலகிற்கு முதற் காரணம் மாயை ஆகும். இம்மலம் நித்தமாகியும், அருவமாகியும், ஒன்றாகியும், உலகம் தோன்றி விரிவதற்குரிய வித்துப் போன்றதாயும் உள்ளது. அஃது அறிவில்லாததாய் எங்கும் நிறைந்ததாய் முதல்வன் செயலுக்குச் சத்தியாய், உலகம், நுகர்ச்சிப் பொருள், உடம்பு, கருவி எனக் காரியப்பட்டு உயிர்க்கும் பயன்படுவதாய், அழுக்காய், திரிபு உணர்வைச் செய்யக் கூடியதாய் உள்ளது என்று மாயைக்கு விளக்கம் தருகிறார்.

"நித்தமாய், அருவாய், ஏக
நிலையதாய், உலகத் திற்கோர்
வித்துமாய், அசித்தாய், எங்கும்
வியாபியாய், விமல னுக்கோர்
சத்தியாய், புவன போகம்
தனுகர ணமும் உயிர்க்காய்
வைத்ததோர் மலமாய், மாயை
மயக்கமும் செய்யும் அன்றே" (பா.143)

இந்த மாயை அஞ்ஞானம், பொய், அயர்வு, மோகம், சூனியம், மாச்சரியம், பயம் என்னும் ஏழு குணங்களைத் தோற்றுவிக்கும் என்று இருபா இருபஃதில் அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார். (பா.4)

இம்மாயையின் காரியங்களாகச் சிலவற்றைக் குறிப்பிடுகிறார். மாயையினின்று காலமும், அதன்பின் நியதியும், அதன்பின் கலையும், கலையினின்று வித்தையும், வித்தையினின்று அராகமும் தோன்றும். இவற்றை விளக்கி, 144 லிருந்து 158 ஆம் பாடல்கள் வரை கருத்துகளைத் தந்துள்ளார். இத்தகைய விளக்கங்கள் தத்துவங்கள் எனப் படுகின்றன, அவற்றுள் வித்தை முதலாகச் சொல்லப்பட்ட ஐந்தும் சுத்த தத்துவங்கள் ஆகும். மாயா தத்துவம் முதல் மூலகாரணம் ( பிரகிருதி ) வரை உள்ள 31ம் அசுத்த தத்துவங்கள் ஆகும். இத்தகு தத்துவங்கள் 36 என்று இறுதியில் தொகுத்தும் காட்டியுள்ளார். இந்த மாயையின் மூன்று வகை ஆசிரியரால் கூறப் பெற்றுள்ளன. மாயையின் காரியமான உலகம் மூன்று வகையாக இருப்பதைப்போல் ( சுத்தம், மிச்சிரம், அசுத்தம் ) அவை

தோன்றுவதற்குரிய மாயையும் மூன்றாக அமைகிறது. சுத்தமாயை என்றும், அசுத்த மாயை என்றும், மூலகாரண மாயை என்றும் அவற்றைச் சைவ சித்தாந்திகள் கூறுவர். மேலே கூறப்பெற்றிருக்கின்ற தத்துவங்களில் சுத்த மாயையிலிருந்து சுத்த தத்துவங்கள் தோன்றுகின்றன. அசுத்த மாயையினின்று காலம் முதலிய ஏழு தத்துவங்கள் தோன்றுகின்றன. மூலகாரண மாயையிலிருந்து 24 தத்துவங்கள் தோன்றுகின்றன. இவ்வாறு மாயையினுடைய விளக்கங்களை ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

### அருளலும் - மறைத்தலும்

இவ்விரு மலங்களைப் பற்றி முன் கூறிப்பிட்ட மாயையின் என்று தொடங்கும் பாடலில் ( பா.179 ) குறிப்பிடுகின்றார். மாயையின் செயல் கூட்டத்தை மாயேய மலம் என்று குறிப்பிடுவர். உயிர்களைப் பொருந்திய மும்மலங்களும், தத்தம் தொழிலைச் செய்யும்படி செலுத்தா நின்று சிவனுடைய ஒப்பற்ற சத்தியைத் திரோதாயி மலம் என்பர். இத்தகைய விளக்கம் தவிர வேறு விளக்கங்கள் இவ்விரு மலங்களுக்கும் அருணந்தி சிவாசாரியாரால் குறிப்பிடப் பெறவில்லை.

### மாயேயம்

மும்மலங்களுள் மாயை உலகிற்கு முதற்காரணமாய் உள்ளது. ஆதலின் அது, காரணநிலை, காரியநிலை என்ற இரண்டு நிலைகளையுடையது. அவற்றுள் மாயை என்பது காரண நிலையைக் குறிப்பதாகவே வைத்து, காரிய நிலையில் உள்ளதனை, மாயேயம் என வேறொரு பெயராற் குறிப்பர். இப்பெயர் அசுத்த மாயையின் காரியத்துக்கே பொருந்தும். ஏனெனில் மயக்கும் தன்மையுடைமையால் மாயை எனப்படுவது. அதவேயாகலின், சுத்த மாயையும் மாயையே எனினும், அது மயக்கத்தைச் செய்யாமையால், விந்து, குடிலை முதலிய பெயர்களால் கூறப்படும் அதன் காரியங்கள் வைந்தவம் என்று சொல்லப்படும்.

### திரோதாயி

ஆணவம் முதலிய நான்கினும் வேறாக உள்ள மற்றொன்று திரோதானம் என்பது. இது திரோதானகரி, திரோதாயி, என்றும் சொல்லப்படும். இஃது உண்மையில் மலமோ அல்லது பாசமோ

அன்று இறைவனது அருளாகிய சக்தியே. எனினும், இதுவே மேற்கூரிய பாசங்கள் தம் தொழிலைச் செய்யுமாறு அவற்றின் வழி நின்று அவற்றது சக்திகளை தூண்டுகின்றது. அதனாலே அம்மலங்களின் காரியங்களாகிய மறைப்புக்கள் நடைபெறுகின்றன. இஃது இல்லையேல், பாசங்களின் செயல்களாகிய மறைத்தல் தொழில்கள் நிகழமாட்டா. அதனால், இதுவே ஒரு மலமாக அல்லது பாசமாக சொல்லப்படுகின்றது இறைவன் செய்யும் தொழில்கள் ஐந்தில், மறைத்தல் என்பது, இவ்வாறு இத் திரோதான சத்தியயைக் கொண்டு மறைத்தலைச் செய்தலே ஆகும். இவ்விரு கருத்துக்களைக் கீழ்க்கண்ட சிவப்பிரகாசச் செய்யுட் தொடர்கள் தெளிவு செய்கின்றன.

"தேகமுறு கரணமொடு பூவன போகச்
செயலாரும் மாயேயத் திரட்சி" (பா:32)

"பாகமாம் வைகைநின்று திரோதான சக்தி
பண்ணுதலால் மலம் எனவும் பகர்வர்; இது பரிந்து

நாகமா நதிமதியும் பொதிசடையான் அடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்குந் தானே"(பா: 20)

"முற் சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்திய சத்திநிபாதம் திகழு மன்றே" (பா:48)

**குற்றங்களைப் போக்க வழி**

உயிரானது ஐந்து மலங்களையும் பொருந்தி போக்கு வரவுடைய பிறப்பு, இறப்புகளில் ஈடுபட்டு இப்பூமி, நரகம், சுவர்க்கம் என்ற மூவுலகங்களிலும் நிலையில்லாத கொள்ளிவட்டமும், காற்றாடியும் போலக் கணப்பொழுதில் சுழுன்று திரிந்து முதல்வன் ஆணைப்படி நடக்கின்றன. (பா 178) இந்த மலங்களிலிருந்து நீங்கி, வீடு பேற்றை எய்துவதற்கு வழிகளையும் அருணந்தி சிவாசாரியார் 179ஆம் பாடலிலிருந்து 189ஆம் பாடல்வரை குறிப்பிடுகின்றார். உயிர்களின் தோற்றத்தை அவர் நான்கு வகையில் பிரிக்கின்றார். முட்டையில் பிறப்பன் (மீன் பறவை), வியர்வையில் பிறப்பன( பேன் கிருமிகள்), வித்து, வேர், கிழங்கு என்பனவற்றைப் பிளந்து

தோன்றுவன(மரம், செடி), கருப்பையில் பிறப்பன(மிருகம், மனிதன்) என்பன அந்நால்வகை. இவற்றை விரித்தால் எணபத்து நான்கு நூறாயிரம் என விரியும், என்றும் குறிப்பிடுகின்றார்.(பா 189). இப்படிப்பட்ட பல்வகை பிறவிகளில் மனிதப் பிறவியை பெற்றுச் செல்வத்தினால் மயங்காது, வறுமையினால் சிறுமைப்பாடாது, பணிவும், அடக்கமும் கொண்டு சிவநெறியினைப் பின்பற்றி, சிவஞானத்தைப் பெற்று, சிவபிரானை அன்பால் வழிபட்டால், பிறப்பு, இறப்பு நீங்கி, வீடு பேறடைந்து இன்புறலாம் என்பது அப்பாடல்களின் சுருக்கமாகும். இவ்வாறு முப்பொருள்களின் விளக்கங்களை அருணந்தி சிவாசாரியார் முதல் நூல் வழி நின்று விளக்குகிறார் எனலாம்.

**முடிவுரை**

இந்த இயலில் சைவ தத்துவங்களின் வளர்ச்சி முறைகளும், வளர்ச்சி முறையில் அருணந்தி சிவாசாரியாரால் இடம் பெற்ற அளவை முறைகளும், அவரால் தம் இரு நூல்களில் கூறப்பெற்றுள்ள முப்பொருள்களின் தன்மைகளும் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன.

# 4.மெய்கண்டாரும் அருணந்தி சிவாசாரியாரும்

முன்னுரை; போதம் - சித்தியார் ஒப்பீடு - பா அமைப்பு - கருத்து ஒற்றுமை; தத்துவங்கள் - மாயையின் செயல்கள்-சுத்த தத்துவம் - அசுத்த தத்துவம் - காலம் - முறை - கலை - புலம் - அவா - தோன்றல் - மூலப்பகுதி - புத்தி தத்துவம் - அகங்காரம் - மனம் - அறிவுக்கருவிகள் - தொழிற்கருவிகள் - பூதநுட்பம் - பூதங்கள்; நால்வகை வாக்கு - விரி வாக்கு - தொகை வாக்கு - நுட்ப வாக்கு - நால்வகை வாக்குகளின் பயன் ; உணர்வு நிலை - காரண உணர்வு நிலை ; சத்தி - சத்தியின் தொழிற் வடிவங்கள் - வடிவங்களில் ஏற்படும் பயன் - சத்தியின் திருமேனிகள் ; சைவ சாதனங்கள் - தீக்கை வகைகள் - நால்வகை நெறிகள் ; அணைந்தோர் தன்மை ; குரு முறைமை - குருவின் இலக்கணம் - குருவின் இன்றியமையாமை - குருசேவைப்பயன் ; முடிவுரை.

## முன்னுரை

அருணந்தி சிவாசாரியார் தமக்குரிய ஐயங்களை மெய்கண்டார் பால் கேட்டுத் தெளிந்து, மெய்கண்டாரின் தலை மாணாக்கராய் விளங்கினார். சிவஞான போதத்தை மெய்கண்டாரின் திருவாக்காலேயே கேட்டுத் தெளிந்து, அவரின் ஆணையாலேயே சிவஞான போதத்திற்கு விரிநூலாகச் சிவஞான சித்தியாரைப் பாடியருளினார். எனவேதான் சிவஞான சித்தியார் உரையாணி என வழங்கப் பெறுகிறது. சிவஞான போதம் முதல் நூலாக விளங்கச் சிவஞான சித்தியார் வழிநூலாக விளங்குகிறது.

தொல்காப்பியம் நூல்களை வகைப்படுத்தும் போது முதல் நூல் என்றும், வழிநூல் என்றும் இருவகைகளாக வகைப்படுத்துகிறது.[1] நன்னூல் - முதல், வழி, சார்பு என மூன்று வகையாக வகைப்படுத்துகிறது.[2] தொல்காப்பியத்தின் படி வழி நூல் என்பது முதல் நூல் வழிப்பிறந்தது. தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்த்தல் என அது நால்வகைப்படும் என்ற இலகக்கணம் வழி நூலிற்குப் பெறப்படுகிறது. நன்னூலின்படி முன்னோர் நூல்களின் முடிபு முழுவதும் ஒத்து, வழி நூல் செய்வோர், தாம் வழி நூல்

செய்வதற்குரிய காரணமாகிய வேறுபாடுகளைக் கூறி, அவ்வேறுபாடுகள் உணர்வுடையோர் பலருக்கு இசைவாக இருப்பின் அந்நூல் உலகத்து அழியாது நின்று நிலவும் என்பது பெறப்படுகிறது. இவ்விரு இலக்கண நூல்களும் வழிநூலிற்கு வரையறுத்திருக்கும் இலக்கணங்களுக்கு ஏற்பவே சிவஞான சித்தியார் அமைந்துள்ளது.

தொல்காப்பியர் குறித்திருக்கின்ற நான்குவகை வழிநூல்களில் சிவஞான சித்தியார் "விரித்தல்" வகையில் அடங்கும். விரித்தல் என்பதற்கு முதல்நூலில் தொகுத்து கூறப்பெற்று, விளங்காது நின்றதனை விளக்கமாக விரித்து கூறல் என்ற பொருளுரைப்பார் பேராசிரியர். இதன்படியே சிவஞான போதத்தில் 12 சூத்திரங்களிலும்- அவற்றின் விளக்கமாக அமைந்த 81 வெண்பாக்களிலும் அமைந்த தத்துவக் கருத்துகளைச் சிவஞான சித்தியாரில் 308 விருத்தங்களாக அருணந்தி சிவாசாரியார் விரிவாக்கியுள்ளார்.

## போதம் - சித்தியார் ஒப்பீடு

### பா அமைப்பு

சிவஞானபோதத்தில் அமைந்துள்ள 12 சூத்திரங்களுக்கு உதாரண வெண்பாக்களும், சித்தியாரில் விருத்தப்பாக்களும் கீழ்கண்டவாறு அமைந்துள்ளன.

| சூத்திரம் | சிவஞான போதம் | சிவஞானசித்தியார் |
|---|---|---|
| 1 | 5 வெண்பா | 70 விருத்தங்கள் |
| 2 | 10 வெண்பா | 96 விருத்தங்கள் |
| 3 | 7 வெண்பா | 4 விருத்தங்கள் |
| 4 | 7 வெண்பா | 40 விருத்தங்கள் |
| 5 | 4 வெண்பா | 9 விருத்தங்கள் |
| 6 | 6 வெண்பா | 9 விருத்தங்கள் |
| 7 | 5 வெண்பா | 4 விருத்தங்கள் |
| 8 | 9 வெண்பா | 39 விருத்தங்கள் |

| சூத்திரம் | சிவஞான போதம் | சிவஞானசித்தியார் |
|---|---|---|
| 9 | 8 வெண்பாக்கள் | 12 விருத்தங்கள் |
| 10 | 6 வெண்பாக்கள் | 6 விருத்தங்கள் |
| 11 | 6 வெண்பாக்கள் | 12 விருத்தங்கள் |
| 12 | 8 வெண்பாக்கள் | 7 விருத்தங்கள் |
| | 81 | 308 |

இப்பட்டியலிலிருந்து சிவஞான போதக் கருத்துகள் சித்தியாரில் அதிகமான விளக்கங்களைப் பெற்றிருக்கின்றன என்பது தெளிவாகும். சிவஞான போதத்தில் முதல் சூத்திரம் 5 வெண்பாக்களைப் பெற்றிருக்க - சித்தியார் அவ்வெண்பாக்கள் கூறிய கருத்துகளை 70 விருத்தங்களால் விரித்துக் கூறுகிறது. இரண்டாம் சூத்திரக் கருத்துகளை 10 வெண்பாக்கள் சிவஞான போதத்தில் விளக்கிடச் சித்தியார் 96 விருத்தங்களால் விளக்குகிறது. நான்காம் சூத்திர விளக்கத்தில் சிவஞானபோதம் 7 வெண்பாக்களைப் பெற்றிருக்கச் - சித்தியார் 40 விருத்தங்களைப் பெற்றிருக்கிறது. சிவஞான போதம் எட்டாம் சூத்திரம் 9 வெண்பாக்களைப் பெற்றிடச் - சித்தியார் 39 சூத்திரங்களைப் பெற்றிருக்கிறது. இத்தகு நிலையில் சிவஞான போதக் கருத்துக்களில் முதல், இரண்டு, நான்கு, எட்டு சூத்திரங்களில் சித்தியார் அதிக விளக்கத்தைப்பெற்று விரிநூலாக அமைந்துள்ளது. எனவே தொல்காப்பிய வழிநூல் இலக்கணத்தில் விரிநூல் இலக்கணத்தைச் சிவஞான சித்தியார் பொருந்தியிருக்கிறது என்பது பெறப்படுகிறது.

சித்தியார் விரிவாக்கிக் கூறும் விளக்கங்களுக்கு ஒருசில எடுத்துக்காட்டுகள் :- சிவஞான போதத்தின் முதல் சூத்திரத்தின் முதல் அதிகரணம் "ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடையது" என்ற கருத்தை உடையது. அதாவது உலகம் முத்தொழிலை உடைத்து என்று கூறப்பெற்றுள்ளது. இதனை, "பூதாதியீறும்" என்று தொடங்கும் வெண்பா மூலம் மெய்கண்டார் விளக்கியுள்ளார். இம்முத் தொழிலைப்பற்றி அருணந்தி சிவாசாரியார் சிவஞான சித்தியாரில் பிறமதக்கருத்துகளோடு விளக்கி (22 முதல் 36 வரையுள்ள பாடல்களால்) கூறுகிறார். உலகாயதரை மறுத்து முத்தொழில் உண்டு என்றும், சௌத்திராந்திகரை மறுத்து முத்தொழில்

உண்டு என்றும்; இல்பொருள் தோன்றாது உள்பொருள் தோன்றும் என்றும், உலகம் காரியப்பொருளாதலால் உள் பொருளே என்றும், மீமாஞ்சகர் மதத்தை மறுத்து உலகம் தோற்ற அழிவுகளை உடையது என்றும், உடம்பைப் போல உலகமும் தோன்றி அழியும் என்றும், உலகம் தோன்ற மாயை முதற்காரணம் என்றும், அம் மாயையிலிருந்து காரியமாகிய உலகம் காரண காரிய முறைப்படித் (சற்காரிய) தோன்றி ஒடுங்கும் என்றும் விரித்துரைக்கிறார். அதுபோல உலகிற்கு முதல்வன் சிவன் என்ற முதல் சூத்திர மூன்றாம் அதிகரணக் கருத்தை மெய்கண்டார் "ஒன்றலா" என்று தொடங்கும் வெண்பாவில் விளக்கியிருக்க அருணந்தி சிவாசாரியார் 38 - 51 வரை உள்ள சித்தியார் பாடல்களில் விரிந்த விளக்கம் தருகிறார். உலகத் தோற்றத்திற்குச் சிவபெருமான் நிமித்த காரணம் என்பதையும், சிவபெருமான் உலகத்தைத் தோற்றுவிக்கும் முறைமையையும், சுத்த, அசுத்த உலகங்களின் இயல்பையும், முதல்வன் சித்துரு மன்னிநின்று மருவிடும் முறைமையையும், அது பற்றிக் கட்டுப்படும் (தொடக்குறும்) முறைமையையும் அப்பாடல்களில் விளக்கியுள்ளார்.

சிவஞான போதத்தின் 2ஆம் சூத்திரத்தின் நான்காம் அதிகரணத்தால், "எங்குமுளன்" என்று தொடங்கும் வெண்பாவில் "இறைவன் ஒரு பொருளென்றும், இரு பொருளென்றும் பிரித்தரியாதவாறு எல்லாவற்றிலும் பரவி நிற்பான்" என்ற கருத்துக் கூறப்பெற்றுள்ளது. இக்கருத்தைச் சிவஞான சித்தியாரில் இரண்டாம் சூத்திரத்தின் இறுதிப் பகுதியில் அருணந்தி சிவாசாரியார் விளக்கமாக 163,164,165,166 ஆகிய நான்கு பாடல்களில் குறிப்பிடுகிறார். இறைவன் 36 தத்துவங்களைக் கடந்து, உலகில் சத்திவடிவாய், உயிர்ப் பொருளோடன்றி (சேனப் பிரபஞ்சம்) உயிரல் பொருளோடும் (அசேதனப் பிரபஞ்சத்தோடும்) இரண்டறக் கலந்து (அத்துவிதமாய்) எங்கும் நீங்காது நிற்பன் என்பதனையும், அவ்வாறு நிற்கும் அவனுடைய நிலையோடு சிவமும், சத்தியும் தோய்வின்றி நிற்பதையும் விளக்கமாக எடுத்துரைக்கின்றார்.

சிவஞான போதம் 4ஆம் சூத்திரத்தின் 3 ஆம் அதிகரணத்தில் இடம் பெற்றுள்ள இரண்டு வெண்பாக்களில் உயிரின் உணர்வு நிலைகள் (அவத்தைகள்) பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. "ஒன்றணையா" என்று தொடங்கும் வெண்பாவில் உணர்வு நிலைகளில் எந்தெந்த இடத்தில் எத்தனை கருவிகள்

செயல்படுகின்றன என்பது விளக்கப் படுகிறது. "இலாடத்தே" என்று தொடங்கும் அடுத்த வெண்பாவில் அவ்வுணர்வு நிலைகள் கீழ் உணர்வு நிலைகளாகவும், மேல் உணர்வு நிலைகளாகவும் எவ்வாறு செயல்படுகின்றன என்பதும் விளக்கப் படுகிறது. இச்செய்திகளைச் சித்தியார் 8 விருத்தங்களில் விளக்கமாக உணர்த்துகிறது.

சிவஞான போதத்தின் எட்டாம் சூத்திரத்தின் இரண்டாம் அதிகரணத்தில் மூன்று வெண்பாக்கள் மூலம் இறைவன் குருவாக வடிவெடுத்து மலநீக்கம் செய்வன் என்ற செய்தி கூறப்படுகிறது. இவ்வாறு கூறும்போது குருவாக வருவார் என்பது மட்டும் சிவஞான போதத்தில் அமைந்திருக்க - சித்தியார் அக்குருவாக வந்த இறைவன் எத்தகைய தீக்கை முறைகளால் அம்மல நீக்கத்தைச் செய்வான் என்பதை 255ஆம் பாடல் முதல் 262ஆம் பாடல் வரை விரித்து உரைக்கிறார்: இவ்வாறு பல சூத்திரங்களில் விரிவான விளங்கங்கள் அமைந்து விரிவுநூலில் அமைப்பில் சித்தியார் அமைந்துள்ளது.

நன்னூலில் கூறிய இலக்கண விதிகளின்படியும் சிவஞான சித்தியார் அமைந்துள்ளமை மெய்கண்டாரின் தத்துவ முடிபை ஒத்து அருணந்தி சிவாசாரியார், தம் நூலில் தத்துவ விளக்கங்களைத் தந்துள்ளார். மெய்கண்டாரின் பன்னிரண்டு சூத்திரக் கருத்துகளை அப்படியே ஏற்று 12 சூத்திரங்களாக, விருத்தப்பா வடிவில் அமைத்துள்ளார் ஆசிரியர். சிவஞான சித்தியாரில் காணப்பெறுகின்ற சூத்திரங்களின் முதல் விருத்தப் பாடல் மெய்கண்டாரின் சூத்திர விளக்கமாக அமைந்திருப்பதால் "முன்னோர் நூலின் முடிபு ஒருங்கொத்து" என்ற நன்னூல் இலக்கணம் அமைந்துள்ளமை பெறப்படுகிறது.

**கருத்தொற்றுமை**

அமைப்பால் மெய்கண்டாரின் முடிபை ஒருங்கொத்த அருணந்தி சிவாசாரியார் தத்துவக் கருத்துகளிலும் மெய்கண்டாரின் முடிபையே ஏற்று வழி மொழிந்துள்ளார்.

1. உலகத்தில் தோன்றும் பொருள் அவ்வவற்றிற்குரிய காலத்தில் தோன்றும் என்பதனை போதம் "ஒன்று ஒன்றின்" (உதாரண வெண்பா:1) என்று குறிப்பிடும்

இதனைச் சித்தியார்

*"பயில்வித் தெல்லாம்*
*காரிடம் அதனிற் காட்டும்*
*அங்குரம் கழியும் வேனில்"* (பா : 29)*

என்று குறிப்பிடும்.

2. உலகத்தைத் தோற்றுவிப்பது மாயையேயாயினும், அது கடவுளுடைய சத்தியில் அடங்கி நின்று அச்சத்தி திருவுளம் பற்றிய (சங்கற்பித்த) பொழுது உலகத்தைத் தோற்றுவிக்குமே அல்லது தானே தனி நின்று உலகத்தைத் தோற்றுவிக்காது என்ற கருத்தைப் போதம்,

"வித்துண்டா" எனத் தொடங்கும் வெண்பாவில் "அத்தன் தாள் நிற்றல்" என்று குறிப்பிடும். இதனையே சித்தியார்,

*"உயிரவை ஒடுங்கிப் பின்னும் உதிப்பதென் அரன்பால்"* என்றும் (பா : 52)
*"உலகு அவன் உருவில் தோன்றி ஒடுங்கும்"* என்றும் (பா : 68)
குறிப்பிடும்.

3. படைத்தல் முதலிய தொழில்கட்கு வினைமுதற்(நிமித்த) காரணாய் நிற்கின்ற இறைவனுக்கு அவனது ஆணை எனப்படும் சிற்சக்தியே நேரான துணைக் காரணம் என்பதும், இருவினைகள் அதன்வழித் துணைக் காரணங்கள் என்பதும், "இரு வினையின் போக்குவரவு புரிய ஆணையின்" என்ற போதத்தின் இரண்டாம் சூத்திரப் பகுதியில் விளக்கப் படுகிறது. இதனைச் சித்தியார்,

*"நேரில் மண் மாயையாகத் திரிகைதன் சத்தியாக*
*சூரியன் குலாலனாய் நின்றாக்குவன் அகிலமெல்லாம்"* (பா : 38)

என்று குறிப்பிடுகிறது.

4. முன்செய்த வினைப்பயனை நுகர்தற் பொருட்டு இப்பிறப்பில் செய்யப்படுகின்ற முயற்சியானே வரும் வினை, வரும் பிறப்பிற்கு உளதாகும் என்பதனை "உள்ளதே தோற்ற" என்று தொடங்கும்

வெண்பாவில் முற் செய்வினை உள்ளடைவே உள்ளதாம் என்ற தொடர் குறிக்கிறது. இதனைச் சித்தியார்,

*"மேலைக்கு வித்துமாகி விளைந்தவை உணவுமாகி*
*ஞாலத்தில் வருமா போல நாம் செய்யும் வினைகளெல்லாம்"* (பா:102)

என்று குறிப்பிடும்.

5. உறக்கத்தில் பிராணவாயு இயங்கவும், கருவிகளால் மடிதலால் அக்கருவிகளை இயக்குவது பிராணவாயு அன்று என்பதனைக் "கண்டறியும்" எனத் தொடங்கும் வெண்பாவில், "உண்டாவினையின்றி உயிர்த்தலால்" என்ற தொடர் விளக்குகிறது.

இதனைச் சித்தியார்,

*"அறிந் திடாதுடல் உறக்கத்து அறிவின்மை கரணம் இன்மை*
*அறிந்திடும் முதலியாகின் அதுநிற்கக் கரணம் போகாது"* (பா : 190)

என்று குறிப்பிடும்.

6. "அகார உகாரம் அகங்காரம் புத்தி" என்ற போதத்தின் வெண்பாத் தொடக்கவரிக் கருத்தைச் சித்தியாரில்,

*"அவ்வுடன் உவ்வும், மவ்வும் மனம் புத்தி அகங்காரங்கள்"* (பா : 193)

என்று குறிப்பிடுகிறது.

7. "அமைச்சர சேய்ப்ப" என்ற சிவஞான போதத்தின் நான்காம் சூத்திரக் கருத்தைச் சித்தியார்,

*படைகொடு பவனி போதும்*
*பார்மன்னன், புகும்போது, இல்லின்*
*கடைதொறும் விட்டு விட்டு,*
*காவலும் இட்டு, பின்னர்*
*அடைதரும் தனியே, அந்தப்*
*புரத்தினில்; அதுபோல், ஆன்மா*

*உடலினில், அஞ்சு அவத்தை*
*உறும், உயிர் காவலாக"* (பா : 222)

எனக் குறிப்பிடும்.

8. சிவஞான போதத்தில் உயிர், கருவிகளோடு கூடி நின்று எய்தும் உயிர் உணர்வு நிலைகள் மட்டுமே "இலாடத்தே" என்று தொடங்கும் வெண்பாவில் கூறப்பெற்றுள்ளது. சுத்தஅவத்தைகள் கூறப்படவில்லை அதனை அவ்வெண்பாவில் 'அது ஆங்கு' என்ற குறிப்பால் காட்டப் பெறுகிறது. இவ்வாறு போதம் குறிப்பால் காட்டும் பாங்கினையும் சித்தியார் அவ்வாறே கையாளுகிறது.

*"பிறவிலா ஞானத்தோரும் பிறப்பற அருளால் ஆங்கே*
*குறியொடு அஞ்சவத்தை கூடுவர் வீடு கூட"* (பா : 225)

9. திரியக் காணல், இரட்டுறக் காணல், தெளியக் காணல் (உருவ, தரிசன, சுத்திகள்) ஆகிய மூன்றும் அதி தீவிரப் பக்குவம் உடையார்க்குக் குரு உபதேசத்தை கேட்டவுடனே விரைய நிகழ்ந்து முற்றுப் பெறும். ஏனையோர்க்கு அவ்வாறின்றிக் கேள்வியின் பின் சிந்தித்தல், தெளிதல் என்னும் முறையில் மெல்ல நிகழ்ந்தே முற்றுப்பெறும். அதனால் அங்ஙனம் மெல்ல நிகழும் நிகழ்ச்சிக்கு உரிய கருத்துகளை போதத்தின் ஒன்பது, பத்தாம் சூத்திரங்கள் கூறுகின்றன. இதனைச் சித்தியார்,

*"நேச மொடும் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்*
*நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி*
*ஆசையொடும் அங்குமங்கு மாகி யலமருவோர்*
*அரும்பாசம் அறுக்கும் வகை அருளின் வழி உரைப்பாம்"*
(பா:291)

என்று குறிப்பிடும்.

10. "நிற்குணனாய்" என்று தொடங்கும் சிவஞான போத வெண்பாவில், இறைவன் உலகம் முற்றும் நீங்கிய வழி, அதனது பரவிய அறிவில் நீங்காது, நிலைப்பெறுவதாய், சோதிக்குட் சோதியாய்த் தோன்றுவான் என்பதை, "ஆனா அறிவாய்த் தோன்றானோ" என்ற பகுதி குறிப்பிடும்.

இதனை சித்தியார்,

> *"தூங்காவிழிச் சோதியும் உட் சோதியும் பெற்றார் போல்*
> *சோதிக்குள் சோதியாய் தோன்றிடுவான் காணே"* (பா : 290)

என்று குறிப்பிடும்.

11. "கண்டதை அன்று" என்று தொடங்கும் வெண்பாவின் கருத்தை, "கண்ட இவை" (பா : 298) என்று தொடங்கும் சித்தியார் பாடல் தொகுத்துரைக்கின்றது.

12. சிவஞானப் போதப் பதினோராம் சூத்திரத்தின், "உயிர்கள் முதல்வனின் சத்தி தன்னிடத்தில் கலத்தல் இல்லாமல், அறிவிக்க அறிவதாகிய ஆன்ம அறிவு விளக்கம் பெறாது" என்ற ஏதுவின் பொருளை, "எவ்விடத்தும்" (பா : 300) என்று தொடங்கும் சித்தியார் பாடல் விளக்குகிறது.

**உவம ஒற்றுமை**

இவ்வாறு முன்னோர் நூலை அமைப்பிலும், கருத்து முடிபிலும் முழுவதும் தழுவித் தம்நூலை அமைத்த அருணந்தி சிவாசாரியார் உவமைகளையும் அவ்வாறே போற்றிக்கொண்டுள்ளார். தத்துவங்களுக்கு ஒரே அமைப்பில் உவமைகளை அமைப்பது இயற்கை என்றாலும் அருணந்தி சிவாசாரியார் மெய்கண்டாரின் மொழியைப் பொன்னேபோல் போற்றித் தம் நூலில் இடம்பெறச் செய்தமை சிறப்புடைத்தாகும். அவர் கையாண்டிருக்கும் உவமைகள் சில:

1. *"அக்கரங்கள் இன்றாம் அகர உயிர் இன்றே"*

   - போதம்,சூ:2,அதி:1,வெண்:2.

   *"அக்கரங்கள் தோறும் சென்றிடும் அகரம் போல"*

   - சித், சுப, பா:92.

2. *"அருக்கண் நேர் நிற்பினும் அவ்விருளே காணாற்கு"*

   - போதம்,சூ:5,அதி:2,வெண்:1.

   *"கண்ணிலார்க்கு ஒளியே இருளாம்"* - சித், சுப; பா:317.

3. *“எரி கதிரின் முன் இருள்போல் ”* - போதம்,சூ:10,அதி:2.வெண்:3.
*“அருக்கன் புகுத இருள்போல் ”* - சித், சுப, ; பா:314.
*“அலர் கதிர் முன் இருள்போல் ”* - சித், சுப, பா:279.

4. *“கண்போல் அவையங்கள் காணா ”* - போதம்,சூ:8,அதி:4.வெண்:3.
*“அவயங்கள் கண்போலக் காணா ”* - சித், சுப, ; பா:290.

5. *“கதிர் முன் இருள்போல் ”* - போதம்,சூ:7,அதி:1.வெண்:1.
*“இருள் இரவி முன்போல் ”* - சித்; சுப, பா:249.

6. *“கருடாசனத்தில் தீர்விடம் போல் ”* - போதம்,சூ:9,அதி:2.வெண்:2.
*“கருடதியானத்தால் விடம் ஒழியும் ”* - சித், சுப; பா:298.

7. *“கனல் சேர் இரும்பன்ன ”* - போதம்,சூ:9,அதி:3.வெண்:2.
*“எரியிரும்பைச் செய்வது போல் ”* - சித். சுப, பா:321.

8. *“காணும் கண்ணிற்குக் காட்டும் உளம்போல்”* -போதம்,சூ:11.
*“கண்டிடும் தன்மையுடை கண்ணுக்கே உயிர் காட்டி”*-சித்,சுப,பா:310.

9. *“தண்கடல் நீர் உப்புப் போல ”* - போதம்,சூ:7,அதி:3.வெண்:3.
*“வாரி நீர் லவணம் போலும் ”* - சித், சுப, பா:251.

10. *“தற்பணம் போல் காட்டலாம் ”* - போதம்,சூ:3,அதி:1.வெண்:1.
*“தற்பணத்தை விளக்க வந்திடும் ஒளிபோல்”*- சித், சுப, பா:301.

11. *“நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பிற் களிம்பும்”*- போதம்,சூ:2,அதி:2.வெண்:12.
*“நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப் போல் ”* - சித், சுப, பா:176.
*“செம்பினிற் களிம்பேய்த்து ”* - சித்; சுப, பா:170.

12. *“பன்னிறம் காட்டும் படிகம் போல் ”* - போதம்,சூ:8,அதி:3.வெண்:50.
*“பன்னிறங்கள் அவை காட்டும் படிகம் போல் ”* - சித்; சுப, பா:289.

13. *“கடல் திரையே போன்று ”* - போதம்,சூ:4,அதி:1.வெண்:23.
*“பவ்வமுந் திரையும் போலும் ”* - சித்; சுப, பா:193.

14. *"மலர் மணம் போல்"* - போதம்.சூ:7.அதி:3.வெண்:42.

*"நாற்றம் மலரினில் வருதல் போலும்"* - சித். சுப, பா:250.

15. *"வலித்திரும்பைக் காந்தம் வசம் செய்தல் போல"*

-போதம்.சூ:11.அதி:2.வெண்:71.

*"இரும்பைக் காந்தம் வலித்தாற் போல்"*- சித்; சுப, பா:321.

16. *"வித்துண்டாம் மூலம் முளைத்தவா தாரகமாம்"*

- போதம்.சூ:1.அதி:2.வெண்:3.

*"மரங்கள் வித்தில் கதித்தெழும்"* - சித்; சுப, பா:139.

இவ்வாறு தத்துவ விளக்கங்களுக்குரிய உவமைகளையும், சிவஞான போதத்திலிருந்து பெற்றுத் தம் நூலில் அருணந்தி சிவாசாரியார் இடம் பெறச் செய்திருப்பது வழிநூல் இயல்பைக் காட்டுகிறது. இவை தவிர முன்னோர் நூலின் முடிபொருங்கொத்த அருணந்தி சிவாசாரியார் பின்னோன் வேண்டும் விகற்பங் கூறலுக் கேற்பச் சில விளக்கங்களையும் தம் நூலில் அமைத்துள்ளார். விகற்பம் என்பதற்குச் சிவஞான முனிவர், பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல (நன். நூ : 462) என்றவற்றை இறந்ததுவிலக்கல், எதிரது போற்றல் என்றும் உத்திகளான் விலக்கியும், போற்றியும் கூறுதல் முதலியன என்பர்.[3] அருணந்தி சிவாசாரியார் தம் முதல் நூலான சிவஞான போதத்தின் காலத்திலேயே வாழ்ந்தவர். ஆதலால் - சிவஞான போதத்தில் காணப்பெற்று, இவர் காலத்தில் வழக்கத்தில் இறைந்தவை யாதும் இல்லை. எனவே சிவஞான போதம் கூறியவற்றைத் தம் நூலில் விலக்கவேண்டிய நிலைக்கவர் ஆளாக வில்லை. சிவஞான போதத்தின் கருத்துகளை விளக்கியுரைக்கும் பாங்கினை மட்டுமே கொண்டார். அவ்வாறு விளக்கும் போது முதனூல் ஆசிரியர் குறிப்பாகக் காட்டியதைத் தாம் அறிந்த வடமொழி நூல்கள், வேத ஆகமங்கள், திருமுறைகள் ஆகியவற்றின் துணை கொண்டு தொடர்புடைய வேறு செய்திகளையும் சேர்த்து நூலை அமைத்துள்ளார்.

அவ்வாறு அமைக்கப் பெற்றவை தத்துவ விளக்கங்கள், நால்வகை வாக்குகள், சத்தியின் இலக்கணம், அவத்தை இலக்கணம், சைவ சாதனங்கள், அணைந்தோர் தன்மை முதலியன. அவற்றை அருணந்தி சிவாசாரியார் விளக்கும் திறம் பின்னர் எழுந்த சைவத் தத்துவ நூல்களுக்கு வழிகாட்டியாக அமைந்தது எனலாம்.

**தத்துவங்கள்**

சைவ சித்தாந்தக் கொள்கைகளில், அருணந்தி சிவாசாரியார் காலத்திற்குப் பிறகு சிறப்பிடம் பெற்றவைகளில் மூவகைத் தத்துவங்கள் மிகவும் குறிப்பிடத் தக்கன ஆகும். தத்துவங்கள் என்பதற்கு "உண்மைப் பொருள்" என்பது பொருளாகும். உண்மைப் பொருளிலிருந்து தோன்றும் காரியங்களிலும் உண்மைப் பொருள் பரவி நிற்பதால் அக் காரியங்களையும் தத்துவங்கள் என அழைப்பர்.[4] சைவசித்தாந்தக் கொள்கைப்படித் தத்துவம் என்பது கருவி என்று பொருள்படும் என்று கூறுவாரும் உண்டு.[5] இவ்வாறு உண்மைப்பொருள் என்றும், 'கருவி' என்றும் இரு பொருள்களைப் பெற்றுள்ள தத்துவம் என்னும் சொல் வடசொல்லாகும். தத், த்வம் என்ற சொற்களின் கூட்டுறவே தத்துவம் என்றாயிற்று. தத் "உள்ளது" என்பதையும், த்வம் என்பது "தன்மை" என்பதையும் குறிக்கும். எனவே வடமொழியில் தத்துவம் என்ற சொல் உண்மைப் பொருளைக் குறிக்கவே உண்டான சொல்லாகும். அவ்வடசொல் தம் பொருளில் திரியாது தமிழில் வழங்கலாயிற்று. பொதுவாகத் தத்துவங்கள் இரு வகைப்படும். சித்து தத்துவம் என்றும், சடத் தத்துவம் என்றும் அவை குறிக்கப் பெறும். சித்து தத்துவத்தில் சிவனும், சீவனும் அடங்குவர். மற்றவை சடத் தத்துவத்தில் அடங்கும். சைவ சித்தாந்தம் உண்மைப் பொருளாக உள்ளனவற்றை சிவ தத்துவம் என்றும், வித்தியா தத்துவம் என்றும் ஆன்ம தத்துவம் என்றும் மூன்றாகக் கூறும்.

சைவத் தத்துவத்தில் மூன்று வகையாக அமைந்த தத்துவங்கள் முப்பத்தாறாக விரித்துக் கூறுப்பெறும். 36 தத்துவங்களும் சைவ சமயக் கொள்கைகளில் பழங்காலந் தொட்டே இடம் பெற்று வந்திருக்கின்றன என்றாலும், அருணந்தி சிவாசாரியார் தான் அந்தத் தத்துவங்களைத் தோற்ற முறைப்படி - சைவ சித்தாந்தக் கொள்கையில் இடம் பெறச் செய்தவர். திருமூலர் 36 தத்துவங்களையும் குறிப்பிட்டுள்ளார்.

*"முப்பதுமாறும் படிமுத்தி யேணியாய்*
*ஒப்பிலாப் பேரண்டத் துள்ளொளி புக்கு*
*செப்பரிய சிவங்கண்டு நின்றவர்*
*அப்பரிசாகி அமர்ந்திருந் தாரே"* -திருமந்-பா:126

இப்பாடலில் அவர் 36 தத்துவங்களையும் முத்தி நெறிக்கு ஏணிப் படிகளாக்கி-அவற்றில் ஒவ்வொன்றாக ஏறிக் கடந்து-இன்பவடிவான, உள்ளொளியான சிவத்தைக் காணலாம் என்று குறிப்பிடுகின்றார், திருமூலர் கருத்துப்படி 36 தத்துவங்களும் இறைவனைக் கண்டிடச் - சிவமாக ஆயிடக் கருவிகளாகின்றன என்பது பெறப்படுகிறது. இதே கருத்தில்தான் சேக்கிழாரும்,

> *“பேணு தத்துவங்கள் என்னும் பெருகும் சோபானம் ஏறி*
> *ஆணையாம் சிவத்தைச் சார. அணைபவர் போல”*
>
> (பெரி. கண்ண. பா : 103)

என்று குறிப்பிட்டுள்ளார். இத்தகைய நிலையில் சைவ இலக்கியங்கள் 36 வகையாகக் கூறிய தத்துவங்களை மெய்கண்டார் குறிப்பாகச் சுட்டியிருக்கின்றாரே அன்றி, வெளிப்படையாகச் சுட்டவில்லை. நான்காம் சூத்திரத்தில் ‘அந்தக் காரணம்’ என்றும், எட்டாம் சூத்திரத்தில் “ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென்” என்றும் தொடர்கள் அமைந்துள்ளன. இத்தொடர்களில் உட்கருவிகள் (அந்தக்கரணங்கள்) என்பதும் ஐம்புலன், என்பதும்உயிர்த் தத்துவங்களில் இடம் பெற்றவையாகும். எனவே தான் உரையாசிரியர்கள் “ஐம்புலன்கள் என்றது ஆகுபெயரால் ஐம்பொறிகளை உணர்த்தும். அஃது உபஇலக்கணம் ஆதலால் ஏனையத் தத்துவங்களும் உடன் கொள்ளப்படும் என எழுதினார்.[6] இவ்வாறு குறிப்பாக காட்டிய மெய்கண்டாரின் கருத்தை - பின்னோன் வேண்டும் விகற்பங்கூறல்” என்பதற்கிணங்க அருணந்தி சிவாசாரியார் தம் சிஞான சித்தியார் நூலில் சுபக்கப் பகுதியில் விரித்து விளக்கமாகக்கூறியுள்ளார்.

அருணந்தி சிவாசாரியார் இறைவன் உலகத்தைத் தோற்றுவிக்கின்ற முறைமையினைக் கூறுகின்றபோது - உலகத் தோற்றத்திற்கு முதற் காரணமான ‘மாயை’ பற்றி விளக்கம் தருகின்றார். மாயையைப் பற்றி விளக்கும்போது அதனால் உண்டாகின்ற தத்துவங்களையும் விளக்குகின்றார். இத்தத்துவங்களை அவர் சுத்த தத்துவம் என்றும், அசுத்த தத்துவம் என்றும் இரண்டு வகைகளாகக் குறிப்பிட்டுள்ளார். இவை தான் பின்னர் சிவ தத்துவங்கள், வித்தியா தத்துவங்கள், ஆன்ம தத்துவங்கள் எனச் சைவ சித்தாந்தத்தில் இடம் பெற்றன. இத் தத்துவ விளக்கங்களை அவர், தாம்பெற்ற வடமொழி

அறிவால் தந்துள்ளார். அதிலும் "சித்தாந்த சாராவளி" என்ற வடமொழி நூற்பயிற்சியே அவரின் தத்துவ விளக்கங்களுக்கு அடிப்படை எனத் தெரிகிறது.[7]

## மாயையின் செயல்கள்

உலகில் பல வகையாகக் காணப்படும் பொருள்களாய் நிலைமாறக் (பரிணமிக்கக்) கூடிய பலவகைச் சத்திகளின் தொகுதி மாயையாகும். இம் மாயையே உலகத்திற்கு முதற் காரணமாக அமைகிறது. மாயையின் காரியத்தை உடல், கருவி, உலகு, நுகர்பொருள் (தனு, கரண, புவன, போகம்) என நான்காகச் சைவ சித்தாந்தம் வகுத்திடும். தனு என்பது பருவுடம்பைக் குறிக்கும். கரணம் என்பது மனம் முதலிய உட்கருவிகளாகிய அந்தக் காரணங்களைக் குறிக்கும். புவனம் என்பது அவ்வுடம்புகள் இயங்குவதற்கு அமைந்த இடத்தை (உலகத்தைக்) குறிக்கும். போகம் என்பது உயிர்கள் தம் தனு கரணங்களைக் கொண்டு இன்ப துன்பங்களை நுகரும் நுகர்ச்சிப் பொருளைக் குறிக்கும். மாயை மூன்று வகைப்படும். ஆணவத்தோடும், கன்மத்தோடும் கலவாது தூயதாய் நிற்கும் மாயை சுத்த மாயை எனப்படும். ஆணவத்தோடும், கன்மத்தோடும் கலந்து நிற்கும் மாயை அசுத்த மாயை எனப்படும். அசுத்த மாயையினின்று தோன்றும் கலை என்னும் தத்துவத்தின் காரியமாய் நிற்கும் மாயை பிரகிருதி மாயை எனப்படும். இத்தகைய மூன்று மாயையிலிருந்து முறையே சுத்த தத்துவம், வித்தியா தத்துவம், ஆன்ம தத்துவங்கள் தோன்றுகின்றன. இத்தகைய கருத்துகள் சைவ சித்தாந்தத்தில் இடம் பெற்றனவாகும். இவற்றை அருணந்தி சிவாசாரியார் சுத்தமாயை, அசுத்த மாயை என்று இருவகையாகக் கொண்டு பலவிடங்களில் குறித்துள்ளார்.

## சுத்த தத்துவங்கள்

முதல் சூத்திரத்தில் அருணந்தி சிவாசாரியார் சுத்த தத்துவங்களைக் குறிப்பிடுகின்றனர். சுத்த தத்துவம் என்ற சொல்லைத்தான் அவர் கையாளுகிறார். சிவ தத்துவம் என்ற சொல் அவருக்குப் பின்னர் ஏற்பட்டதாகும். இத்தத்துவங்கள் இறைவன் திருவருள் முன் சுத்தமாயையானது பல்வேறு வடிவங்களைப் பெறுவதானால் தோன்றுவனவாகும். இதனை அருணந்தி சிவாசாரியார் இருபாடல்களில் விளக்குகிறார்.

*ஞானமே ஆன போது*
*சிவன், தொழில் ஞானம், ஒக்கின்*
*ஈனம்இல் சதாசி வன் ; பேர்*
*ஈசன்ஆம், தொழிலது ஏறின் ;*
*ஊனமேல் கிரியை வித்தை ;*
*உருத்திரன், இலயம் போகம்*
*ஆகபேர் அதிகா ரத்தோடு*
*அதிகர ணத்தன் ஆமே* (பா : 85)

இப்பாட்டின் மூலம் சுத்த தத்துவம் என்பது இறைவனின் வடிவங்களைக் குறிக்கும் என்பது பெறப்படுகிறது. விழைவு, அறிவு, செயல் (இச்சை, ஞானம், கிரியை) என்னும் மூன்றினையும் இறைவனின் மறைப்பற்றால் (திரோதான சத்தி) பெற்று விளங்கும். இச்சத்திகளில் இச்சா சத்தி எப்பொழுதும் ஒரு தன்மைத்தாய் இருக்கும். மற்றைய இரு சத்திகளுக்கும் தனித் தனியாயும், ஒத்தும், மிக்கும், குறைந்தும் விளங்கும். இவ்வகைச் சத்திகளைக் கொண்டே இப்பாடலில் அருணந்தி சிவாசாரியார் இறைவனின் வடிவங்களாகிய ஐவகைத் தத்துவங்களையும் குறிப்பிடுகின்றார். இறைவர் ஞான சத்தியைப் பொருந்தி நிற்கும்போது சுத்த தத்துவநிலையில் சிவன் எனப்படுகின்றார். கிரியா - சத்தியைப் பொருந்தி நிற்கும்போது சத்தி எனப்படுகின்றார். ஞானசத்தியும் கிரியாசத்தியும் சமமாகப் பொருந்தி நிற்கும்போது சதாசிவம் (சாதாக்கியம்) எனப்படுகின்றார். ஞானசத்தி குறைந்து கிரியாசத்தி மிகுந்து பொருந்தி நிற்கும்பொழுது மகேசுவரம் (ஈசுவரம்) எனப்படுகிறார். ஞானம் மிக்கு, கிரியாசத்தி குறைந்து பொருந்தி நிற்கும்பொழுது சுத்தவித்தை எனப்படுகிறார். இவற்றுள் சிவனும், சத்தியும்அருவத் திருமேனிகளாகும். இதனை இலய நிலை என்கிறார் அருணந்தி சிவாசாரியார். இது போலச் சதாசிவம் அருவுருவத் திருமேனியாகும். இதனைப் போக நிலை என்கிறார். மகேசுவரமும், சுத்தவித்தையும் உருவத் திருமேனியாகும். இதனை அதிகார நிலை என்கிறார் ஆசிரியர். இத்தகைய இறைவனின் திருமேனிகள் இறைவனுக்குச் சுதந்திர வடிவாகும், நிலைபேறுடையதுமாகும் என்றும் (பா:86ல்) குறிப்பிடுகின்றார். இவ்விரு பாடல்களின் மூலம் அருணந்தி சிவாசாரியார் சுத்தவித்தை என்பதில் நடைபெறும் இறைவனின் தொழிலுக்கேற்ப அமைகின்ற வடிவங்களையே சுத்த தத்துவங்களாகக் குறிக்கிறார் என்பது பெறப்படுகிறது.

இவ்வாறு சுத்த தத்துவம் இறைவனின் திருமேனிகளைக் குறிப்பதால் இறைவன் தன்மை அவ்வவற்றிற்கேற்பத் திரியாதோ? என்ற ஐயம் ஏற்படலாம். இதனை அருணந்தி சிவாசாரியார் எண்ணி, அந்த ஐயத்தைப் போக்க ஓர் உவமையைப் பயன்படுத்தி விளக்கமும் தருகிறார். ஒருவன் இராவணன் முதலிய வேடங்களில் நாடகத்தில் நடித்தாலும் அவன் தனது இயற்கைத் தன்மையில் மாறுபடாதவாறு போல, இறைவன் அருவ, அருவுருவ, உருவ வடிவுகளை ஏற்றாலும் தன் உண்மைத் தன்மையில் மாறான் என அவர் கூறியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும். இவ்வுவமையில் இருந்தும், உவமேயத்திலிருந்தும் இறைவனின் தொழில் வடிவ உண்மைநிலைகளே சுத்த தத்துவங்கள் என்பது பெறப்படுகிறது.

## அசுத்த தத்துவங்கள்

நித்தியமாய், அருவாய், ஏக நிலையதாய் அகிலத்திற்கோர் வித்துமாய், விமலனுக்கு ஓர் சத்தியாய், மயக்கம் செய்வதாய் விளங்குவது அசுத்த மாயையாகும். சுபக்கம் 144 ஆம் பாடல் முதல் 158 ஆம் பாடல் வரை அருணந்தி சிவாசாரியார் இந்த அசுத்த மாயையின் காரியங்களாகிய அசுத்த தத்துவங்களைப் பற்றி விளக்கியுள்ளார். இப்பகுதி இரண்டாம் சூத்திரப் பகுதியாகும். இவ்விரண்டாம் சூத்திரம் தளை இலக்கணம் கூறும் பகுதியாகும். இதில் அசுத்த மாயையின் இலக்கணம் கூறி, பின்னர் அவற்றிலிருந்து தோன்றும் மாயை, காலம், முறை (நியதி), கலை, புலம் (வித்தை), அவா (அராகம்), தோன்றல் (புருடன்)[8] என்ற தத்துவங்களையும், பின்னர் கலை தத்துவத்திலிருந்து தோன்றும் மூலம் பகுதி, அவற்றிலிருந்து தோன்றும் அந்தக் காரணங்கள், அறிகருவி (ஞானேந்திரியங்கள்), தொழிற் கருவி (கன்மேந்திரியங்கள்), தன்மாத்திரை, பூதங்கள் ஆகிய இருபத்தி நான்கு தத்துவங்களையும் ஆசிரியர் விளக்கியுள்ளார். இவற்றை வித்தியா தத்துவங்கள் என்றோ, ஆன்ம தத்துவங்கள் என்றோ ஆசிரியர் குறிப்பிடவில்லை. அசுத்த மாயையினின்று தோன்றும் தத்துவங்களாகவே ஆசிரியர் காட்டுகிறார்.

## காலம்

அசுத்த மாயையிலிருந்து கால் தத்துவமும், முறை தத்துவமும் தோன்றும். பின்னர் கலை முதலிய தத்துவங்களும் முறையாகத்

தோன்றும். கால தத்துவம் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்று வகைப்படும். மேலும் தனக்குக் கீழுள்ள உலகம் அனைத்தையும் தோற்றுவித்தும், நிலை நிறுத்தியும், ஒடுக்கியும், உடல் உயிர்கள் அனைத்திற்கும் கால வரையறையைச் செய்தும், இறைவனது சத்தியாலே, அறிவற்றது, அறிவுடையது ஆகிய உலகம் (சடமும், சித்துமாகிய பிரபஞ்சம்) அனைத்தையும் நடத்தும்.

**முறை**

முறை தத்துவம், கால தத்துவத்தின் பின்னாக மாயையினின்றும் முதல்வன் ஆணையாலே தோன்றி வினையினை வரையறுக்கும், வினைப்பயனை நுகருமாறும் வரையறுக்கும் என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். மேலும் ஒருவர் செய்த செயலின் பயன் வேறொருவரை அடையாமலும், அவரவர் செய்த செயலின் பயன் அவரவரை விட்டு நீங்காமலும் பொருந்தச் செய்யும் என்பதுவும் குறிப்பால் பெறப்படுகின்றன.

**கலை**

முறை தத்துவத்திலிருருந்து கலை தத்துவம் தோன்றி ஆணவ இருளைச் சிறிது ஒதுக்கி, உயிரின் செயலாற்றலைப் பொதுவகையாக விளக்கும்.

**புலம்**

கலை தத்துவத்திலிருந்து புலம் என்ற தத்துவம் தோன்றும். அது உயிரின் ஞான சத்தியை விளக்கி, அப் போகங்களை அறியச் செய்யும் என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். அதாவது புலத் தத்துவம் உயிருக்கும், அறிவிற்கும் இடையிலே நின்று அறிவான் வாயிலாக வந்த புலன் நுகர்புகளை உயிர் பொருந்தும்படி அவ் உயிருக்கு அறிவைத் தோற்றுவிக்கும்.

**அவா**

புல தத்துவத்திலிருந்து முதல்வன் ஆணையால் அவா தத்துவம் தோன்றும். உயிரின் விழைவாற்றலை விளக்கி வினைக்கீடாக வரும் நுகர்வுகளில் விழைவை உண்டாக்கி நிற்கும்.

### தோன்றல்

கலை முதலிய மூன்றும் உயிரின் செயலாற்றல், அறிவாற்றல், விழைவாற்றல் மூன்றினையும் விளக்கியவிடத்து, அம்மூன்று நுகர்வுகளில் மருவி, அந்நுகர்வுகளை அறியத் தக்க வல்லமை உடையதாய் உயிர் நிற்கும். இந்நிலை தோன்றல் தத்துவம் ஆகும்.

மூலப்பகுதி

மாயை என்ற தத்துவத்தை மூலப்பிரகிருதி என்ற பெயரில் அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார். மாயை என்ற தத்துவம் முன் கூறப்பெற்ற ஆறு தத்துவங்களைப் போலக் காரியம் அன்மையால் இறுதியில் குறிப்பிட்டுள்ளார் போலும். அருணந்தி சிவாசாரியார் இவ்ஏழு தத்துவங்களையும் வித்தியா தத்துவம் என்ற பெயரில் குறிப்பிடவில்லை. இந்தத் தத்துவங்கள் அனந்த தேவராகிய வித்தியேசுரரால் தோற்றமும், ஒடுக்கமும் பெறுவதால் பின்னர் தோன்றிய தத்துவ நூல்களால் வித்தியா தத்துவம் எனப் பெயர் கொடுக்கப் பெற்றது.

கலை என்ற தத்துவத்தினின்று நேரே (மூலப்பிரகிருதி) தோன்றும். இம்மூலப் பகுதி தான் உயிர்த் தத்துவங்கள் அனைத்திற்கும் மூலகாரணம் ஆகும். இந்த மூலப்பகுதி சீகண்ட ருத்திரர் அருளால் தோன்றுகிறது. மெய்ப்பண்பு, செயற்பண்பு, தாழ்பண்பு (சாத்வீகம், இராசதம், தாமதம்) என்ற மூவகைக் குணங்களும் பெற்றுப் பெரிய குணவடிவாகி எவ்விடத்தும் கலந்து நிற்கும். இவ்வாறு காலம் முதல் மூலப்பகுதி வரை ஏழு தத்துவங்கள் கூறப்பெறுகின்றன. சிவதத்துவங்கள் எவ்வாறு இறைவனின் தொழில் வடிவங்களைக் குறிப்பிட்டனவோ அதுபோல, இந்த வித்தியா தத்துவங்கள் உயிரின் அறிவையும், செயலையும் குறிப்பிடுகின்றன. சிவவடிவின் உண்மை நிலையை அறிந்தபின், ஆன்மாவின் உண்மை அறிந்து கொள்வது இன்றியமையாதது. ஆதலால் இத் தத்துவங்களை அசுத்த தத்துவங்களில் ஒரு பகுதியாக அருணந்தி சிவாசாரியார் அழகுற விளக்கியுள்ளார்.

### புத்தி தத்துவம்

உயிர்களின் நற்செயல், தீச்செயல், சார்தற்கு இடமாய், ஒருபொருளை இன்னதென்று துணிதல் கருவியாய், முக்குணச் சார்பால், இன்ப, துன்ப மயக்கத் தோற்றம் புலப்படுவதாய், உயிர்களின் அறிவு, தொழில்கட்கு ஆதரவாய் நிற்பது புத்தி தத்துவம்.

### அகங்காரம்

மேற்கூறப்பெற்ற புத்தி தத்துவத்திலிருந்து அகங்காரத் தத்துவம் தோன்றும். இது அகந்தை உறுவதற்கு மூல காரணமாய். இப்பூமியில் யாவர்தாம் என்னோடு ஒப்பவர்? ஒருவரும் இல்லை என்று செருக்குற்றும், யான், எனது என்று பற்றுக்கொண்டும், உயிரை விட்டு நீங்காது நிற்கும். இவ் அகங்காரம் குண வேற்றுமையால் தாழ்வு (பூதாதி) அகங்காரம், செலவு (வைகாரி) அகங்காரம், தெளிவு (தைசத) அகங்காரம் என மூன்றாக நிற்கும்.

### மனம்

மனமானது தெளிவு அகங்காரத்திலிருந்து தோன்றி எதிர்ப்பட்ட ஒரு பொருளை இஃது யாதோ எனச் சிந்தித்தும், பின் ஐயமடைந்தும், இதனை நானே அறிவேன் என நிற்பதாகும்.

### அறிவுக்கருவி (ஞானேந்திரியம்)

தெளிவு அகங்காரத்திலிருந்து அறிவுக்கருவிகள் தோன்றும். செவி,(துவக்கு) தோல், கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்தும் அறிவுக்கருவிகள் ஆகும். இங்கு ஆசிரியர் தோல் என்பதற்குத் துவக்கு என்ற வடமொழிப் பெயரையே பயன் படுத்தியுள்ளார். இவை ஐந்தும் புறத்தே உள்ள ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் தனக்குரிய நுகர்வுகளாகப் பெற்றிருக்கும். அதாவது ஒளி முதலிய நுகர்வுகளை அறிவதே அறிவுக்கருவிகளின் தொழிலாகும். அருணந்தி சிவாவாரியார் இங்கு ஒலி போன்றவற்றிற்கெல்லாம் வடமொழிச் சொற்களையே கையாண்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும். வடமொழி நூல்களினின்று இத் தத்துவங்களை அவர் பெற்றதால் வடசொற்களையே இங்குப் பயன்படுத்தியிருக்கிறார்.

### தொழிற் கருவிகள் (கன்மேந்திரியங்கள்)

செலவு அகங்காரத்திலிருந்து தொழிற் கருவிகள் ஐந்தும் தோன்றுகின்றன. வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் ஆகிய ஐந்தும் கன்மேந்திரியங்கள் ஆகும். தமிழில் மொழி, கால், கை, எருவாய், கருவாய் என்று அவை கூறப்படும். அதாவது இவற்றைத் தத்துவங்களாகச் சொல்லும் போது நா முதலிய இடங்களின்று பேசுதல் முதலிய செயல்களைச் செய்யும் ஆற்றலையே குறிக்கும் எனக் கொள்ளவேண்டும். பேசுதல், போதல், கொடுத்தல், மலம் கழித்தல், இன்பம் துய்த்தல் ஆகியவை இவற்றின் தொழில்களாகும்.

அறிவுக் கருவிகளும், தொழிற்கருவிகளும் உடம்பின் புறத்தே தொழிற்படும் கருவிகளாகும். மனம் முதலிய உட்கருவிகள் நான்கும் உடம்பின் அகத்தே நின்று தொழிற்படும் கருவிகளாகும். இவ்வாறு 14 கருவிகளும் உடம்பின் அடிப்படையில் எழுந்த தத்துவங்களாகும். இவற்றின் உண்மை நிலை அறிவதே இத் தத்துவங்களின் உணர்நிலை என்பது பெறப்படுகிறது.

### பூதநுட்பம் (தன்மாத்திரை)

தன்மாத்திரை என்பதன் பொருள் “அதனளவாய் நிற்றல்”[9] என்பதாகும். ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்று சொல்லப்ப டும் ஐந்தும் தன் மாத்திரைகள் ஆகும். இவை தாழ்வு அகங்காரத்திலிருந்து (பூதாதியிலிருந்து) தோன்றும். இவை ஐந்தும், பொறிகள் புலன்களை நுகரும்படி ஊக்கம் செய்வித்து அவற்றோடு நிற்கும். இந்தத் தன்மாத்திரை ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்றும் சேர்ந்து எண் உடல் (புரியட்டகம்) ஆகும் என்று அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகிறார்.

### பூதங்கள்

ஓசை என்ற பூத நுட்பத்திலிருந்து வானமும் - ஊறு என்ற பூதநுட்பத்திலிருந்து காற்றும், உருவம் என்ற பூதநுட்பத்திலிருந்து தீயும், சுவை என்ற பூதநுட்பத்திலிருந்து நீரும், மனம் என்ற பூதநுட்பத்திலிருந்து நிலமும் தோன்றும். அவை ஒன்றற்கொன்று அதிகமாயிருக்கம் ஒலி முதலிய பெருங்குணங்களைப் பொருந்தி நிற்கும்.

இவ்வாறுசுத்த தத்துவங்கள் ஐந்து, அசுத்த தத்துவங்கள் 31. ஆக 36 தத்துவங்களை அருணந்தி சிவாசாரியார் குறப்பிடுகின்றார். சுத்த தத்துவங்கள் ஐந்தும் அறிவற்றதாயினும், சிவத்திற்கு வடிவாதலின் அது சித்து எனப்படும். அசுத்த தத்துவத்தின் ஒரு பகுதியான புருட தத்துவம் சார்ந்ததன் வண்ணமாயிருத்தலால் சித்தசித்து எனப்படும். ஏனைய முப்பது தத்துவங்களும் அசித்து எனப்படும்

தத்துவங்கன் 36 இறைவனைப் பற்றியும், உயிர் பற்றியும், உடம்பைப் பற்றியும், பூதங்களைப் பற்றியும் கூறி - அவற்றின் உண்மைப் பொருளை நிலைநாட்டுவதால் சைவ சித்தாந்தக் கொள்கைகளில் முக்கிய இடத்தைப் பெற்றன.

**நால்வகை வாக்குகள்**

சுத்த மாயையிலிருந்து பிறக்கின்ற தத்துவங்களை அருணந்தி சிவாசாரியார் சொல் உலகு என்றும், பொருள் உலகு என்றும் இரு வகையாகப் பிரிக்கிறார். பொருள் உலகம் என்பது முன்னர் கூறப்பட்ட சிவ தத்துவங்களைக் குறிக்கும். சொல் உலகம் என்பது நால்வகை வாக்குகளைக் குறிக்கும். விரி, வகை, தொகை, நுட்பம் (வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமை) என்பன அந்நால்வகை. மாயையின் காரியமான இந்நால்வகை வாக்குகளும், நீத்தல் (நிவர்த்தி) முதலிய ஐந்து கலைகளைச் சார்ந்து ஐவகைப் பட்டு விளங்குவனவாகும். அதாவது மிகுநுட்ப (அதி சூக்குமை வாக்கு) அமைதிமேல் (சாந்தியதீத) கலையையும், நுட்ப வாக்கு (சூக்குமை வாக்கு) அமைதி (சாந்தி) கலையையும், தொகை வாக்கு புலமைக் கலையையும் (வித்தியாகலை) விரி வாக்கு நீத்தல் கலையையும் பற்றுக் கோடாகக் கொண்டு, சிவதத்துவம் முதலிய ஐந்து தத்துவங்களிலும் ஒலி (சத்தார்த்த) வடிவாய் விளங்கும். இவ்வாறு காரியப் படுதல், அசுத்த மாயா காரியம் போல ஒன்று திரிந்து மற்றொன்றாகும் வளர்ச்சியல்ல. சுருங்கியிருந்த துணி விரிந்து கூடாரமாவது போலச் சுத்த மாயையினின்று காரியப் பட்டவையாகும். இவை இறையல்ல. இவை சுத்த மாயா காரியமே ஆகும், என்று அருணந்தி சிவாசாரியார் நால்வகை வாக்குகளின் பொதுவான தன்மைகளைக் கூறிப்பின் அந்நால்வகை வாக்குகளைத் தனித்தனியே விரித்தும் கூறியுள்ளார்.

எவ்வாறு சிவதத்துவம் முதலிய 36 தத்துவங்களில் இறை, உயிர், உடல், உலகு என்ற நால்வகைகளின் உண்மை இயல்புகள் அறிவிக்கப் பட்டனவோ, அதுபோல இந்நால்வகை வாக்குகளில் அருணந்தி சிவாசாரியாரால் சொற்களின் உண்மைநிலை உணர்த்தப் பட்டுள்ளது. நால்வகை வாக்குகளுக்கும் மாயை முதற்காரணமாக இருந்தாலும், இறைவன் வினைமுதல் காரணன் என்பதை நினைவுகூர்தல் வேண்டும். சுத்த மாயையிலிருந்து இந்நால்வகை வாக்குகள் தோன்றுவதால் இறைவனின் முன்னிலையில் நடைபெறுவனவே சொல் உலகம் என்பது பெறப்படுகிறது. இந்த நால்வகை வாக்குகளின் விரிவுநிலையை அருணந்தி சிவாசாரியார் தருவதற்கு வடமொழிநூலாகிய சித்தாந்தச் சாராவளி துணை புரிந்திருக்கிறது என்பது தெரிகிறது.

இவ்வாக்குகள் "சேவுயர் கொடியினான் தன் சேவடி" சேர்வதற்குத் துணை புரிவன என்று அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகிறார். இவ்வாறு அவர் கூறுவதிலிருந்து சூக்குமை முதலிய வாக்குகள் இறை உணர்வு உடையார்க்கு மிகவும் இன்றியமையாதன என்பது பெறப்படுகிறது. திருமூலர் 36 தத்துவங்களை இறைவனை அடைவதற்கு எவ்வாறு படிகளாக்கிக் காட்டினாரோ அதுபோல நால்வகை வாக்குகளை அருணந்தி சிவாசாரியார் இறைவனை அடைவதற்குக் கருவியாக்கிக் காட்டுகிறார். சிவபெருமான் உலகத்தைத் தோற்றுவிக்கும் முறையைக் கூறுகின்ற இடத்தில் - முதற் சூத்திரத்தில் இந்நால்வகை வாக்குகளைப் பற்றி (பா:40-46) அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார்.

## விரி (வைகரி) வாக்கு

தனக்கும், பிறருக்கும் பகுத்துணர்வைத் தரும் வண்ணம், கேட்கப் படுவதாய், வாயின் வழியே வெளியே வருவதாய்ச் சொல்லும் ஒலி வைகரி வாக்கு எனப்படும். இவ்வாக்கு கற்றி அருணந்தி சிவாசாரியார் கூறுவதாவது:[10]

தன் செவிக்கும், பிறர் செவிக்கும் கேட்கப் படுவதாயும், நினைத்தபொருளைச் சொல்லும் சொல்லாயும், சொல்லுவானுக்கும், கேட்பானுக்கும், சிறப்பு உணர்வு உண்டாவதற்கு ஏதுவாயும், உடம்பின் கண் எழுகின்ற உதானக் காற்று பொருந்துதலினாலே மத்திமைக்குரிய

இடத்திலே நுட்ப வடிவாய்ப் பிரிந்து தோன்றிய அக்கரங்கள், சந்தேகமின்றி இயங்கும் பிராணவாயுவினால் செலுத்தப் பெற்று, வேறுபாடு அறப் புறத்தே பரு வடிவாய் வருதலை உடையதாய் உள்ள இலக்கணத்தை உடையதாம்.

**வகை (மத்திமை) வாக்கு**

தன்னுள்ளே உணரும் ஓசையாய், உள்ளே அக்கரங்கள் வடிவு பிரிந்து தோன்றுவதாய், உள்ள ஒலி மத்திமை வாக்காகும். இந்த மத்திமை வாக்கு பற்றி அருணந்தி சாவாரியார் கருத்து.

சொல்லுவான் தன்னுள்ளே உணர்வதாயும், தனக்குக் கேட்பதாயும் பிறர் செவியில் கேட்கப் படாததாயியும் விளங்கிய பிராணவாயுவின் தொழிற்பாடு இல்லாமை பற்றி நுட்ப வடிவாய்ப் பிறந்து தோன்றிய அக்கரங்கள் பிரிந்து தோன்றினும், பல், இதழ், நா, அண்ணங்களில் பட்டுச் சிதறிப் போகும் செயல் இல்லாததாயும், மெல்லியதாய், கண்டத்திலே விளங்குவது தொகைக்கும், விரிக்கும் வேறாக அறியப்படுகின்ற வகை வாக்காகும்.[11]

**தொகை (பைசாந்தி) வாக்கு**

மயிலின் முட்டைக்குள் இருக்கும் நீரில் மயிலின் ஐந்துவண்ணம் உற்பத்தியாகித் தோன்றுவது போலச் சித்தத்தின் ஓர் உணர்வு மாத்திரமாய்த் தோன்றி, அக்கரங்களைப் பொதுவாய் அறியும் ஒலி பைசந்தி ஆகும். இதனை அருணந்தி சிவாசாரியார் விளக்கமாகக் கூறியுள்ளார்.[12]

கூறப்பெற்ற மயிலின் முட்டை தரித்திருக்கும் நீரைப் போலப் பலவகைப்பட்ட எழுத்துக்கள் வேறு வேறு பிரிவாகித் தோன்றுதலாகிய முறையை இதயத்தில் சிறிதும் தெரியாமல் ஒடுக்கிக் கொண்டு, தான் விளக்கமாகி அவ்வெழுத்துக்களின் நுட்பவடிவை மிகவும் உடையதாகி விளங்குவது தொகை வாக்கு.

**நுட்ப (சூக்குமை) வாக்கு**

காரண உடலாவது, கேவலமாகிய அறியாமையிலிருந்து நீங்கியும், தத்துவங்களுடன் கூடிப் புகுத்தறிவின்றியும், தத்துவத் தோற்றத்திற்குக் காரணமான மாயையோடு கூடிநிற்கும் மயக்க உணர்வு ஒலியே இந்த நுட்ப வாக்காகும். இவ்வாக்கு பற்றி அருணந்தி சிவாசாரியார் கூறுவதாவது[13]

காரண உடலின் உள்ளே சொல்லுவதற்கு அரிய பொதுவாய் அறியும் அறிவின் வடிவாக விளங்குவதாய் ஏனைய வாக்குகளைப் போலத் தோன்றி ஒடுங்குவதின்றி நிலைபெற்று, வினைக்கீடாக, மற்ற மூன்று வாக்குகளைத் தோற்றுவித்து, உயிரைக் கட்டுப்படுத்தும் (பந்திக்கும்) முதன்மைத் தொழிலுக்கு முடிவினையும் உடையதாய், உயிரை நீங்காத பேரறிவும், பேரின்பமும், தலைமையும், அழியா இயல்பும் உடையதாய், இறப்பு பிறப்புகளும் இல்லாதய் நிற்பதாகும்.

இவ்வாக்குகளால் உயிர்களுக்கு அறிவுண்டாவதை ஆசிரியர் மேலும் குறிப்பிடுகிறார் ஒருமலத்தர், இருமலத்தர், மும்மலத்தர் (விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்) என்ற மூவகை உயிர்களுக்கும், இந்த நால்வகை வாக்குகளுக்கும் பொருந்திடவில்லை என்றால் செய்திகளை அறியும் சிறப்பறிவு உண்டாகாது. இந்த ஞானம் உண்டாக உயிர்களுக்குப் (பதி) (இறை) ஞானமும் உண்டாகும். பதி ஞானம் ஏற்பட்டால் இடபக் கொடி உடைய சிவபெருமானது சிவந்த திருவடிகளை அடையலாம். இவ்வாறு நால்வகை வாக்குகளைப் பற்றி அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார்.

**நால்வகை வாக்குகளின் பயன்**

நால்வகை வாக்குகளைப் பற்றிய செய்திகளைக் கீழ்க்கண்டவாறு குறிக்கலாம்

1. வைகரி வாக்குச் சொல்லாக வெளிவருவது
2. மத்திமை வாக்குச் சொல்லாக விளங்கி ஆனால் வெளியே ஒலிக்கப் படாதது
3. பைசந்தி வாக்கு எழுத்துக்களாகப் பிரிந்து நில்லாது சிந்தையில் நிற்பது
4. நுட்ப வாக்கு ஞான வடிவாய் விளங்குவது

இந்த அமைப்பினைச் சொல்லின் ஒடுக்க முறையில் அமைத்துகொண்டால் "சும்மா இருத்தலே சுகம்"[14] என்றபடி சொற்களைச் சொல்லத் தொடங்கிய உயிர், சொல்லை மனதிற்குள்ளே ஒடுக்கி மேலும் ஒடுங்கிய நிலையில், ஞான நிலையில் பேசாதிருந்துவிட்டால் இறைவனை அறியலாம், அவன் தாள் சேரலாம் என்று அருணந்தி சிவாசாரியார் சுட்டிக்காட்டி இறையருளைப் பெறுவதற்கு வழி வகுக்கிறார் எனலாம். இந்த நால்வகை வாக்குகளும் சுத்த மாயையிலிருந்து பெறப்படுகிறது என்பதால் ஆணவமும், கன்மமும் கலவாத தூயதாய் இருக்கக் கூடிய சுத்த மாயையின் காரியம் புலனாகின்றது. எனவே முடிந்தமுடிபாக இந்த நால்வகை வாக்குகளால் அறியப் படுவது சொல்லைக் குறைத்துப் பதி ஞானத்தைப் பெற்றுத் திருவருள் பெறலாம் என்பதாகும்.

2

**உணர்வு நிலைகள் (அவத்தைகள்)**

சைவ சித்தாந்தக் கொள்கைகளில் உயிர் பற்றிய கருத்துகள் கூறுமிடத்தில் சிறப்பாக இடம் பெற்றன உணர்வு நிலைகள் (அவத்தைகள்) ஆகும். திருமூலர் திருமந்திரத்தில் 2142 ஆம் பாடல் முதல் 2226 ஆம் பாடல் வரை உள்ள செய்யுள்களில் உணர்வுநிலைச் செய்திகள் இடம் பெற்றுள்ளன. சிவஞான போதத்தில் 3ஆம் அதிகரணம் அவத்தை பற்றிக் கூறுகிறது. "அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்சவத்தைத்து" என்பது மூன்றாம் அதிகரணம் ஆகும். அதற்குரிய மேற்கோள் "இவ் ஆன்மா சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமாய் உள்ள பஞ்சாவத்திதனாய் நிற்கும்" என்பது. இம் மேற்கோள்களுக்குரிய வெண்பாக்கள் இரண்டு ஆகும். அவற்றின் மூலம் அறியப்படுவன, நனவுக்கு இடமாகிய புருவ நடுவில் 35 கருவிகள் தொழிற்படுகின்றன. 25 கருவிகள் கனவுக்கிடமாகிய (சொப்பனத் தானமாகிய) கண்டத்தில் தொழிற்படுகின்றன. உறக்கத்திற்கு இடமாகிய இருதயத்தில் சித்தம், பிற கருவிகளைக் கண்டத்தில் தானே நிறுத்தித் தான் மட்டும் சென்று பெருந்தும். பேருறக்கத்திற்கு இடமாகிய உந்தியில் பிராணவாயு சித்தத்தையும், இருதயத்தையும் விடுத்துச் சென்று சேரும். உயிர்ப்படக்கத்தின் இடமாகிய மூலாதாரத்தில் ஒரு கருவி மட்டுமே தொழிற்படும் என்றும் குறிப்பிட்டு, உயிர் கீழாக இறங்கியும், மேலாக

ஏறியும் புருவநிலை அடைந்து, அங்கு ஐந்தவத்தையை அடையும் என்று குறிப்பிடுகிறது. இவ்வாறு மெய்கண்டார் கூறிய ஐந்து அவத்தைகளை அருணந்தி சிவாசாரியார் தம் நூலில் விளக்கமாகச் சுபக்கத்தில் 222ஆம் பாடல் முதல் 230 ஆம் பாடல் வரை குறிப்பிட்டிருக்கிறார்.

அவத்தை என்பது நிலை என்ற பொருளைத் தரும். எனவேதான் உயிர்கள் ஆணவமலத்தோடு மட்டும் இருந்து, பின்னர் மாயை, கன்மங்களோடு கூடியிருந்து, பின்னர் மும்மலங்களும் நீங்கப் பெற்று இறைவனோடு கலக்கும் - மூன்று நிலைகளை அவத்தை என்று கூறும் சித்தாந்தம்.

**காரண உணர்வுநிலை**

சிவஞான போதத்தில் ஐந்தவத்தையின் கருவிகளும் - அவற்றின் இடமும் கூறப் பெற்றிருக்க அவற்றிற்கு மேலும் ஒரு விளக்கமாக உயிர்களின் மூன்று நிலைகளை அருணந்தி சிவாசாரியார் விளக்குகின்றார். இது அவருடைய விரிவாகும். கீழாலவத்தையின் காரிய அவத்தைகளுக்குக் (கேவலம், சகலம், சுத்தம்) இருள்நிலை, மருள்நிலை, அருள்நிலை என்ற மூன்று அவத்தைகள் காரணங்களாக உள்ளன. இந்த மூன்று அவத்தைகளையும் அருணந்தி சிவாசாரியார் ஒரு பாடலில் விளக்குகிறார்.

*“கேவல சகல சுத்தம்*
*என்று மூன்று அவத்தை ஆன்மா*
*மேவுவன்; கேவ லம்தன்*
*உண்மை மெய் பொறிகள் எல்லாம்*
*காவலன் கொடுத்த போது*
*சகலனாம்; மலங்கள் எல்லாம்*
*ஓவின போது, சுத்தம்*
*உடையன், உற் பவம்து டைத்தே”* (பா : 227)

இப்பாடலின் மூலம் அறியப்படும் கருத்துகள்: இருள்நிலை, என்பது விழைவு, அறிவு, செயல்களின் நிகழ்ச்சி சிறிதும் இன்றி,

ஆணவத்தோடு உயிர் கூடிநிற்கின்ற நிலையாகும். மருள்நிலை என்பது உடல், கருவிகள் முதலியன முதல்வனால் கொடுக்கப் பெற்று, விழைவு, அறிவு, செயல் சிறிது விளங்கும் நிலை ஆகும். அருள்நிலை என்பது ஐந்து மலங்களும் நீங்கிவிடத்துப் பிறவியை ஒழித்து விழைவு, அறிவு, செயல்கள் எங்கும் விரிந்து விளங்கும் நிலையாகும் என்பன பெறப்படுகின்றன.இதே கருத்தைத்திருமந்திரம்,

*"தற்கேவலம் முத்திதானோ தனிமையாம்*
*பிற்பால் சகலம் கலாதிப் பிறழ்வதாம்*
*தப்பால் புரிசுத்த கேவலம் சாக்கிரந்*
*தற்பாற் புரிவது தற்சுத்த மாமே"* (பா : 246)

என்ற பாடல் மூலம் குறிப்பிடுகிறது.

மும்மலங்களின் இயல்பைத் தொகுத்துரைத்த ஆசிரியர் அடுத்த மூன்று பாடல்களில் தனித்தனியே விரித்துரைக்கிறார். இருள்நிலையில் உயிர், அறிவு விளங்கப் பெறாததும் : பரு உடம்பு இல்லாததும், தோற்றக் கேடுகள் இல்லாததும், குணங்களோடு கலப்பு இல்லாததும், தொழில்கள் விளங்கப் பெறாததும், காரண உடல் இல்லாததும், தனக்கெனச் சுதந்திரம் இல்லாததும், நுகர்வுகளில் பற்று இல்லாததும், ஆணவ மலத்தினோடு பிரிவின்று நிற்பதும் ஆகிய தீமைகளை உடையதாய் நிற்கும். (பா : 228) இப்பாடல் திருமந்திரப் பாடலின்[15] சொல்லையும், பொருளையும் முழுவதும் அடியொற்றி நிற்கிறது.

இருள் நிலையில் நின்ற உயிர் மருள் நிலையை அடைந்து, உடம்பினைப் பெற்று, நுகர்வதற்குரிய பொருள்களை மனம், மொழி, மெய்களால் நினைத்தல், உரைத்தல், இயற்றல், ஆகிய வினைகளைப் பொருந்தி சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றங்களாகிய புலன்களை நுகர்ந்து எண்பத்திநான்கு நூறாயிரம் பிறப்பு வேறுபாடுகளை அடைந்து சுழன்று திரியும். (பா : 229) இப்பாடலின் கருத்து, திருமந்திரப் பாடல்[16] கருத்தை விரித்துரைத்த பாங்கினைப் பெற்றுள்ளது.

நல்வினை, தீவினைகளாகிய இருவினைப் பயன்களிலும் நடுநிலை உணர்வு வந்த இடத்துத் திருவருளாற்றல் பதிதலால் ஞானகுருவின் உபதேசத்தைப் பெற்று, ஞான யோகத்தை அடைந்து, மும்மலங்களை நீக்கி முதல்வன் திருவடியை அடைதல் அருள் நிலையாகும். (பா:230). இப்பாடல் கருத்துத் திருமந்திரப் பாடலின்[17] கருத்திற்கு விரிவுரை போல் அமைந்துள்ளது. இம்மூன்று அவத்தைகளையும் சிவஞான போதத்திலிருந்து விரிவாக்கி - அதே நேரத்தில் திருமந்திரக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு அருணந்தி சிவாசாரியார் அமைத்துள்ளார் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

மெய்கண்டார் கூறிய ஐந்தவத்தைகளை அருணந்தி சிவாசாரியார் முன்னோர் நூலின் முடிபொருங்கொத்து என்பதற்கேற்ப வழிமொழிந்துள்ளார் எனலாம்.

**சக்தி**

இயல்பாகவே தளைகளின் நீங்கி விளங்கும் அறிவுருவாகிய முதல்வன், ஒன்றினுந் தோய்வின்றித் தன்னை மாத்திரம் விளக்கி நிற்கும் தன்மையிற் சிவமெனவும், உலகு எலாமாகி வேறாய் உடனுமாய், உயிகளின் வழிநிற்கும் தன்மையில் சக்தியெனவும், ஒருமையில் இருமையாகிய நிலையால்(தாதான்மியத்தால்) இரு திறப்பட்டு, பின் ஐந்தொழில் செய்யுந் தன்மையில் இறை எனவும் பெயர் பெற்று நிற்பன் என்பது சைவ சித்தாந்தத் துணிபாகும். எனவேதான் மெய்கண்டார் சிவஞான போதத்தின் முதற் சூத்திரத்தில் முதல்வன் உண்மைக்கு அளவை கூறுமுகத்தான் அவன் இறை நிற்கும் நிலையினையும், இரண்டாம் சூத்திரத்தில் மற்றவன்தன் பொது இயல்பு கூறுமுகத்தான் அவன் சக்தியென நிற்குமாற்றையும், ஆறாம் சூத்திரத்தில் அவனது சிறப்பியல்பு கூறுமுகத்தான் அவன் சிவனென நிற்கும் நிலையயினையும் உணர்த்தியருளினார். இவ்வாறு மெய்கண்டார் கூறியருளிய குறிப்பைக் கொண்டு அருணந்தி சிவாசாரியார் சிவஞான சித்தியார் சுபக்கத்தில் 81 ஆம் பாடல் முதல் 84 ஆம் பாடல் வரை சத்தியின் இலக்கணத்தைத் தெளிவாக்குகிறார். இப்பாடல்கள் முதல் சூத்திர விளக்கத்தின் இறுதிப் பகுதியில் அமைந்துள்ளன. இறைவன் உலகத்தைத் தோற்றுவிக்கும் முறைமையைக் கூறுமிடத்தில், அவனது உருவத் திருமேனிகள்

கூறப்படுகின்றன. பின்னர் உருவத் திருமேனிகளின் இன்றியமையாமை கூறி, இறைவனது அத்துவா வடிவத்தையும், அதனுள் ஒன்றாகிய மந்திர வடிவத்தினையும் கூறிய பின்னர் சத்தியின் இலக்கணத்தைக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

மெய்கண்டார் இரண்டாம் சூத்திரத்தில் "நீக்கமின்றி நிற்குமன்றே" என்று குறிப்பிட்டு இறைவன் சத்தியோடு பிரிப்பின்றி உள்ளான் என்று நிலைநாட்டிய கருத்தை அருணந்தி சிவாசாரியார் இறைவனின் தொழிலைக் குறிக்குமிடத்தில் கூறியுள்ளார். சக்தி, படைப்புநிலையயில் வேண்டப் படுகிறமையால் உலகின் படைப்புக் கூறப்பெற்ற நிலையிலேயே சத்தி இலக்கணம் கூறிப்பின்னோன் வேண்டும் விகற்பங் கூறுதல் என்ற முறைமையை வழிப்படுத்துகிறார்.

இறைவன் சத்தியோடு உடனாய் நிற்றலைச் சைவ இலக்கியங்கன், சாத்திரங்கள் பலவாறு குறிப்பிடுகின்றன.

"*துரியங் கடந்த சுடர்த்தோகை யுடன் என்றும்*
*பிரியாதே நிற்கின்ற பெம்மான்*" என்றும்
*அகளத்தில் ஆனந்தத்து ஆனந்தி யாயே*
*சகளத்தில் தையலுடன் தோன்றி - நிகளத்தைப்*
*போக்குவதுந் செய்தான்தன் பொன்னடிஎன் பன்தலைமேல்*
*ஆக்குவதுஞ் செய்தான் அவன்*" என்றும்,

(திருக்களி-பா:94)

"*பேரின்ப மானபிரமக் கிழத் தியோடு*
*ஓரின்பத் துள்ளான் என்று உந்தீ பற*
*உன்னையே யாண்டா னென்று உந்தீ பற*" என்றும்,

(திருவுந்-பா:34)

முன்னோர் சிவன் சத்தியும், சிவமுமாய் நிற்பதை உணர்த்தியுள்ளனர். எனவே இம்மரபு வழி நின்றே அருணந்தி சிவாசாரியார் பிரிவின்றி நின்று உலகைத் தொழிற்படுத்தும் நிலையில் சத்தியைக் குறிப்பிட்டு விளக்கம் தருகிறார்.

**சத்தியின் வடிவம்**

சத்தியின் நிலைபற்றி மெய்கண்டார் குறிப்பிடும் போது "பொன்னொளி போல் ஈசன்" (உதாரண வெண்பா - 10) என்று குறிப்பிடுவார். "எங்கும் உளனாகிய முதல்வன் ஞாயிறும், அதன் ஒளியும் போல ஒருமை, இருமை இரண்டிற்கும் பொதுவான தன்மையில் தானும் தனது சத்தியும் என இருதிறப்பட்டு இயைந்து நிற்பன்" என்பது அத்தொடருக்குரிய பொருளாகும். எனவே மெய்கண்டாரின் கூற்றுப்படி இறைவன் உருவ நிலையாகச் சத்தி உள்ளது என்பது பெறப்படுகிறது. இதன் அடிப்படையில் அருணந்தி சிவாசாரியார் சத்தியின் வடிவத்தைத் தனியொரு பாடலில் விளக்குகிறார்.

*"சத்திதன் வடிவுஏது என்னில்,*
*தடைஇலா ஞானம் ஆகும் ;*
*உய்த்திடும் இச்சை செய்தி*
*இவை ஞானத்து உளவோ ? என்னில்,*
*எத்திறம் ஞானம் உள்ளது*
*அத்திறம் இச்சை செய்தி*
*வைத்தலால், மறைப்புஇல் ஞானால்*
*மருவிடும், கிரியை எல்லாம்"* (பா : 82)

இப்பாடலால் பெறப்படும் பொருள்

சத்தியின் வடிவம். யாதெனின் தூய ஞானமாகும். அச்சத்தி செலுத்தும் விழைவாற்றல், செயலாற்றல் என்பன வேற்றுத் தொழில்களாதலால் அவை அந்த ஞானத்தினின்று தோன்றுவனவோ என்றால் - ஞானம் எவ்வாறுளதோ அவ்வாறே விழைவு, செயல்களும் உள என்று ஆகமங்கள் கூறுவதால் - படைப்பாதித் தொழில்களைச் செய்யும் செயலாற்றல் முதலிய சத்திகள் யாவும் தூய ஞானமாகிய பராசத்தியினால் செயற்படும் என்பதாகும். இதிலிருந்து மெய்கண்டார் கூற்றுப்படி அருணந்தி சிவாசாரியாரும் இறைவன் தொழில்களைச் சத்தியின் மூலம் நடத்துவதால் சத்தியின் வடிவம் சுத்த வடிவம் என்கிறார் என்பது பெறப்படுகிறது. இவ்வாறு தூயஞான

வடிவமாக இருக்கின்ற சத்தி, விழைவு, செயல்களை நடத்தும்போது பலவாக வடிவம் எடுக்குமோ என்ற ஐயப்பாட்டை எழுப்பி - அதற்கும் விடை தருகிறார். "அரசன்சத்தி" ஒன்றே அமைச்சர் முதலாயினோரிடத்து நின்று செய்யும் தொழில் வேறுபட்டால், பலவேறு வகைப்பட்டாற் போலச் சிவசத்தி ஒன்றே, முதல்வனோடு பிரிவின்றி புத்தி, முத்திகளை எல்லாம் அருளி, அம்முதல்வன் நினைத்தபடி நிற்பதாகும் என்கிறார் (பா : 81) எனவே சத்தி சிவனோடு பிரிவின்றி, வடிவத்தில் வேறுபடாது தொழில் புரிகிறது என்பது பெறப்படுகிறது.

## சத்தியின் தொழில் வடிவங்கள்

அரசனுக்கு அமைச்சர் முதலானவர்களைப் போலச் சத்திக்குத் தொழில் வடிவங்கள் அமைகின்றன. விழைவு வடிவு, அறிவு வடிவு, செயல் வடிவு என்பன அவ்வடிவுகள்.

*"ஒன்றதாய், இச்சா, ஞானக்*
*கிரியைஎன்று ஒருமூன் றாகி*
*நின்றிடும், சத்தி ; இச்சை*
*உயிர்க்குஅருள் நேசம் ஆகும்*
*நன்றுஎலாம், ஞான சத்தி*
*யான், நயந்து அறிவான் ; நாதன்*
*அன்று, அருட் கிரியை தன்னால்*
*ஆக்குவன் அகிலம் எல்லாம்"* (பா : 83)

இறைவன் ஆன்மாக்களுக்கு மலத்தை நீக்கி, முத்தியைக் கொடுத்தற்பொருட்டுக் கொண்ட விருப்பத்தால் ஏற்பட்ட வடிவு விழைவு வடிவாகும். உயிர்களுக்குச் செய்ய வேண்டிய நன்மைளை அறியும் வடிவுஞான வடிவாகும். உலகம் எல்லாவற்றையும் செய்யக் கூடிய வடிவம் செயல் வடிவாகும் என்று இப்பாடலில் அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகிறார். இப்பாடல் மெய்கண்டாரின் கருத்துக்கு வளர்ச்சியாக அமைந்துள்ளது. மெய்கண்டார் சூரியனின் ஒளிக் கதிர்களாகக் காட்டிய சத்தி வடிவத்தை அருணந்தி சிவாசாரியார் சித்தியாரில் இம்மூன்று வடிவாக காட்டியுள்ளார்.

**வடிவால் ஏற்படும் பயன்**

இறைவன் இவ்வாறு தன் தொழிலிற்கு ஏற்ற சத்திவடிவங்களால் என்ன பயன் என்பதை மிகச் சிறப்பாக அருணந்தி சிவாசாரியார் விளக்குகிறார். உலகில் காணப் படுகிற ஆண், பெண் பிரிவிற்குக் காரணமே சிவசத்தி நிலைதான் என்று அவர் குறிப்பிட்டிருப்பது சமுதாயத்தில் சமயமும், சமயத்தில் சமுதாயமும் அடங்கியிருப்பதைக் காட்டுகிறது. மேலும் உலக உணர்வுகளைச் சமய உணர்வோடு பிண்ணிப் பிணைத்து காட்டுகின்ற ஆசிரியரின் தன்மைக்கு இப்பாடல் ஓர் உதாரணமாகவும் அமைகிறது.

*"சத்தியும் சிவமும் ஆய*
*தன்மை, இவ் உலகம் எல்லாம்*
*ஒத்துஒவ்வா ஆணும் பெண்ணும் ஆக,*
*உணர்குண குணியும் ஆகி,*
*வைத்தனன் ; அவளால் வந்த*
*ஆக்கம், இவ் வாழ்க்கை எல்லாம் ;*
*இத்தையும் அறியார், பீட*
*லிங்கத்தின் இயல்பும் ஓரார்"* (பா : 89)

முதல்வன் சத்தியும், சிவமும் எனத் தம்முள் இருவேறு வகைப்பட்ட தன்மைகள் உடையவனாய் இருத்தலால்தான், உலகில் உயிர் வடிவெலாம் ஒத்திருந்தாலும் குறிகள் ஒவ்வாது (பாடலில் 'ஒவ்வா' என்ற சொல் குறி ஒவ்வா நிலையைக் காட்டுகிறது) ஆண், பெண்ணாக அமைகின்றன என்று இப்பாடலில் குறிக்கப் பெற்றிருப்பது சிந்தனைக்கு உரியதாக அமைகிறது. இத்தகைய விளக்கம் அருணந்தி சிவாசாரியாரின் முதிர்ந்த அனுபவத்தால் எழுந்திருக்கிறது. இதனை உணரவில்லை என்றால் பீடலிங்கத்தின் இயல்பு உணரார் என்று அவர் குறிப்பிடுவதும் சிறப்புடைத்தாம். திருக்கோயில்களில் காணப்பெறுகின்ற இலிங்க வடிவத்திற்குப் பொருள் விளக்கமாக அமைவது இப்பாடலாகும்.

*"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்*
*நீணாகம் அணிந்தார்க்கு நிகழ் குறியாம் சிவலிங்கம்"*
(சாக்கிய நாயனார்-8)

என்ற அருஉருவிற்கு உரிய வடிவாகச் சேக்கிழார் சிவலிங்க வடிவைக் கூறுகின்றார். அதனை அருணந்தி சிவாசாரியார் சிவம், சத்தி இணைப்பிற்குரிய வடிவாகக் காட்டுகின்றார்.

பீட லிங்கம் என்பது இலிங்கம், படைத்தல், காத்தல் முதலியவற்றால் உலகத்தைச் சித்தரிப்பதாகிய பரமேசுவரப் பிரபாவம் என்றும் குறிப்பர்.[18] பாடலில் குறிப்பிடப் பெற்ற பீடம் - இலிங்கம் இருக்கும் ஆசனத்தைக் குறிக்கும். பீட இலிங்கத்தில் பீடம் சத்தியாகவும், இலிங்கம் சிவமுமாயிருக்கும். இவ்வாறு இப்பாடலின் மூலம் சிவம், சத்தி உட்பொருளை ஆசிரியர் விளக்குகிறார்.

## சத்தியின் திருமேனிகள் (சத்தி பேதம்)

சிவனுக்கு எவ்வாறு ஒன்பது திருமேனிகள் (நவந்தரு பேதங்கள்)[19] கூறப்பெற்றதோ (பா : 164) அதுபோலச் சத்திக்கும் ஒன்பது திருமேனிகளைக் கூறுகிறார். சிவம், சத்தி, நாதம் , விந்து, மனோன்மணி, மகேசை, உவமை, இலக்குமி, சரசுவதி என்பன சத்திக்குரிய ஒன்பது திருமேனிகள். இறைவன் எவ்வாறு வடிவம் ஒன்பதிலும் நின்று நடத்துகின்றானோ அவ்வாறே சத்தி வடிவம் ஒன்பதிலும் பசாசத்தி நின்று நடத்துவாள். இவ்வாறு சிவமும் சத்தியும் வேறுபட்ட வடிவுகளாய் நின்று உலகை நடத்துவதால் சத்தியால் தோற்றுவிக்கப் பெற்ற உலக வடிவமெல்லாம் சத்தியும் சிவமுமாயிருக்கும். (பா : 166) இவ்வாறு சிவமும், சத்தியும் இணைந்திருந்தாலும் சிவன் மணமிலா இளைஞன் ஆவான். சத்தி கன்னியவாள் என்பதை,

*"சிவம்சத்தி தன்னை ஈன்றும்*
*சத்திதான் சிவத்தை ஈன்றும்*
*உவந்துஇரு வரும்பு ணர்ந்துஇங்கு*
*உலகுஉயிர் எல்லாம் ஈன்றும்*
*பவன்பிரம சாரி ஆகும் ;*
*பான்மொழி கன்னி ஆகும்,*
*தவம்தரு ஞானத் தோர்க்குஇத்*
*தன்மைதான் தெரியும் அன்றே"* (பா : 167)

என்று குறிப்பிடுகின்றார்

இவ்வாறு சத்தி பற்றிய செய்திகளை மெய்கண்டார் வழிநின்று-வடிவ விளக்கங்களையும் - தொழில் விளக்கங்களையும் - இணைப்பு நிலையினையும் அருணந்தி சிவாசாரியார் விளக்குகிறார்.

சைவசாதனங்கள்

மும்மலங்கட்குட்பட்ட உயிர்கள் அம்மலங்களின் சார்பால் பலவகைப் பிறப்புகளை எய்தி - நுகர்ச்சிப் பொருள்களை நுகர்ந்து இன்ப துன்பங்களை அடையும். இன்ப, துன்பங்களை அடைந்த உயிர் துன்பத்தை நீக்குவதற்கும், துன்பங் கலவாத பேரின்பத்தினை அடைவதற்கும் அவாவும் பொழுது இறைவன் அவ்வுயிர்களின் நிலைகளுக்கு ஏற்பத் திருவருள் வீழ்வு (சத்திநிபாதம்) தந்தருளுவான். அதோடு நன்னெறி பலவற்றை உள்ளீடாக (அந்தர்யாமியாக) நின்றும், குருவாகக் காட்சி தந்தும் அறிவித்திடுவான். அத்தகைய நெறிகளையே சை சித்தாந்தம் சைவ சாதனங்களாகக் குறிப்பிடும்.

மெய்கண்டார் சிவஞான போதத்தின் எட்டாம் சூத்திரத்தின், முதல் அதிகரணத்தில் பயன் கருதாது வந்த சரியை, கிரியை யோகங்களாகிய தவமுதிர்ச்சியினால், உயிர்க்கு உயிராக இருந்து உணர்த்திவரும் முதல்வன் ஞானாசிரியனாகத் தோன்றி மெய்யுணர்வைத் தந்தருள்வான் என்று குறிப்பிடுவார். அவ்வாறு குறிப்பிடும் பொழுது மூவகை உயிருக்கு எவ்வாறு மெய்ஞ்ஞானம் உணர்த்துவான் என்பதையும் குறிப்பிடுகிறார். மெய்கண்டாரின் இந்தக்கருத்தை அருணந்தி சிவாசாரியார் விளக்கித் தந்துள்ளார். குருவாகி இறைவன் மெய்ஞ்ஞானம் அருளுவதைத் தீக்கை நிலையாக அருணந்தி சிவாசாரியார் காட்டுவார். தீக்கையின் வகைகளை வேத ஆகம நெறி நின்று விளக்குகிறார். அதுபோல நால்வகை நெறிகளை விளக்கும் பொழுது - முற்பட்ட சைவ இலக்கியச் சான்றுகளைக் கொண்டு விளக்கிக் காட்டுகிறார். இவ்வாறு சைவ சாதனங்களை அருணந்தி சிவாசாரியார் விளக்கிக் காட்டும்பொழுது பின்னோன் வேண்டும் விகற்பங் கூறிடும் முறை அமைகிறது.

சாதனங்களைச் சைவ சித்தாந்த நூல்கள் சாதன இயல் எனத் தனி இயலாக வைத்துக் கூறும். சாதனம் என்பதற்குக் கருவி என்றும், முயற்சி என்றும் பொருள்கள் உள.[20] எனவே அந்நூல்கள் இறைவனருளைப் பெறப் பயன்படும் சாதனங்களாக

ஐந்தெழுத்தையும், வழிபாட்டு முறைகளையும், தீக்கை முறைகளையும் அப்பகுதியில் குறிப்பிடுகின்றன. திருமூலர் திருமந்திரத்திலும், தேவார, திருவாசக, பெரியபுராணத் திருமுறைகளிலும் இச் சாதனங்கள் பேசப்பெற்று இறைவனுடைய பெருமைகள் குறிக்கப் பெற்றுள்ளன. அருணந்தி சிவாசாரியாரும் தம் பால் பாடங்கேட்கும் மாணவர்களுக்குஅருளுரைகளைக் கூறித் தீக்கைகளையும் செய்தருளிய காரணத்தால் தம்முடைய நூலில் சாதனங்களைப் பற்றிய செய்திகளை விரிவாகத் தந்துள்ளார். மெய்கண்டாரைப் போலவே எட்டாம் சூத்திரத்தில் தீக்கை முறைகளையும், நால்வகை நெறிகளையும் விளக்கியுள்ளார்.

**தீக்கை வகைகள்**

தீக்கை என்பது ஆசாரிய மூர்த்தி வாயிலாய் நின்று முதல்வனே அத்துவ சுத்தி செய்து ; மலமகற்றிச் சிவத்தை விளங்கச் செய்து, ஞானத்தை அருளி வீடளிக்கும் முறையாகும். இந்தத் தீக்கை நிலையை மும்மலர்க்கு (சகலர்க்கு) இறைவன் அருளுவான் என்பது அருணந்தி சிவாசாரியாரின் முடிபு ஆகும். மும்மலர்க்கு இருவினை ஒப்பும், மலநீக்கமும் வந்தவிடத்து மிகமென்மை, மென்மை, விரைவு, மிகவிரைவு (மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்) என்ற நான்கு வித அருள்வீழ்நிலை நிகழும். அப்பொழுது முதல்வன் மும்மலப் பிரிவினருள் ஒருவரை ஆதாரமாகக் கொண்டு நின்று உண்மை ஞானத்தை உணர்த்துவான் என்று குறிப்பிடுகிறார். (பா : 254) இவ்வாறு குருமூர்த்தியாக நின்று மலத்தை ஒழிக்கும் முறைமை பலவகையாகும். நயன தீக்கை, பரிச தீக்கை, வாசகதீக்கை, பாவனா தீக்கை, சாத்திர தீக்கை, யோக தீக்கை, ஔத்ரி தீக்கை, ஞான தீக்கை, நிர்ப்பீச தீக்கை, சபீச தீக்கை என்பன அவை. இவ்வாறு தீக்கைகளைக் குறிப்பிட்டாலும் (பா : 255) அருணந்தி சிவாசாரியார் அவற்றிற்குரிய விளக்கங்களைக் குறிக்கவில்லை. நிர்ப்பீசத் தீக்கையும், சபீசத் தீக்கையும்தான் அவரால் விளக்கப் படுகின்றன. நிர்ப்பீசத் தீக்கையும், சபீசத் தீக்கையும் ஔத்ரி தீக்கையின் வகைகளாகும். மற்றத் தீக்கைகளை உரையாசிரியர்கள் விளக்கியுள்ளனர்.

1. நயன தீக்கை

ஆசிரியர் தமது நோக்கத்தால் மாணவனது எஞ்சு வினையை அறுத்தலாகும்.

2. பரிச தீக்கை

ஆசிரியர் தமது திருக்கரங்களானும், திருவடிகளாலும் தீண்டி ஆணவ மலத்தை நீக்குதல்.

3. வாசக தீக்கை

சொற்களாளல் அருளுரை செய்வது.

4. பாவானா தீக்கை

இதனை மானதம் என்பர். ஆசிரியர் மாணவனைத் தமது அருள் உருவாகப் பாவித்து மாயாமலத்தை நீக்குதலாகும்.

5. சாத்திரத் தீக்கை

பதி, பசு பாசங்களின் இலக்கணங்களையும், பசு, பாசத்திலிருந்து நீங்க முத்தியடையும் முறைமைகளையும் நூல் வழியாக அறிவுறுத்தல். இதுவே மெய்கண்டார் அருணந்தி சிவாசாரியாருக்குச் செய்த தீக்கை.

6. யோக தீக்கை

சிவயோகத்தைக் கடைப்பிடிக்கும்படி அறிவுறுத்தல்.

7. ஔத்ரி தீக்கை

வேள்விச் சடங்குகளால் செய்வது.

### ஞான தீக்கை

இதனை ஞான மனத்தால் சடங்குகளை இயற்றுவது என்றும் கூறுவர். குண்டல மண்டலாதிகளை மனத்தால் கற்பித்தலும், ஆகுதி முதலியவற்றை அகத்தே செய்தலுமாம். இத்தகைய விளக்கங்கள் உரையாசிரியர்களால் பெறப்படுகின்றன.[21]

### நிர்பீசத் தீக்கை

சிறுவர், இளைஞர், முதியவர், மாதர், பல துய்ப்பினை உடையவர், நோயினை உடையவர் ஆகிய இவர்களுக்குச் செய்யும் தீக்கை இத்தீக்கையாகும். இத்தீக்கை செய்யுங்கால் அவர் நுகர வேண்டிய வினைகளை ஆகுதியினால் தூய்மை செய்து, கடைபிடிக்க வேண்டிய சமய முறைமைகளையும் ஆகுதியினால் தூய்மை செய்து, நடைமுறையில் இயன்றவாறு கடைபிடிக்க அதிகாரத்தைக் கொடுத்துச் சிறப்பு நாள்களில் கடைபிடிக்க வேண்டிய அதிகாரத்தைக் கெடாததும் தீக்கை செய்வதாம்.

### சபீசத் தீக்கை

மலநீக்கத்தோடு கூடக், கற்றறிந்து, ஒழுக்க நெறிகளில் வழுவாது நிற்கும்ஆற்றல் மிக்குடைய உத்தமருக்குச் செய்யப்படுவதாம். செய்யுங்கால் அதிகாரியினுடைய பக்குவத்தை அறிந்து கடைபிடிக்க வேண்டிய சமய ஒழுக்கங்களைக் கடைப் பிடிக்கும்படி நிறுத்தி உலகநுகர்வு அனுபவத்திற்குரிய ஏனையச் செயல்களைச் சுத்தி செய்து, அதாவது அனுபவத்திற்கு வரவொட்டாமல் வேள்ளித் தீயால் கெடுத்தொழிந்து நாள் வழிபாடு (நித்தியம்), சிறப்புவிழா (நைமித்திகம்), விருப்பு விழா (காமிகம்) என மூன்றிலும் பேரதிகாரம் உடையதாகச் செய்யப்படும். இந்தத்தீக்கைப் பேறுடையார் துணை ஆசிரியர் (சாதகர்), ஆசிரியர் என இருதிறப்படுவர்.

இவ்வாறு இரு தீக்கை முறைகளை அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகிறார். மற்றத்தீக்கை முறைகளை ஆசிரியர் கூறாது நிர்பீசத் தீக்கையும், சபீசத் தீக்கையும் கூறியிருப்பதால் அருணந்தி சிவாசாரியாருக்கு இவ்விரு தீக்கையில் பயிற்சி இருந்தமையும்,

அவர்பால் தீக்கை பெற வந்தோர் இவ்விரு தீக்கைக்குரியவர்களாகவே இருந்திருக்கின்றனர் என்பதும், மேலும் அக்காலத்திய தீக்கை முறைகளில் இவை இரண்டும் வழக்கில் இருந்து சிறப்புற்றிருந்தமையும் புலனாகின்றது. இத்தகைய தீக்கை முறைகளை வடமொழியாளர்களே அதிகம் வற்புறுத்தி வந்தமையாலும், சிவனடியார்கள் இத்தீக்கை முறைகளைக் காட்டிலும் தொண்டு மனப்பான்மையில் அதிகம் நாட்டம் கொண்டிருந்தமையாலும் மெய்கண்டார் தீக்கை முறைகளை அதிகம் வலியுறுத்தாது - நால்வகை நெறிகளை மட்டுமே வலியுறுத்தியுள்ளார். ஆனால் வடமொழிப் புலமையும் - அம் மொழி நூல்கள் கூறிய சடங்கு முறைகளில் பயிற்சியும் அருணந்தி சிவாசாரியாருக்கு அதிகம் இருந்தமையால் தம் நூலில் பெரிதும் அவற்றை விளக்கி மொழிந்துள்ளார்.

## நால்வகை நெறிகள்

சைவசாதனங்களில் அடுத்து இடம்பெறுவது நால்வகை நெறிகளாகும். மும்மலங்கள் நீங்கத் தீக்கை முறைகளைக் கூறிய அருணந்தி சிவாசாரியார் நால்வகை நெறிகளை முத்தி கொடுப்பன என்ற முறையில் விளக்குகின்றார். சிவஞான போதத்தில் மேற்கோள் ஏதுவில் கூறப்பட்டுள்ள நால்வகை நெறிகளை இவர் திருமுறைகள் கூறியபடி விளக்கிக் காட்டுகிறார். எட்டாம் சூத்திரத்தில் 2ஆம் அதிகரணத்தில் இறைவன் மலம் அகற்றி முத்தி அளிப்பவன் என்பதைக் குறிப்பிட்டு (ப : 269) அவ்வாறு இறைவன் முத்தி அளிப்பதற்கு உயிர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நால்வகை நெறிகளை விளக்குகிறார். சிவபெருமானுடைய திருவடிகளைச் சேர்வதற்குரிய நல்ல நெறிகள் நன்னெரி (சன் மார்க்கம்) என்றும், தோழமை நெறி (சகமார்க்கம்) என்றும், மகன்மைநெறி (சற்புத்திர மார்க்கம்) என்றும், தொண்டுநெறி (தாசமார்க்கம்) என்றும் நால்வகைப்படும். இவை முறையே ஞானபாதம், யோகபாதம், கிரியா பாதம், சரியா பாதம், என்றும் கூறப்படும். இவற்றிற்கு முறையாக இறைவன் உலகில் இருத்தல், இறைவன் உடன் இருத்தல், இறைவன் வடிவம் பெறல், இறைவனோடு இரண்டறக் கலத்தல் (சாயுச்சியம், சாரூபம், சாமீபம், சாலோகம்) என்ற நால்வகையான முத்திகள் கிடைக்கும். இவற்றுள் முதன்மையான ஞானபாதத்தால் அடையும் சிவசாயுச்சிய முத்தி - "பர முத்தியாகும்." ஏனைய மூன்றினுக்கும் உரிய முத்தி "பதமுத்தியாகும்".

## தொண்டுநெறி

சரியை என்று சொல்லப்படும் தொண்டுநெறி திருக்கோயில்களில் திருஅலகிட்டு, திருமெழுக்குமிட்டு, பூக்களும் எடுத்து,இறைவற்கு மாலை சமைத்துக் கொடுத்து, இறைவனை வாயார வாழ்த்தி, திருவிளக்கேற்றி, நந்தவனம் அமைத்துச் சிவனடியாரைக் கண்டபொழுது அடியேன் செய்யத் தக்கப் பணி யாது? என்று வணங்கி அவர்கள் அருளிச் செய்த பணியை ஏற்றுச் செய்வதாகும் என்று அருணந்திசிவாசாரியார் குறிப்பிடுகின்றார். (பா:271) இக்கருத்து கீழ்க்கண்ட பாடல்களின் கருத்துகளை உட்கொண்டதாக விளங்குகிறது.

*"நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா*
*நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்*
*புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்*
*பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்*
*தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்*
*சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்*
*அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதி யென்றும்*
*ஆரூரா வென்றென்றே யலறா நில்லே"*

(அப்பர் தேவாரம்,6-31-3)

*"ஆமாறுன் றிருவடிக்கே யகங்குழையே னன்புருகேன்*
*பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்*
*கோமானின் திருக்கோயில் தூ கேன் மெழுகேன் கூத்தாடேன்*
*சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வேனே"*

(திருவா - திருச்சதகம் - 14)

## மகன்மை நெறி

கிரியை என்று சொல்லப்படும் மகன்மைநெறி மலர்கள், நறும்புகை, நல்விளக்கு, திருமஞ்சனம், திருவமுது அமைத்து, ஐவகைச் சுத்தி செய்து, இடத்தினில் மூர்த்தியை எழுந்தருளச் செய்து மூர்த்தி மானாகிய பரஞ்சோதியை உளமாற நினைந்து மெய்யன்போடு

மலர்தூ விப் போற்றி வழிபட்டு, அழலோம்பி வழிபாடு செய்தலாம் என்று அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார். (பா : 272) இத்தகு கருத்துகள் கீழ்காணும் பாடல்களோடு ஒப்பிட்டுக் காணக் கூடியன.

*"நறைமலிதருமள றொடுமுகைநகுமலர் புகைமிகுவளரொளி*
*நிறைபுனல்கொடுதனை நினைவொடுநியதமும் வழிபடுமடியவர்*
*குறைவிலபதமனை தரவருள்குணமுடை யிறையுறைவனபதி*
*சிறைபுனலமர்சிவ புரமதுநினைபவர் செயமகடலைவரே"*

(சம்பந்தர் - 1-21-4)

*"நெய்யாடி நின்மலனே நீல கண்டா*
*நிறையுடையாய் மறைவலாய் நீதியானே*
*மையாடு கண்மடவாள் பாகத் தானே*
*மான்றோ லுடையாய் மகிழ்ந்து நின்றாய்*
*கொய்யாடு கூவிளநற் கொன்றை மாலை*
*கொண்டடியே னானிட்டுக் கூறிநின்று*
*பொய்யாத சேவடிக்கே போது கின்றேன்*
*பூம்புகலூ ர் மேவிய புண்ணியனே"*

(அப்பர் - 6-99-8)

*"இயக்கர் கின்னரர் யமனொடு வருண*
*ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள்*
*மயக்க மில்புலி வானர நாகம்*
*வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம்*
*அயர்ப்பொன் றின்றிநின் றிருவடி யதனை*
*யர்ச்சித் தார்பெறு மாரருள் கண்டு*
*திகைப்பொன் றின்றிநின் றிருவடி யடைந்தேன்*
*செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே"*

(சுந்தரமூர்த்தி - 7-திருப்புன்கூர்.6)

## தோழமை நெறி

யோக மார்க்கம் எனப்படும் தோழமை நெறி ஐம்பொறிகளையும் புலன்வழிச் செல்லாது தடுத்து, இருவகை மூச்சையும் அடக்கி, மனத்தை ஒருவழிப் படுத்தி, உடம்பினுள் ஆறாதாரங்களுக்கு மேலே சென்று பிரமந்திரத்தில் ஒழுகும் அமிர்த தாரை ஒழுக்கால் உடம்பு நனைந்திருப்பத் தான் சிவசோதியைக் கண்டு சமாதி நிலையை அடைந்திருப்பதாகும் என்று குறிப்பிடுகின்றார். இக்கருத்து கீழ்க்கண்ட தேவாரப் பாடல்களோடு ஒப்பிடத்தக்கன.

*"ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்*
*ஞான விளக்கினை யேற்றி நன்புலத்*
*தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்*
*ஆன கெடுப்பன வஞ்செ ழுத்துமே"*

(சம்பந்தர் - 3-22-3)

*"உயிரா வணமிருந் துற்று நோக்கி*
*யுள்ளக் கிழியி னுரு வெழுதி*
*உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தா*
*லுணரப் படுவாரோ டொட்டி வாழ்தி*
*அயிரா வணமேறா தானே றேறி*
*யமரர்நா டாளாதே யாரூ ராண்ட*
*அயிரா வணமேயென் னம்மா னேநின்*
*னருட்கண்ணா னோக்காதா ரல்லா தாரே"*

(நாவுக்கரசர் - 6-25-1)

*"தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்க ணாடொறும்*
*நாடுவ னாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்*
*மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே*
*ஆடுவ னாடுவ னாமாத் தூரெம் மடிகட்கே"*

(சுந்தரமூர்த்தி-7 -திருவாமாத்தூர்-9)

## நன்னெறி

நன்னெறியாவது கலைஞானம் முதலிய யாவற்றையும் கற்றறிந்து சமய நூற் பொருள்கள் யாவும் அறிந்து, தெளிந்து கண்டு முப்பொருள் இலக்கணம் கூறும் சிவாகம நெறியே சித்தாந்தம் எனத் தெளிந்து சிவனுள் இரண்டறக் கலந்து நிற்றலாம். இந்த ஞான நெறியே முத்திக்கு நேர்வழி என்றும், அதுவே சிவனடியைச் சேர்க்கும் நெறி என்றும் அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார் இக்கருத்து கீழ்க்கண்ட சம்பந்தரின் பாடலோடு ஒப்பிட்டுக் காணத் தக்கதாக அமைந்துள்ளது.

*“சுருதிகள்பலநல முதல்கலைதுகளறு வகைபயில்வொடுமிகு*
*உருவியலுா லகவை புகழ்தரவழியொழு குமெயுறுபொறியொழி*
*அருதவமுயல்பவர் தனதடியடைவகை நினையரனுறைபதி*
*திருவளர்சிவபுர நினைபவர்திகழ்குலன் நிலனிடைநிகழுமே”*

(சம்பந்தர் 1-21-6)

இந்நால்வகை நெறிகளைத் திருமுறைகளின் தொடர்போடு தொகுத்துக் காட்டிய அருணந்தி சிவாசாரியார் நன்னெறிக்கே முதன்மை கொடுத்துள்ளார். சமயநூல்களைக் கற்பதும், பிறகுக்குக் கற்பித்தலும் அவருடைய வாழ்வியலாக இருந்தமையால்தான் நன்னெறிக்கு முதன்மை தந்திருக்கிறார் என்பது நன்கு புலனாகின்றது.

## அணைந்தோர் தன்மை

மலநீக்கம் பெற்று முத்தராயினார் எடுத்த உடம்பு நீங்குமளவும், ஏனையோர் போல உடம்புடனே கூடியே நிற்பர். இவரைச் சீவன் முத்தர் என்பர். தமிழில் அணைந்தோர் எனக் கூறுவர். இவர் உடம்பொடு கூடி நின்றார் ஆயினும் இவர்தம் அகப்புறக் கருவிகள் எல்லாம் இறைஉணர்வு வழிப்பட்டே (பதிகரணங்களாக) நிலவும். இவர் செயல்கள் அனைத்தையும் இறைவன் தன் செயலாக ஏற்றுக் கொள்கிறான். இவருடைய சிந்தையும், மொழியும் இறைவனுடையவையாக இருக்கும் இத்தகைய சீவன் முத்தரின் சிறப்பைச் சைவ சித்தாந்த நூல்கள் அனைத்தும் விரித்துரைக்கின்றன.

திருவாசகத்தில் மணிவாசகப் பெருமான் தாம் சீவன் முத்தராய் விளங்கிய நிலையை அழகுற எடுத்துக் காட்டுகிறார்.

*"அன்றே என்றன் ஆவியும்,*
*உடலும், உடைமை எல்லாமும்*
*குன்றே அனையாய் என்னைஆட்*
*கொண்ட போதே கொண்டிலையோ*
*இன்றோர் இடையூறு எனக்குண்டோ*
*எண்தோள் முக்கண் எம்மானே*
*நன்றே செய்வாய் பிழைசெய்வாய்*
*நானோ இதற்கு நாயகமே"*

(குழைத்தபத்து-7)

இப்பாடலில் மணிவாசகர் தமக்கேற்பட்டிருக்கின்ற நன்றும், பிழையும் இறைவனுடைய செயல் என்று கூறித் தமக்கேற்பட்ட அனுபவ முதிர்வை வெளிப்படுத்துகின்றார். இது போன்று சுந்தரர் வாழ்வும், அப்பர் வாழ்வும் சீவன் முத்தர் நிலையிலேயே அமைந்திருந்தன என்பது வரலாறு. இவ்வாறு இறையடியார்கள் பலர் சீவன் முத்தர்களாய் வாழ்ந்து ஈறிலா இன்பம் பெற்றமை சைவ உலகில் காணக் கிடைக்கின்றன. இத்தகு சீவன் முத்தரின் தன்மையாம் அணைந்தோர் தன்மையை மெய்கண்டார், தம் நூலில் பன்னிரண்டாம் சூத்திரமாக அமைத்துள்ளார். அவர் சூத்திரத்தில் இடம்பெற்ற கருத்துக்கள்:

1. சீவன் முத்தர் செம்மலர் நோன்றாள் சேரவொட்டா அம்மலம் களைவர்.

2. அன்பரொடு மருவுவர்.

3. மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும் அரன் எனத் தொழுவர், என்பனவாகும். அதாவது சீவன் முத்தர்கள் மலத்தை நீக்கி, அடியார்களோடு கூடி அடியார்களையும், திருக்கோவில்களையும் சிவன் எனத் தொழுவார்கள். இவ்வாறு 12ஆம் சூத்திரத்தை அமைத்துள்ளார். வழிநூலாசிரியராகிய அருணந்தி சிவாசாரியாரும் சிவஞான சித்தியாரின் 12ஆம் சூத்திரத்தில் அணைந்தோர் தன்மையை விளக்குகிறார். ஆனால் மெய்கண்டார்

கூறியதைக் காட்டிலும் சில செய்திகளைப் பின்னோன் வேண்டும் மாற்றங்களுக்கு ஏற்ப விரித்துச் சொல்லியிருக்கிறார். சீவன் முத்தர் மலங்களை அறுத்து எங்கும் யாம் ஒருவருக்கும் எளியோம் அல்லோம், யாவர்க்கும் மேலானோம் என்று இறுமாப்பு எய்திச் சிவனடியாருடன் சேர்ந்து ஆடிப்பாடித் திரிந்திடுவர் என்று முதல் பகுதியை அமைத்துள்ளார். மெய்கண்டார் மலநீக்கத்தை மட்டும் கூறியிருக்க அருணந்தி சிவாசாரியார் மலம் நீங்கப் பெற்றவர் ஆடிப்பாடிக் களிப்பதைக் குறிப்பிட்டுச் சீவன் முத்தரின் திறனை விளக்குகிறார். இம்முதற் பகுதி மாணிக்கவாசகரின்,

*"தேவர்கோ அறியாத தேவ தேவன்*
*செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கும் மற்றை*
*மூவர்கோன் ஆய்நின்ற முதல்வன் மூர்த்தி*
*மூதாதை மாதாளும் பாகத் தெந்தை*
*யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்*
*யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்*
*மேவினோம் அவனடியார் அடியா ரோடும்*
*மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே"*

(திருச்சதகம் - 30)

என்ற பாடலின்கண் விரிவாக அமைந்துள்ளது எனலாம்.

அன்பரோடு கூடியிருத்தலை மெய்கண்டார் கூறியிருக்க, அருணந்தி சிவாசாரியார் சிவனடியாரைப் பேணவில்லை என்றால் அவர்தம் நிலை எத்தகையது என்பதை விளக்கியுள்ளார்.

*"ஈசனுக்கு அன்புஇல்லார் அடியவர்க்கு அன்பு இல்லார்*
*எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பு இல்லார்*
*பேசுவது என்? அறிவில்லாப் பிணங்களை நாம்இணங்களில்*
*பிறப்பினிலும் இறப்பினுலும் பிணங்கிடுவர்;"*

இப்பகுதி அருணந்தி சிவாசாரியார் தனித்திறத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளது. மூன்றாவது பகுதியில் மெய்கண்டாரும், அருணந்தி சிவாசாரியாரும் அடியார்பணியெனும் சேவையிலும்,

லிங்கசேவையிலும் ஒன்றுபட்டே காணப்பெறுகிறார்கள். இவ்வாறு மெய்கண்டாரின் வழியில் அணைந்தோர் தன்மையை விளக்கிடும்போது மேலும் விளக்கங்களை அமைத்துள்ளார் அருணந்தி சிவாசாரியார். இச் சூத்திரத்தின் இறுதியில் இடம்பெற்றுள்ள குரு இலக்கணம், குருசேவைப் பெருமை, குருசேவைப் பயன் ஆகியவையே அவை.

## குரு முறைமை

### குருவின் இலக்கணம்

ஞானம், யோகம், கிரியை, சரியை என்ற நான்கும் இறைவனது திருவடிப் பணிகளாகக் கொள்பவர் சிவனடியார் ஆவார். இவருள் ஞானி, நால்வகைச் சாதனைக்கும் உரியவர் ஆவார். எனவே முத்தியை வேண்டும் யாவர்க்கும் ஞானியே குருவாக வேண்டப் படுகிறார். அந்த ஞானகுரு முதல்வனாகக் கொண்டு வழிபடற்குரியவர் ஆவர். (பா : 326)

### குருவின் இன்றியமையாமை

மந்திரம் முதலியவற்றால் வேதஅறிவு முதலியன பெறலாம். திருவடி ஞானமும் குருவருளாளே தான் பெற முடியும். குருவருளால் மற்றைய அறிவுகள் வருமாதலால் குரு யாவர்க்கும் இன்றியமையாதவர் ஆவார். (பா : 327)

### குருசேவைப் பயன்

அருட்குருவே எப்பொருளுங் கடந்து நிற்கும் மேலான சிவத்தின் வடிவம், ஐந்தொழிலியற்றும் முதல்வனின் வடிவம், உயர் ஞான வடிவம் முதலிய இறைவனது திருமேனிகளும் ஆவரென்று கருதி வழிபடின், இறைவன் அவரிடமாக நின்று, கோழி, ஆமை, மீன் என்பன முறையே தம் முட்டையைத் தொட்டும், நினைந்தும், பார்த்தும் தம் தன்மையடையச் செய்யுமாறு போல, உயிர்கட்கு ஏற்றவாறு தொட்டும், நினைந்தும், பார்த்தும் அவைகளைச் சிவமாம் தன்மைப் பெருவாழ்வுடையவனாகச் செய்வர் என்று கூறிக் குருவினால் பெறப்படும் பயனைக் காட்டுகிறார். (பா : 328)

முடிவுரை

சைவ சித்தாந்த நூல்களில் சிவஞான போதமும், சிவஞான சித்தியாரும் தாயும், சேயும் போல அமைந்துள்ளன. இவற்றில் சிவஞான சித்தியார் பின் எழுந்த நூல்களுக்குத் தத்துவ விளக்கத்தில் ஓர் வழிகாட்டியாகவும், அமைகிறது. எனவே சிவஞான சித்தியார், சிவஞான போதத்தை நோக்கும் போது சேயாகவும், பின் எழுந்த நூல்களை நோக்கும் போது தாயாகவும் விளங்குகிறது எனலாம்.

தத்துவங்களை விளக்கும் பொழுதும் - உணர்வு நிலைகளை விளக்கும் பொழுதும் சிவஞான சித்தியார் விரிவான விளக்கங்களைத் தந்து - தெளிவு படுத்துவது குறிப்பிடத் தக்கது.

சைவநெறியில் வீடுபேறடையச் சித்தியார் குறிப்பிடும் சைவ சாதனங்கள் இக்காலச் சூழலிலும் கைக்கொள்ளும் நிலையில் அமைந்துள்ளன.

வீடு பேறு பெற விழைவோர் - மண்ணுலகில் வாழ்கின்ற போதே அணைந்தோர் தன்மை பெற்று - இறையருள் பெற்றிட முயலும் வண்ணம் அணைந்தோர் இயல்பு விளக்கப் பெற்றுள்ளது.

எத்துணைதான் தன்னறிவு மிக்கவராய் இருந்தாலும், ஆசானைச் சார்ந்து அமைவுறக் கேட்டுத் தெளிதல் இன்றியமையாதது என்பதைச் சித்தியாரின் குருவருள் திறன் கூறும் பாடல்கள் அறிவுறுத்துகின்றன.

# 5. யாப்பு - நடை - உத்தி

முன்னுரை; நூல்களில் இடம் பெற்றுள்ள பாவகை; வெண்பா- ஆசிரியப்பா - விருத்தப்பா; அணிகள் - உவமைகள் - அரச உவமைகள் - சமுதாய உவமைகள் - இயற்கை உவமைகள்; உருவக அணி - பிற அணிகள்; ஒலிநயம் - மோனை - எதுகை - முரண்; நடை - சொல்லமைப்பு விவாத நடை - புராணம் - உத்தி - முடிவுரை.

## முன்னுரை

ஒலிகள் அளவாலும், தன்மையாலும், முயற்சியாலும் வேறுபட்டு ஒழுங்காக அமைந்து இனிமை பயப்பது ஒலிநயம் ஆகும். அந்த ஒலிநயம் இயற்கையாக உணர்ச்சிகளோடு இயைந்து பிறப்பதாகும். இயற்கையான இந்த ஒலி நயத்தை வளர்த்து வாய்பாடுகளாக்கி ஒருவகைச் சேர்க்கை அமைப்பைத் தந்தனர் முன்னோர். அதற்கு யாப்பு எனப் பெயரிட்டனர்.[1] இத்தகைய யாப்பிற்குத் தொல்காப்பியர் இலக்கணம் வகுக்கும் பொழுது, எழுத்து முதலாகச் சொல்லப்பட்ட அழகுக்குக் குறிக்கப்பட்ட அனைத்திலக்கணங்களும் பொருந்தி, எடுத்துக் கூறவந்த பொருள்களை முடியச் சொல்வது யாப்பு என்று கூறுவார்.[2] இவ்விலக்கணத்தின்படி யாப்பில், தான் வைக்கக் கருதிய பொருளைக் கவிஞன் முழுமையும் வைத்துவிட வேண்டும் என்பது தெரிகிறது. கவிஞனின் எண்ணங்களை வெளிப்படுத்தும் இந்த யாப்பு, படிப்போன் உள்ளத்தில் மீண்டும் மீண்டும் அதனைப் படிக்கவேண்டும் என்ற உணர்வை ஊட்டுகின்றது. அவ்வாறு திரும்பத் திரும்பப் படிக்கும் பொழுது மனத்திற்கு மகிழ்ச்சியும் உண்டாகிறது. அந்த மகிழ்ச்சி படிப்போனை யாப்பிலிருந்து வேறுபடுத்தாது யாப்பையும் படிப்போனையும் ஒன்றுபடுத்தி விடுகிறது. "நமக்கு அப்பால் உள்ள ஒன்றில் (யாப்பில்) இத்தகைய வாய்பாடு (யாப்புநிலை) உள்ளதாக உணராமல் நாமே அந்த ஒலி வாய்பாடாக ஆகி விடுகிறோம்" என்று ரிச்சர்ட்ஸ் கூறும் கூற்று இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.[3] இவ்வாறு படிப்பவரைத் தம்பால் ஒன்றிவிடச் செய்கின்ற யாப்பு முறையில் அருணந்தி சிவாசாரியார் (தம் இரு நூல்களினால்) சிறந்து விளங்குகிறார்.

## நூல்களில் இடம் பெற்றுள்ள பாவகை

ஆசிரியரின் முதல் நூலாகிய இருபா இருபஃது இரண்டு பாவகைகளைப் பெற்றிருக்கின்றது. வெண்பா யாப்பையும், ஆசிரியப்பா யாப்பையும் பெற்று விளங்குகின்றது. வெண்பா யாப்பு முதலில் வர, ஆசிரியப்பா யாப்பு அடுத்துவர இவ்வாறு ஒன்றன் பின் ஒன்றாக மாறி மாறி இருபது பாடல்கள் அமைந்தால் அது இருபா இருபஃது என்ற நூல் வடிவாகும் என்று பாட்டியல் நூல்கள் கூறுகின்றன.[3அ] அதன்படி முதலில் வெண்பாவைப் பெற்று, அடுத்து ஆசிரியப்பாவைப் பெற்று இருபது செய்யுட்களைக் கொண்டு இந்நூல் விளங்குகிறது.

"பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
ஓர் விருத்தப் பாதி போதும்"[4]

என்ற குருஞான சம்பந்தரின் வாக்குப்படி சிவஞான சித்தியார் விருத்தப் பாவால் அமைந்துள்ளது. எனவே அருணந்தி சிவாசாரியார் நூல்களில், வெண்பா, ஆசிரியப்பா, விருத்தப்பா அகிய மூன்று வகைகள் அமைந்துள்ளன.

## வெண்பா

மொத்தம் பத்து வெண்பாக்கள் அமைந்துள்ளன. அப்பத்து வெண்பாக்களும் நேரிசை வெண்பாக்களாகவே உள்ளன. செப்பலோசை உடைத்தாய், ஈற்றடி முச்சீர்த்தாய், ஏனையடி நான்கு சீர்த்தாய், இரண்டாம் அடியின் இறுதியில் ஏற்ற தனிச்சொல் பெற்று வெண்சீர் வெண்தளையும், இயற்சீர் வெண்தளையும் விரவி, வேற்றுத் தளை விரவாது காசு, பிறப்பு, நாள், மலர் என்னும் வாய்பாடுகளுள் ஏதேனும் ஒன்றினை ஈற்றில் பெற்று முடிவது வெண்பாவின் பொது இலக்கணமாகும். இத்தகைய இலக்கணத்தோடு நான்கு அடிகளிலும் ஒரே எதுகையோ, அல்லது முன் இரண்டில் ஒன்றும் பின் இரண்டில் வேறொன்றும் ஆகிய எதுகையோ வருவது நேரிசை வெண்பா ஆகும்.

இருபா இருபஃது நூலில் காணப்படுகிற வெண்பாக்கள் பத்தும் இவ்விலக்கணங்களுக்குப் பொருந்தவே அமைந்துள்ளன. பத்துப் பாடல்களிலும் இயற்சீர் வெண்தளையும், வெண்சீர் வெண்தளையும் கலந்தே வருகின்றன. ஈற்றுச் சீர், நாள், மலர், பிறப்பு என்ற வாய்பாடுகளில் அதிகம் அமைந்துள்ளது. இறுதிவெண்பா (பத்தொன்பதாம் பாடல்) மட்டும் காசு என்ற வாய்பாட்டில் (உற்று) அமைந்துள்ளது. மூன்றாம் பாடலும் பத்தொன்பதாம் பாடலும் ஒரு விகற்ப எதுகையாய் அமைந்திருக்க மற்ற எட்டுப் பாடல்களும் இருவிகற்ப எதுகையயாக அமைந்துள்ளன. முதற்பாடலின் தனிச்சீர் "வெண்ணெய் நல்லூர்" என அமைந்துள்ளது. இது நாலசைச் சீராக அமைந்துள்ளது. அதாவது தேமாந்தண்பூ என்ற நாற்சீர் வாய்பாட்டைப்பெற்று வருகிறது. வெண்பாவில் மாச்சீரும், விளச்சீரும், காய்ச்சீரும் வருவதே இலக்கண மரபாகும். ஆயின் தேமாந்தண்பூ வந்திருப்பது ஓசை தடுமாறுவதற்குரியதாக அமைந்திருக்கிறது. எனவே அத்தனிச் சீரின் இடையில் வருகின்ற யகர ஒற்றை ஒலிப்பில் ஒலியாகக் கொண்டால் சீர் பிறழாது. (வெண்ணெ(ய்) நல்லூர்) இவ்வாறு அமைப்பின் வெண்பா இலக்கணம் மாறுபடாது வரும்.

## ஆசிரியப்பா

இருபா இருபஃதில் பத்து ஆசிரியப் பாக்கள் அமைந்துள்ளன. அவற்றில் இரண்டு பாடல்கள் (2, 8) நிலை மண்டில ஆசிரியப் பாவாகவும் எஞ்சிய எட்டுப் பாடல்கள் நேரிசை அசிரியப் பாவாகவும் அமைந்துள்ளன.

அகவலோசையும், ஆசிரிய உரிச் சீரும் பயின்று அளவடி உடையதாய், ஆசிரியத் தளை மிக்கு, பிற தளை மயங்கி, நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் அல்லாத பிற சீர்கள் எல்லாம் வரப் பெறுவதே ஆசிரியப்பா ஆகும். இப்பாவின் ஈற்றயலடி முச்சீராக அமைந்தால் அது நேரிசை ஆசிரியப்பா ஆகும். எல்லா அடியும் தம்முள் அளவொத்து அளவடியான் வரப்பெறுவது நிலைமண்டில ஆசிரியப்பா ஆகும். இவ்விலக்கணப்படி பத்துப்பாடல்களின் சீர்களும், தளைகளும் அமைந்துள்ளன.

## விருத்தப்பா

சிவஞான சித்தியாரின் 629 பாடல்களும் விருத்தப் பாடல்களாக அமைந்துள்ளன. இவற்றில் கலி விருத்தம், அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம், எழுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம், எண்சீர் கழிநெடில் ஆசிரிய விருத்தம் ஆகிய வகைகள் அமைந்துள்ளன. பரபக்கத்தில் கலி விருத்தமும், அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தமும், எழுசீர், எண்சீர் விருத்தங்களும் கலந்து வருகின்றன. ஆயின் சுபக்கத்தில் ஏழாம் சூத்திரம் வரை அறுசீர் விருத்தமும், எட்டாம் சூத்திரம் முதல் எண்சீர் விருத்தமும் அமைந்துள்ளன. இவ்வாறு பரபக்கத்தில் பலவகைகளைக் கலந்தும், சுபக்கத்தில் ஒரு வரையறைப் படுத்தியும் ஆசிரியர் அமைத்திருப்பது அவரின் அடிப்படைக் குறிக்கோளை விளக்குகிறது. பரபக்கம் பல மதங்களின் மறுப்பு. எனவே பாவினங்களும் கலந்து வருகின்றன. அதிலும் கொள்கைகளைக் கூறுகின்ற பாவினத்தால், மறுதலைகளை அமைக்காது பாவினத்தை மாற்றி அமைத்தருப்பது குறிப்பிடத் தக்கது. உதாரணமாக உலகாயதக் கொள்கைகளை அறுசீர் விருத்தத்தில் கூறிய அசிரியர், மறுதலையை எழுசீர், எண்சீர் விருத்தங்களில் கூறியுள்ளார். அதுபோலச் சௌத்திராந்திகன் மதக் கொள்கைகளை அறுசீரில் அமைத்து, மறுதலையை எண்சீரில் அமைத்துள்ளார். ஆசீவக மதக் கொள்கைகளை அறுசீரில் அமைத்து மறுதலையைக் கலி விருத்தத்தில் அமைத்துள்ளார். இத்தகைய அமைப்புகள் முன் கருத்தை வலியுறுத்துவனவாகும். ஆனால் சுபக்கமோ, சிவஞான போதத்திற்கு வழிநூலாக அமைந்ததால் அதிக மாற்றத்தைக் கொள்ளாமல் ஒரே சீராக அமைந்து இருவகை விருத்தத்தில் அமைந்துள்ளது.

நூலில் அமைந்திருக்கின்ற கலி விருத்தங்கள் யாப்பிலக்கணப்படியே அமைந்துள்ளன. அதாவது நான்கு சீர் கொண்ட அடி நான்காய் வருவது கலிவிருத்தம் ஆகும். இந்த அமைப்பிலேதான் பாடல்கள் அமைந்துள்ளன.

*"இந்திர புரோகிதன் இயம்புமொரு நூலின்*
*தந்திர மெனாதறிவி னோடருளி லாமல்*
*சந்தனை புயத்துமண மாலைகள் தயங்க*
*உந்தியுல கத்திலுல காயதன் உரைப்பான்"* (பர: 12)

என்ற கலிவிருத்தப் பாடலில் அமைந்திருக்கின்ற சீர்கள் அனைத்தும் ஆசிரியப் பாவிற்குரிய இயற்சீர், வெண்சீர், உரிச்சீர் ஆகிய சீர்களையே பெற்றிருக்கின்றன.

மற்ற அறுசீர் முதலாகிய விருத்தங்கள், ஆசிரிய விருத்தப் பாவுக்குரிய இலக்கணப்படியே அமைந்துள்ளன. இத்தகைய விருத்தப் பாக்களிலும் பின்வரும் வாய்பாடுகள் அமைந்துள்ளன.

**சுபக்கம் அறுசீர் விருத்தங்கள்**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | காய் | காய் | காய் | காய் | மா | மா. |
| 2. | மா | மா | காய் | மா | மா | காய். |
| 3. | காய் | மா | மா | காய் | மா | மா. |
| 4. | விள | மா | மா | விள | மா | மா. |

இந்த நான்கு வகை வாய்பாடு அமைப்புகளில் அறுசீர் விருத்தங்கள் அமைந்துள்ளன. முதல் அமைப்பில் ஒரு பாடலும், இரண்டாவது அமைப்பில் பத்துப் பாடல்களும், மூன்றாவது அமைப்பில் பதினேழு பாடல்களும், நான்காவது அமைப்பில் இருநூற்றுப் பதினான்கு பாடல்களும் அமைந்துள்ளன. இந்த வாய்பாடுகளில் தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய், கருவிளம், கூவிளம், தேமா, புளிமா ஆகிய அமைப்புகள் காணப்பெறுகின்றன.

சுபக்கம் - எண்சீர் விருத்தங்கள்

பின்வரும் அமைப்பில் வாய்பாடுகள் காணப்பெறுகின்றன.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | காய் | காய் | காய் | மா | காய் | காய் | காய் | மா. |
| 2. | காய் | காய் | மா | மா | காய் | காய் | மா | மா. |

என்ற இரு அமைப்புகளில் அமைந்துள்ளன. முன் அமைப்பில் 30 பாடல்களும் பின் அமைப்பில் 54 பாடல்களும் உள்ளன.

**பரபக்கம் அறுசீர் விருத்தங்கள்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. விள | மா | மா | விள | மா | மா. |
| 2. காய் | மா | மா | விள | மா | மா. |
| 3. மா | மா | காய் | மா | மா | காய். |

**எழுசீர் விருத்தங்கள்**

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | மா | மா | மா | விளம் | மா | மா | விளம். |
| 2. | மா | காய் | மா | காய் | மா | காய் | விளம். |
| 3. | மா | மா | மா | மா | மா | மா | விளம். |
| 4. | காய் | காய் | காய் | காய் | காய் | மா | மா. |

இத்தகைய வாய்பாடுகளால் ஆகிய யாப்பினை இரு நூல்களும் பெற்று இலங்குகின்றன. ஆசிரியர் இத்தகைய விருத்தப் பாவினங்களைக் கையாண்டதற்குக் காரணம் அக்காலச் சூழ்நிலையேயாகும். ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய தேவாரப் பாடல்களும், அதன்பின் தோன்றிய சீவக சிந்தாமணி, கம்பராமாயனம், பெரியபுராணம் உள்ளிட்ட சமய இலக்கியங்களும் விருத்தப்பாவால் யாக்கப் பெற்று மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்றிருந்தன. அதுபோலச் சிவஞான போத உண்மைகளுக்கு விரிவாக அமைந்த சிவஞான சித்தியாரை அருணந்தி சிவாசாரியார் மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்றிடச் செய்யும் நோக்கோடு விருத்தப்பாவால் செய்திருக்கிறார். இவ்வாறு இரு நுல்களிலும் யாப்பு வகைகளைக் கையாண்டு ஆசிரியர்தம் நுல்களைத் தத்துவ நூல்களாக மட்டும் அமைக்காது சிறந்த இலக்கியங்களாக எண்ணும்படியும் அமைத்துள்ளார்.

2

**அணிகள்**

தம் உள்ளத்தில் எழும் உணர்ச்சியைக் கற்பனையில் குழைத்துப் பாடலாகத் தரும் கவிஞர்கள், கற்பனையை வளப்படுத்த அணிகள் பலவற்றைப் பயன் படுத்துகின்றனர். “அணிகள் கவிஞனின் தனித் தன்மையைப் புலப்படுத்துவனவாகும். காலப்போக்கில் சொல்லாட்சியும், யாப்பு முறைகளும் மாறலாம். சமுதாய மாற்றம் ஓரளவு நிகழலாம். எனினும் அணிகள் கவிதையின் உயிராக அமைவதில் மாற்றம் இல்லை. கவிஞனின் உரைகல்லாகவும்,

புகழுக்குக் காரணமாகவும் அவை அமைகின்றன."[5] இத்தகைய அணிகள் அருணந்தி சிவாசாரியாரின் நூல்களில் இடம் பெற்றுக் கவிதைக்குச் சிறப்புச் செய்கின்றன.

## உவமைகள்

அழகுள்ள ஒரு பொருளை மற்றொன்றன் அழகோடு ஒப்பிட்டுக் காணுகின்ற உவமையே கலைகள் பலவற்றிற்கும் அடிப்படை என்பர்.[6] இத்தகு சிறப்பு மிக்க உவமைகள் வினை, பயன், மெய், உரு என்ற நான்கின் அடிப்படையில் தோன்றும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.[7] இலக்கிய நூல்களாக இருப்பின் இந்நான்கின் அடிப்படையில் உவமைகள் அமைவது எளிது. தத்துவ நூல்களில் வருணனை போன்றவற்றிற்கு அதிகம் வாய்ப்பில்லையாதலால் இந்நான்கின் அடிப்படையிலும், உவமைகளை அமைக்க இயலாது. மெய், உரு அடிப்படைகளை விட - வினை, பயன் அடிப்படையில்தான் அதிகமான உவமைகளைத் தத்துவ ஆசிரியர்கள் அமைத்துள்ளனர். அருணந்தி சிவாசாரியாரும் தம்முடைய இரு நூல்களில் வினை, பயன் என்ற இரண்டில், வினையின் அடிப்படையிலதான் அதிகமான உவமைகளைக் கையாளுகின்றார். மேலும் சிவஞான சித்தியார் பரபக்கத்தில் பிறமதத்தார் கூறியுள்ள உவமைகளை அப்படியப்படியே கையாண்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும். அதே நேரத்தில் சைவ சித்தாந்தக் கொள்கையை விளக்கும் பொழுது திருமந்திரம், சிவஞானபோதம் உள்ளிட்ட நூல்களில் கூறப்பெற்றுள்ள உவமைகளையும் எடுத்தாண்டுள்ளார். மேலும் கருத்து விளக்கங்களுக்குத் தாம்படைத்த பல உவமைகளையும் கூறியுள்ளார். அவர் அமைத்துள்ள உவமைகள் ஆய்வேட்டின் சுருக்கத்திற்காக அரச உவமை. சமுதாய உவமை, இயற்கை உவமை என்ற மூன்றுவித அமைப்புகளில் சிலவே குறிப்பிடப் பெறுகின்றன.

### அரச உவமைகள்

கி.பி. 13ஆம் நூற்றாண்டில் தமிழகத்தை முடியுடை வேந்தர்களும், குறுநில மன்னர்களும் ஆட்சி புரிந்து வந்தனர். மக்கள் மத்தியில் அரசன் ஆட்சியும், அரசனின் பழக்க வழக்கங்களும், அவனது அலுவலர்களின் செயல்களும் செல்வாக்குப் பெற்றிருந்தன.

எனவே தத்தவக் கருத்துகளை விளக்கும் போது அருணந்தி சிவாசாரியார் அரசனையும், அவனைச் சார்ந்தவர்களின் செயல்களையும் உவமைகளாகப் பயன்படுத்தி விளக்கம் தருகிறார். அவற்றில் ஒரு சில உவமைகள் எடுத்துக் காட்டப் பெறுகின்றன.

1. இறைவன் உயிர்கள் அனைத்திற்கும் இன்ப துன்பங்களைத் தம் ஆணையால் கொடுத்து அனுபவிக்கச் செய்கின்றான். இதனை விளக்க வந்த அருணந்தி சிவாசாரியார் சுபக்கம் 121 ஆம் பாடலில் அரசனை உவமையாக்கிக் காட்டுகிறார். அரசன் எவ்வாறு தண்டனையும், அருளும் மக்களுக்கு அளிக்கின்றானோ அதுபோல இறைவனும் வேத ஆகமங்களில் விதித்த விதிகளின்படி நடப்பவருக்கு வீடும், மற்றவருக்குத் துன்பமும் அளிக்கின்றான் என்பதே அப்பாடலின் கருத்தாகும்.

2. கீழ்உணர்வு நிலையை (கீழாலவத்தை) பற்றிக் குறிப்பிடும் பொழுது உயிரானது எவ்வாறு அந்த உணர்வுநிலைகளைப் பொருந்துகிறது என்பதை விளக்க அரச உவமையைக் கையாளுகிறார். உடல் கருவிகளோடு கூடிப் பொருள்களை அறிந்து, அனுபவித்த உயிர் உடலில் செல்லும்பொழுது, அதன்கண் நெற்றி (இலலாடம்), கண்டம், இருதயம் என்னும் இடங்களில் கருவிகளை விட்டு விட்டு, கொப்பூழ் இடத்தில் (நாபித்தானத்தில்) பிராணவாயுவைக் காவலாக வைத்து, மூலாதாரமாகிய அந்தப்புரத்திற்குத் தனியே சென்று நினைவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்புஅடக்கம் என்னும் ஐந்து உணர்வு நிலைளைப் பொருந்தும். இத் தத்துவத்தை விளக்கும்போது கீழ்க்கண்ட உவமையைப் பயன்படுத்துகிறார். "அமைச்சர் படைத்தலைவர் முதலியவரோடு வெளியில் உலாப் போன அரசன் மீள அரண்மனையுள் புகும்போது, ஒவ்வொரு வாயிலிலும் நிறுத்த வேண்டியவர்களை அங்கங்கே நிறுத்திக் காவலும் வைத்துப் பின் அந்தப்புரத்தில் தனியே புகுதலைப் போல" என்பது அவ்வுவமையாகும்.

*"படைகொடு பவனி போதும்*
*பார்மன்னன் புகும்போது, இல்லின்*
*கடைதொறும் விட்டு விட்டு*
*காவலும் இட்டு, பின்னர்*

*அடைதரும் தனியே, அந்தப்*
*புரத்தினில், அதுபோல் ஆன்மா*
*உடலினில் அஞ்சு அவத்தை*
*உறும் உயிர்காவ லாக"* (சுப-பா:222)

3. முடிவேந்தராகிய மன்னன் அட்சி செய்வதற்கு முழுமையும் உரியவன் என்றாலும், அமைச்சர்களைக் கலந்து நின்றே ஆட்சி செலுத்துவான். இத்தகைய அரசன் அமைச்சன் உறவை, உயிரானது எப்பொருளையும் தானாக அறியாது உடல் கருவிகளோடு கலந்து நின்றுதான் அறியும் என்பதை விளக்குவதற்கு உவமையாகப் பயன்படுத்துகிறார்.

*"புருடனே அறிவ னாகில்,*
*பொறிபுலன் ஆதி போதம்*
*தருவதுஎன்? அறிவு, மாயா*
*தனுகர ணாதி பற்றி,*
*வருவதுஇங்கு; அநாதி யாக*
*மலத்தினில் மறைந்து நிற்பன்,*
*அருவனாய்; இவற்றோடு ஆளும்*
*அமைச்சரும் அரசும் போல்வன்"* (சுப-பா:221)

4. அடுத்துச் சத்தியானது ஒன்றேயாய் இருந்து, செய்யும் தொழிலால் பல்வேறு வகைப்பட்டு நிற்கும் என்பதை விளக்க அரசனின் ஆணையை உவமையாக்கிக் காட்டுகிறார். அரசனது ஆணை ஒன்றாயிருந்து அமைச்சர், படைத் தலைவர், காவலர் முதலாயினோரிடத்துத் தொழில் வேறுபாட்டால் பலவகைப்பட நின்று செலுத்தவது போலச் சத்தியும் முதல்வனோடு பிரியாது ஒன்றாய் நின்று, பிரமன் முதலியோரிடத்துத் தொழில் வேறுபாட்டில் இச்சா சத்தி முதலிய சத்தியாகத் தொழிற்படுகிறது என்கிறார்.

*"சத்திதான் பலவோ? என்னில்,*
*தான்ஒன்றே ; அநேக மாக*
*வைத்திடும், காரியத் தால்*
*மந்திரி ஆதிக்கு எல்லாம்*

*உய்த்திடும் ஒருவன் சத்தி*
*போல், அர னுடைய தாகி ;*
*புத்திமுத் திகளை எல்லாம்*
*புரிந்து, அவன் நினைந்த வாறு ஆம்"* (சுப-பா:81)

இவ்வாறு அரசனுடைய நீதிநெறியையும், அரசனது காவலையும், அமைச்சர்களின் செயலையும், அரசனுக்கும் அமைச்சர்களுக்குமுள்ள உறவையும், அரசனது ஆணையையும் உவமையாக்கித் தத்துவக் கருத்துகளை ஆசிரியர் விளக்கும்போது கருத்துகள் எளிமையாக்கப் படுகின்றன

**சமுதாய உவமைகள்**

மக்கள் மத்தியில் காணுகின்ற செயல் முறைகளையும், மக்களில் சில உறுப்பினர்களையும் உவமையாக்கித் தத்துவத்தை விளக்கும் பாங்கு அருணந்தி சிவாசாரியாரிடத்துப் பெரிதும் காணப்படுகிறது. அருணந்தி சிவாசாரியாரின் இத்தகைய பாடல்களிலிருந்து தெரிந்ததைக் கொண்டு, தெரியாததை விளக்குவதற்குப் பெரிதும் பயன்படுகிற கருவி உவமை என்பது தெற்றெனப் புலப்படுகிறது. மனித வாழ்க்கையில் நடைமுறையில் காணப்படுகின்ற பழக்க வழக்கங்களை அவர் உவமையாக்கி, வெளிப்படையாக அறியமுடியாத இறைமைக் கொள்கைகளை வெளிப்படுத்துகிறார். இறைவன் பேரருள் திறம் உடையவன் என்பதைச் சைவ தத்துவக் கொள்கைகள் பெரிதும் வலியுறுத்துகின்றன. அத்தகைய இறைவன் உயிர்களிடத்துத் துன்பத்தை ஏன் ஏற்படுத்துகிறார் என்ற வினா எழுவது இயற்கை. இந்த வினாவிற்கு ஒரு நடைமுறை உவமை மூலம் அருணந்தி சிவாசாரியார் விடையளிக்கிறார் இறைவன் செய்கின்ற அருளும், தண்டித்தலும் கருணையினால் தான் என்பதைக் குறிப்பாக அவ்வுவமை மூலம் காட்டுகின்றார். பெற்றோர்கள் தம்முடைய பிள்ளைகள் தங்கள் சொல்வழி நடக்காவிட்டால் அவர்களை அதட்டிச், சிறுகம்பியினால் அடித்து, விலங்கும் இடுவர். இச்செயல்கள் வெகுளிபோல் தோன்றினாலும் குழந்தைகள் மேல் கொண்ட அன்பினால்தான் அச்செயல்கள் நடைபெறுகின்றன. இத்தகைய நிலையில்தான் இறைவனும் உயிர்களைத் தண்டிக்கின்றான் என்ற பொருள்பட,

*"தந்தைதாய், பெற்ற தத்தம்*
*புதல்வர்கள் தம்சொல் ஆற்றின்*
*வந்திடா விடின், உறுக்கி*
*வளாரினால் அடித்து, தீய*
*பந்தமும் இடுவர் ; எல்லாம்*
*பார்த்திடின், பரிவே ஆகும் ;*
*இந்தநீர் முறைமை யன்றோ-*
*ஈசனார் முனிவும், என்றும் ?"* (சுப-பா:106)

ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

2. சமுதாயத்தில் அனைவராலும் போற்றப்படுகிற பெருமை பெறுபவர் மருத்துவர் ஆவர். இம்மருத்துவரின் செயலை உவமையாகக் கொண்டு இறைவனின் திறத்தை ஆசிரியர் விளக்குகிறார். வேதாகமங்களின் விதிப்படி ஒழுகும் இடத்துப் பாவ, கன்மங்கள் வந்து பொருந்தாது. அங்ஙனம் ஒழுகாதவிடத்துப் பாவ கன்மங்கள் பொருந்தி, துன்பத்தை வருவிக்கும். இறைவன் அப்பாவ, கன்மங்களால் வரும் துன்பங்களை அனுபவிக்கச் செய்து அவற்றை ஒழிப்பான்.

இதனை விளக்க ஆசிரியர் கீழ்க்கண்டவாறு மருத்துவரை உவமையாக்குகிறார். மருத்துவநூலின்வழி ஒழுகுமிடத்து பிணிகள் உண்டாகாது. அந்நூலின்வழி ஒழுகாதவிடத்துப் பிணிகள் உண்டாகும். உண்டாகிய அப்பிணிகளை மருத்துவன் மருந்து கொடுத்து மாற்றுவான். இதுபோலத்தான் இறைவன் நிலையும் ஆகும் என்று குறிப்பிடுகிறார். மருத்துவன் மருந்து கொடுப்பதுபோல, இறைவனும் துன்பங்களை அனுபவிக்கச் செய்கிறான் என்று குறிப்பிடுகிறார். ஆசிரியர் காலத்தில் மருத்துவநூல் இருந்தமையை மருத்துவன் உரைத்த நூலின் வழிவரின் பிணிகள் வாரா என்ற வரி சுட்டுகிறது

*"மருத்துவன் உரைத்த நூலின்*
*வழிவரின், பிணிகள் வாரா ;*
*வருத்திடும் பிணிகள், தப்பின் ;*
*தப்பிய வழியும், செய்யத்*

*திருத்தினன் மருந்து, செய்யாது*
*உறும்பிணி சென்றும் தீர்ப்பன் ;*
*உரைத்தநூல் சிவனும், இன்னே*
*உறுங்கன்மம் ஊட்டித் தீர்ப்பன்"* (சுப-பா:124)

3. ஆசிரியர் காலத்தில் அறுவைச் சிகிச்சையைக் கூட மருத்துவர்கள் செய்திருக்கிறார்கள் என்பதை ஆசிரியரின் உவமையால் தெரிந்து கொள்ளுகிறோம்.

*"மண்ணுளே சிலவி யாதி*
*மருத்துவன், அருத்தி யோடும்*
*திண்ணமாய் அறுத்துக் கீறித்*
*தீர்த்திடும் ; சிலநோ யெல்லாம்*
*கண்ணிய கட்டி பாலும்*
*கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன் ;*
*அண்ணலும் இன்பத் துன்பம்*
*அருத்தியே வினை அறுப்பன்"* (சுப-பா:125 )

இப்பாடலில் இவ்வுலகத்தில் சில வியாதிகளை அறுத்துக்கீறி மருத்துவன் தீர்த்திடுவான். வேறுசில வியாதிகளைச் சர்க்கரையும், பாலும் கலந்து கொடுத்துத் தீர்ப்பான். அதபோல இறைவன் துன்பங்களையும், இன்பங்களையும் மருந்தாகக் கொடுத்து இருவினை நோயை மாற்றுவான் என்று கூறப்பெற்றுள்ளது.

இந்த மூன்று உவமைகள் மூலம், இறைவன் உயிர்களுக்குத் துன்பம் கொடுப்பது அந்தந்த உயிர்களுக்குத் தளை நீக்குதற் பொருட்டே ஆகும் என்பதைத் தெளிவு படுத்துகின்றார்.

4. மக்கள் மத்தியில் பொழுதுபோக்குச் சாதனமாக அருணந்தி சிவாசாரியார் காலத்தில் நாடகங்கள் பெரிதும் மதிக்கப் பெற்றிருக்கின்றன. எனவே நாடகக் கலையை உவமையாகக் கொண்டு சைவ தத்துவக் கொள்கைகளை ஆசிரியர் விளக்கியுள்ளார். உருவ, அருவ, அருவுருவ வடிவங்கள் இருந்தாலும் - இறைவன் தன் தன்மையில் வேறுபட மாட்டான். இக்கருத்தை நாடகநடிகர் மூலம்ஆசிரியர் விளக்கியிருப்பது மிகச் சிறப்பாகும். ஒருவன் இராவணன் முதலிய பல வேடங்களைக் கட்டி நடித்தாலும்,

அவன் தன்னுடைய இயற்கைத் தன்மையிலிருந்து சிறிதும் வேறுபடமாட்டான் என்பதைக் கீழ்வரும் பாடற்பகுதியால் விளக்குகிறார்.

*"ஒருவனே இராவணாதி பாவகம் உற்றாற் போலத்*
*தருவனிவ் உருவம் எல்லாம் தன்மையும் திரியான் ஆகும்"*[8]

இப்பாடலில் இராவணன் குறிக்கப்படுவதால் ஆசிரியர் காலத்தில் இராமாயண நாடகம் சிறப்புற்று விளங்கியிருக்கிறது என்பது புலப்படுகிறது. இராமாயணத்தில் சிவனடியானாக இராவணன் விளங்கியிருப்பதால் அவனையே குறிப்பிட்டிருப்பது சிறப்பானதாகும். மேலும் நாடக நடிகர்களிலேயே இராவண வேடம் ஏற்பது மிகக் கடினம். அப்படி ஏற்பவன் நாடகத்திற்குப் புறத்தே தன் இயல்புகளிலிருந்து ஒருசிறிதும் மாறமாட்டான் என்பதை உணர்த்தவே உவமையில் அதனைப் பயன் படுத்தியிருக்கிறார் என்பதும் தெரிகிறது.

5. ஆசிரியர் காலத்தில் தோற்பாவைக் கூத்து, மரப்பாவைக் கூத்து இரண்டும் சிறப்புற்றிருந்தமையால் அவற்றையும் உவமையாகக் கையாண்டிருக்கிறார். ஆன்மாவானது பஞ்சகோசங்களின் வேறாகியும், அவற்றோடு அதுவதுவாகியும் நின்று அவற்றைச் செலுத்தும் முறைமை, தோற்பாவை மரப்பாவைகளை ஆட்டுவோரும், தேரைச் செலுத்துவோரும் அவற்றுக்கு வேறாய் நின்று ஆட்டிச் செலுத்தும் தன்மையும், பல வேடங்கட்டி ஆடுவோர் அதுவதுவாய் நின்று ஆடுந் தன்மையும் போன்றதாகும் என்று குறிப்பிடுகின்றார்.[9] பாடலில் "வேடங்கட்டி ஆடுவோர் பரிசு போலும்" என்ற தொடரில் வேடங்கட்டி என்ற வழக்குச் சொல்லை அசிரியர் கையாண்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகுகம்.

6. சமுதாயத்தில் உறுப்பினராக விளங்கும் தொழிலாளர்களின் செயல்களையும் அருணந்தி சிவாசாரியார் உவமையாகப் பயன் படுத்தியிருக்கிறார். சைவ சித்தாந்த நூல்களில் முக்கியமாக இடம்பெறும் தொழில்உவமை குயவன் மண்பாண்டம் செய்வதாகும். இதனைப் பல இடங்களில் ஆசிரியர் கையாண்டிருந்தாலும் தொழிலை அப்படியே முழுமையும் சுட்டிக் காட்டுகின்ற இடம் குறிப்பிடத் தக்கதாகும்; குயவன் மண்பாண்டம் செய்கின்றபொழுது சுழற்றிவிடப் பெற்ற சக்கரம், பாண்டம் செய்து முடித்தபிறகும் சிறிது போழ்து

சுழன்று பிறகு இயக்கம் நிற்கும். இச்செயலை ஆசிரியர் உடலோடு கூடி நிற்கும் பழமை (பிராரத்த) வினையைக் குறிப்பதற்குப் பயன்படுத்துகிறார்.[10] குயவனின் வினைக்குப் பயன்பட்ட சக்கரம்போல் பழமை வினை அழிந்து படாது. ஆனால் அதே நேரத்தில் சக்கரத்தின் இயக்கம் இறுதியில் எவ்வாறு குன்றி வருகிறதோ அது போலப் பழமை வினையும் குன்றிவரும் என்று உவமை மூலம் விளக்குகிறார்.

7. அடுத்து வாணிகத் தொழிலை ஆசிரியர் உவமையாக்குகிறார்.

*"மாறி வாணி கஞ்செ யாதி*
*ருக்க வந்தி டாதனம்"*[11]

இப்பாடலில் பொருள்களைக் கொடுத்து, வாங்கி வாணிகம் செய்யாதிருந்தால் பொருள் வந்தடையாதது போல, உவர்ப்புகள் மாறி ஒரு தவம் செய்யாதிருந்தால் தவம் வந்து கூடாது என்று கூறி உவர்ப்புகளை விடுவதே தவமாகி விடாது, அவைகளை விடுத்த பின்னும் தவம் செய்யவேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

8. மேலும் வேடரின் செயலை உவமையாக்கும் பாடல் குறிப்பிடத் தக்கதாகும். நிகண்டவாதிகள் புண்ணிய பாவங்களைக் கூட்டுவிக்க ஒருவன் வேண்டியதில்லை என்று கூறுவர். ஏனென்றால் அம்பு சென்று தைத்தல் போலத் தானே பாவ, புண்ணியங்கள் நிகழும் என்று அவர்கள் கூறுவர். இதனை ஆசிரியர் மறுத்து,

*"வீடு மாக ணைக்கு நாடு*
*வில்லி போல வேண்டுமே"*[12]

என்ற பாடல் மூலம் விடப்படுகின்ற கணைக்கும், இலக்கை நாடி எய்கின்ற ஒரு வில்லி வேண்டுவதுபோல, இன்ப துன்பங்களைக் கூட்டுவிப்பதற்கு இறைவன் வேண்டும் என்று குறிப்பிடுகின்றார்.

9. அடுத்து அழுக்கு நீக்கும் தொழிலையும் ஆசிரியர் உவமையாக்கிக் காட்டியிருப்பது தொழிலுவமையில் மிகவும்

குறிப்பிடத் தக்கதாகும். இறைவன் உடல், கருவிகளைக் கொடுத்தல் உயிர்களின் குற்றங்களைப் போக்குவதற்காகும். மாயையில் இருந்து தோன்றுகின்ற உடல், கருவிகள் முதலியவையும் மலங்களாகும். எனவே மல கன்மங்களை மாயா மலத்தால் நீக்குவதென்பது - "தொழிலாளர்கள் (வண்ணான்) சாணியும், உவர் மண்ணுமாகிய அழுக்குப் பொருட்களைப் பொருத்தித் துணியில் முன் இருந்ததும், பின்னிருந்ததும் ஆகிய இருவகை அழுக்குகளைப் போக்குவது போன்றதாகும்" என்று உவமையைப் பயன்படுத்தி விளக்கியிருக்கிறார். இவ்வாறு தொழில் உவமைகளைப் பயன்படுத்தித் தத்துவக் கருத்துகளை எளிமைப்படுத்தி விளக்குவது அருணந்தி சிவாசாரியாரின் தனித் திறன் ஆகும்.

10 குருடர்களின் நிலையை உவமைப் படுத்தியும் தத்துவக் கருத்துகளை ஆசிரியர் விளக்குகின்றார்.

*"குருடன் முதுகில் முடவனிருந்து ஊர்ந்தாற் போல"*[13]

*"குருடன்தன் கண்ணின் குற்றம் கண்ணின்தன் குணமோ கூறாய்"*[14]

கண் தெரியாத மக்களை உவமையாக்குவன இந்தப் பகுதிகள். முதல் பகுதியில் குருடனுடைய முதுகிலே முடவனிருந்து நடத்தினாற் போல, அஞ்ஞானம் பெற்ற உயிரை, இறை கூடி அவனிடத்தே இருந்து கன்மத்துக்கு ஈடான தொழிலை நடத்தும் என்று குறிப்பிடப் பெறுகிறது. அடுத்த பகுதி ஆணவமலம் உயிரின் குணமன்று என்பதை விளக்கப் பயன் படுத்தப் படுகிறது. கண்ணொளியினை மறைக்கும் படலம் கண்ணின் குணமாகாது. அதுபோல ஆன்ம அறிவை மறைக்கும் மலம் ஆன்மாவின் குணமாகாது என்று குறிப்பிடுகின்றார்.

**இயற்கை உவமைகள்**

இயற்கைச் சூழல்களையும், அஃறிணை உயிர்களையும் ஆசிரியர் உவமைப்படுத்திச் சைவ சித்தாந்தக் கருத்துகளை விளக்குகின்றார்.

*"உருக்காண ஒண்ணாதபால் முலைபால் விம்மி*
*ஒழுகுவது போல்"*[15]

என்ற உவமை மூலம் எல்லா இடத்தும் நிறைந்திருக்கின்ற இறைவன், திருக்கோயில்களில் காணப்படும் உருவங்களின் மூலம் அருள் செய்கின்றான் என்பதை விளக்குகிறார். இப்பகுதி பசுவின் உடலெங்கும் செறிந்திருக்கும் பால் வெளிக்காண முடியாது பசுவின் முலைவழியாக விம்மிப் பொழிவது போல இறைவன் கருணையில் வெளிப்பட்டு அருள் செய்வான் என்பதை விளக்குகிறது.

அடுத்து வயலையும் விதைகளையும் உவமையாக்கி ஆங்காங்கே தத்துவக் கருத்துகளை ஆசிரியர் விளக்குகிறார். வயலில் இருக்கின்ற தழைகள் கெட்டுப் பின் பயன் தருவது போல, வினைகள் கெட்டு உயிருக்குப் பயன் தரும் என்பதைக் கீழ்வரும் உவமையால் விளக்குகிறார்.

*"வயலிடும் தழையும் தின்னும் மருந்தும் பின்*
*பலிக்குமா போல்"* [16]

உரமிட்ட வயலில் விதைத்திடும் விதையையும் ஆசிரியர் உவமையாக்குகிறார்.

*"வித்தின் இடத்தின் மரம், மரத்தின் வித்தும் ஆகி*
*இயையுமா போல்"* [17]

*"மேலைக்கு வித்துமாகி விளைந்தவை உணவுமாகி*
*ஞாலத்து வருமா போல்"* [18]

என்ற பகுதிகளும் குறிப்பிடத் தக்கன. முதல் உவமையில் விதைக்கப்பட்ட வித்தினிடத்தில் மரமும், மரத்தினின்று வித்தும் வந்து பொருந்துமாறு போல, உடலும், வினையும் ஒன்றுக்கொன்று காரண காரியத் தொடர்புடையதாக இருக்கும் என்று விளக்குகிறார்.

இரண்டாவது உவமை மூலம் விதைத்த வித்தினால் விளைந்தவை உணவுமாய்; பின்னர் வித்துமாய்ப் பயன்படுவது போல நல்வினை, தீவினைகள் புண்ணிய, பாவங்களாய் விளைந்து அவை மீண்டும் நல்வினை, தீவினைகளாக உருவாகின்றன என்பதை விளக்குகிறார்.

தத்துவ நூல்கள் ஆணவத்தை விளக்கப் பயன்படுத்துகின்ற செம்பு - களிம்பு உவமையையும் ஆசிரியர் பல இடங்களில் பயன்படுத்துகிறார்.

*"செம்பினில் களிம்பேய்த்து"*[19]

*"செம்பிற் காணலுறும் களிம்பிரதக் குளிகை*
*பரிசிக்கக் கழியும் செம்புரு நிற்கக் கண்டோம்"*[20]

என்று குறிப்பிடுகின்றார்.

அதுபோல விறகில் தீ என்ற உவமை மூலம் இறைத்தன்மை விளக்கப் படுவதை ஆசிரியர் தம் நூலில்,

*" இந்தனத்தின் எரி "*[21]

*" இந்தனத்தை அனல் அழிப்பது போல் "*[22]

*" இந்தனத்தின் எரிபோல் "*[23]

என்றும் குறிப்பிடுகிறார்.

மேலும் உயிரானது இறைவனோடு ஐக்கியமாதலை,

*" ஒன்றிய நீரொடுநீர் சேர்ந்தாற் போல "*[24]

என்றும், உயிரினிடத்தில் அறிவு மாறி மாறித் தோன்றி ஒடுங்கும் முறையை,

*" பவ்வமும் திரையும் போலும் "*[25]

என்றும், நீர் கடல் உவமைகள் மூலம் விளக்குகிறார்.

இவ்வாறு உவமையணியைப் பயன்படுத்தித் தத்துவக் கருத்துகளை ஆசிரியர் அழகுற விளக்குகிறார்.

**உருவக அணி**

உவமையணியின் ஒரு வளர்ச்சியே உருவக அணியாகும். எனவே தான், தொல்காப்பியத்தில் உவமையணி மட்டும் இடம் பெற்றிருக்கப் பின்னர் வந்த அணியிலக்கண நூல்களில் உவமையணியின் வளர்ச்சியாக உருவக அணி இடம் பெற்றுள்ளது. உவமையணியில் கூறப்படுகின்ற பொருள், உவமையோடு ஒன்றி விடுமானால் அதுவே உருவக அணியாகும். உவமையும், பொருளும் வேறுபாடு ஒழிந்து ஒன்றாக அமைந்துவிட்டால் அது உருவக அணியாகும் என்பார் தண்டி ஆசிரியர்.[26] இருவேறு பொருளை ஒன்றுபடுத்தி இயைப்பதால், இரண்டனைச் சார்ந்த தனித்தனி உணர்ச்சிகளும் சேர்ந்து ஆற்றல் மிக்க உணர்சியாய் வருகிறது. இவ்வளர்ச்சி ஆகிய உருவகத்தால் பாட்டு பெறும் பயன் பெரிது என்பார் டாக்டர் மு.வ.[27] ஆசிரியர் உருவக அணியில், ஏகதேச உருவக அமைப்பைப் பயன்படுத்தியுள்ளார். ஏகதேச உருவகம் என்பது உவமிக்கப்படும் பொருள்களில் ஒன்றினை உருவகப்படுத்தி மற்றொன்றினை உருவகப் படுத்தாமல் விடுவதாகும்.

*"அரன்விதி அருள தென்றே*
*அறைந்தனன் அதுவும் முன்னே ;*
*தரை, நரகு அருந் துறக்கம்*
*தனுகர ணாதி எல்லாம்*
*வருவதும் செய்து அநாதி*
*மலங்கள்இம் மருந்தால் தீர்த்து*
*பரகதி யதுவும் தந்து*
*பாதபங் கயமும் சூட்டும் "* (சுப-பா:141)

இப்பாடலில் உடல், கருவிகளை மருந்துகளாகவும், மலங்களை நோயாகவும் உவமித்து, இறைவனை மருத்துவனாக உருவகப் படுத்தாததால் இப்பாடலில் ஏகதேச உருவக அணி பயின்று வந்துள்ளது.

அதுபோலச் சுபக்கம் 123 ஆம் பாடலிலும் ஏகதேச உருவக அணி பயன் படுத்தப்பட்டுள்ளது. இப்பாடலின் இன்ப, துன்பங்களை

மருந்தாக உருவகப்படுத்தி - சிவபெருமானை மருத்துவனாக உருவகப்படுத்தி - பாவ, புண்ணியங்களை நோயாக உருவகப்படுத்தாததால் அப்பாடல் ஏகதேச உருவக அணியாகும்.

இவ்வாறு உருவக அணியைத் தம் நூலில் பயன்படுத்தினார் ஆயிற்று.

**பிற அணிகள்**

உவமையையும், உருவகத்தையும் பயன்படுத்திய அருணந்தி சிவாசாரியார் வேறு சில அணிகளையும் தம் நூல்களில் அழகூட்டுவதற்காகப் பயன்படுத்தியுள்ளார். எண்ணலங்காரத்தையும், பின்வருநிலை அணியையும், நிரல்நிறை அணியையும் ஆசிரியர் பயன் படுத்தியுள்ளார். நூலின் தொடக்கப் பாடலே அணியமைப்பைப் பெற்று விளங்குகின்ற பாடலாகும்.

"ஒரு கோட்டன், இருசெவியன், மும்மதத்தன்,
நால்வாய், ஐங் கரத்தன், ஆறு
தருகோட்டுஅம் பிறைஇதழித் தாழ்சடையான்
தரும்ஒரு வாரணத்தின் தாள்கள்" (சுப-பா:1 )

இப்பாடலில் எண்ணலங்காரம் அமைந்துள்ளது. ஒரு கோடு, இரு செவி, மும்மதம், நால்வாய், ஐங்கரம் என்று எண்களைப் பெற்றுப் பாடலில் எண்ணலங்காரம் அமைந்துள்ளது. நூலின் பல இடங்களில் சொல், பொருள் பின்வருநிலை அமைந்துள்ளது. பாடலில் சொல்லும், பொருளும் திரும்பத் திரும்ப வருமானால் சொற்பொருட் பின்வரு நிலையணியாகும்.

"*காரண அணுக்கள் கெட்டால்*
*காரிய உலகுஇன்று என்னில்*
*காரணம் மாயை ஆகக்*
*காரியம் காண லாகும்*
*காரணம் மாயை என்னை ?*
*காண்பது இங்கு அணுவே என்னில்*
*காரணம் மாயை யேகாண் -*
*காரியம் அணுவில் கண்டால்*" (சுப-பா:32)

*"காரியம் என்பது என்னை*
*காரண அணுவை என்னில்*
*காரியம் அவய வத்தால்*
*கண்டனம் கடாதி போல*
*காரிய உருவம் எல்லாம்*
*அழிதரும் கார ணத்தால்*
*காரிய உறுப்புஇல் மாயை*
*தரும் எனக்கருதி டாயே"*

(சுப-பா: 33)

இப்பாடல்களைப் போலச் சுபக்கம் 7, 58, 97, 161, 176 ஆகிய பாடல்களும், பரபக்கம் 50, 80, 120 ஆகிய பாடல்களும் இவ்வலங்காரத்தில் அமைந்துள்ளன.

நிரல்நிறை அணி என்பது சொல்லையோ, பொருளையே நிரலே நிறுத்திப் பொருள் கொள்வதாகும்.[28] இந்த அணியை அருணந்தி சிவாசாரியார் சில இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

"மும்மல நெல்லினுக்கு முளையோடு தவடுமிப் போல்"[29]

என்ற பாடல் வரியில் ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களுக்கு முளை, தவிடு, உமி ஆகிய மூன்றும் உவமையாக்கப் பெற்று நிரல்நிறை அணி ஆயிற்று.

*"பந்தமும் வீடு மாய பதபதார்த்தங்கள் அல்லான்*
*அந்தமும் ஆதி இல்லான்"*[30]

என்ற பாடலில் பந்தம் ஆதி என்றும், வீடு அந்தம் என்றும் பொருள் கொள்ளுமாறு எதிர் நிரல்நிறை அணி அமைந்துள்ளது.

அடுத்து ஆசிரியர் பயன்படுத்தும் அணிகளில் குறிப்பிடத் தக்கது ஒட்டணியாகிய பிறிது மொழிதல் அணியாகும். கவி, தன்னாற் கருதப்பட்ட பொருளை மறைத்து அதனை வெளிப்படுத்துவதற்குத் தக்க பிறிதொன்றினைச் சொல்லின் அது ஒட்டணியாகும்.[31]

*"ஆணையால் அவனி மன்னன்*
*அருமறை முறைசெய் யாரை*
*ஆணையின் தண்டம் செய்தும்*
*அரும்சிறை இட்டும் வைப்பன்*
*ஆணையின் வழிசெல் வோருக்கு*
*அரும்பதி செல்வம் நல்கி*
*ஆணையும் வைப்பன் எங்கும்*
*ஆணையே ஆணை யேகாண் !"* (சுப-பா:121)

இப்படலில் அரசன் தன் கட்டளைப்படி நடக்காதவரைச் சிறையிலிட்டுத் தண்டித்தும், கட்டளைப்படி நடப்பவரைத் தன் ஆணையினால் வாழவும் வைக்கிறான், என்று செயல்கள் கூறப்பெற்றிருக்கிறதே அன்றி அதன் மூலமாக ஆசிரியர் சொல்லக் கருதிய, இறைவன் துன்பம் தருவதும், வீடு அளிப்பதும் கூறப்படலில்லை. இருப்பினும் கூறப்பட்டிருக்கிற உவமையாலேயே ஆசிரியரின் கருத்து பெறப்படுகிறது. இக்காரணத்தால் இது ஒட்டணி ஆயிற்று.

இவ்வாறு அணிகளைப் பயன்படுத்தித் தத்துவ நூலில் ஆசிரியர் இலக்கியச் சுவையை ஏற்படுத்தியுள்ளார்.

## ஒலிநயம்

செய்யுளின் வடிவத்தில் ஒலிநயத்தை அமைத்துச் சுவையூட்டும் பாங்கு அருணந்தி சிவாசாரியாரிடத்துக் காணப்படுகிறது. ஒலி நயம் என்பது கேட்போரின்செவி வாயிலாக அவருடைய உடல் நரம்புகளை இயக்குவது. கண், செவி முதலானவை வெளி உலகத்தில் பொருள்களில் ஈடுபடாதவாறு இந்த ஒலிநயம் அவற்றின் செயல்களை ஒடுக்கி, உணர்ச்சிகளை உடம்பின் அளவில் அமைத்து நிறுத்திவிடும்.[32] படிப்பவர் உள்ளத்தில் பாட்டின் கருத்தைப் பதியவைக்கும் ஆற்றல் பெற்றது இந்த ஒலி நயம். தமிழில் ஒலிநயம் போற்றப் பெற்றிருக்கிறது என்பதற்கு யாப்பிலக்கண நூல்கள் சான்று பகர்கின்றன. ஒலிநயத்திற்கு உதவுகின்ற எதுகை, மோனை ஆகியவை எவ்வாறு அமையவேண்டும் என்பதனை யாப்பு நூல்கள்

கூறுகின்றன. தத்துவ நூல்களில் தத்துவங்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பது போல ஒலிநயத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லை. எனவே தான் தொடக்க காலத்தில் தத்துவ நூல்கள் சூத்திரங்களாகவே அமைந்துள்ளன, ஆனால் அருணந்தி சிவாசாரியார் தன்னுடைய நூலில் ஒலிநயத்திற்கும் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார். ஆதலால்தான் இயற்கையாகவே மோனை, எதுகை பெற்று - ஒலி நயமுடன் அவரின் நூல்கள் விளங்குகின்றன.

**மோனை**

அடிதோறும் முதலெழுத்து ஒன்றி வருகிற மோனையும் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

*"காணொ ணாகர ணங்க ளுக்குயிர்*
*கண்டி டாமையி னின்றெனிற்*
*காணு மோகடங்க கண்ட கண்ணினைக்*
*கண்டு நிற்பதுங் கண்ணதே*
*காணொ ணாகர ணங்க ளுக்குயி*
*ருண்மை யாவதுங் கண்டிடே"* (பர-பா:51)

இதுபோலப் பரபக்கத்தில் 53, 73, 74, 84, 124, 133, 211, 215, 270 ஆகிய எண்களைக் கொண்ட பாடல்கள் மோனை பெற்று ஒலிநயத்திற்கு எடுத்துக் காட்டுகளாக அமைந்துள்ளன.

*"காலமே கடவு ளாகக்*
*கண்டனம் தொழிலுக்கு என்னில்*
*காலமோ அறிவின் றாகும்*
*ஆயினும், காரி யங்கள்*
*காலமே தரவே காண்டும்*
*காரணன் விதியி னுக்குக்*
*காலமும் கடவுள் ஏவ*
*லால் துணைக் கார ணம்காண்"* (சுப-பா:30)

இதுபோலச் சுபக்கத்தில் 68, 103, 121, 166, 188, 189, 190, 204, 233, 245, 246, 299 ஆகிய பாடல்கள் மோனையோடு கூடிய பாடல்களாக அமைந்துள்ளன.

**எதுகை**

பாடல்களில் அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகை எனப்படும். இந்த ஒலிநயம் சித்தியாரில் நூல் முழுமையும் அமைந்திருக்கிறது.

*"காயத்தின் குணம தன்றிக்*
*கண்டதான் மாவுண் டாயின்*
*மாயத்திற் சொல்லி டாதே*
*மனமுத வாறி னுக்கும்"*

(பர-பா:21)

*"அருளினால் ஆக மத்தே*
*அறியலாம் அளவி னாலும்*
*தெருளலாம் சிவனை, ஞானச்*
*செய்தியால், சிந்தை யுள்ளே"*

(சுப-பா:6)

**முரண்**

சொல்லோ, பொருளோ அடிகளில் மறுதலைப்படத் தொகுக்கப் படுவது முரண்தொடை ஆகும். இந்த முரண் தொடைகளை ஆசிரியர் ஆங்காங்கு கையாண்டு பாக்களுக்கு அழகு கூட்டியுள்ளார்.

உதாரணமாகப் பரபக்கத்தில்,

*"**இன்பம்** எய்தி இருந்த நீவினை*
*இல்லை இங்கியல் என்றிடில்"*
*"**துன்பம்** எய்திடு வெனென் மற்றிது*
*சொல்லிடாய்"* (பா:48)

*"**நிறைந்து** காயமோடு சீலன்*
*நின்ற தாகில் இவ்வுடல்"*
*"**குறைந்த** போது தானுமித்தொடு*
*ஒக்கவே குறைந்திடும்"* (பா:156)

என்ற பாடல் வரிகளையும், சுபக்கத்தில்,

*"வாழ்வெனும் மையல் விட்டு*
*வறுமையாம் சிறுமை தப்பித்*
*தாழ்வெனும் தன்மை யோடும்*
*சைவமாம் சமயம் சாரும்"* (பா:181)

என்ற பாடல் வரிகளையும் குறிப்பிடலாம்.

இவ்வாறு தொடை விகற்பங்களை அமைத்து ஒலிநயத்தை ஆசிரியர் தம்முடைய நூலில் அமைத்திருக்கிறார் எனலாம்.

3

**நடை**

நூலைப் படைக்கும் கவிஞன் ஒருவன் சிறந்த - தக்க சொற்களைத் தேர்ந்தெடுத்து அச் சொற்களை ஒலிநயத்திற்கு ஏற்பப் பொருத்தமான இடங்களில் அமைத்திடுவானேயானால் அப்படைப்பு சிறந்த நடையைப் பெற்று விளங்குகிறது. (மிளிருகிறது) எனலாம். எனவே கவிஞனின் நடை அவனுடைய உள்ளத்தை ஒட்டி அமைகிறது. "புலவரின் உள்ளத்தில் உண்மையும், உறுதியும் சிறந்து விளங்கினால் அவருடைய நடை, திட்பமும், நுட்பமும் அமைந்ததாகும். அவருடைய உள்ளத்தில் தெளிவு இருந்தால் நடையில் எளிமை விளங்கும். அவருடைய உள்ளத்தில் ஆர்வம் மிகுதியானால் நடையில் ஆற்றல் மிகுதியாகும். அவருடய உள்ளத்தில் துன்ப உணர்வு பெருகினால் நடையில் சோர்வும் குழைவும் பெருகும். உள்ளத்தில் இன்ப உணர்ச்சி பெருகினால் நடையில் சுவையும், கவர்ச்சியும் பெருகும். அவருடைய உள்ளத்தில் கலக்கமும், குழப்பமும் இருந்தால் நடையில் சிக்கலும், தடுமாற்றமும் காணப்படும்." என்பார் ஃபையர் என்ற அறிஞர்.[33] எனவே ஓர் ஆசிரியரை அறிய வேண்டுமானால் அவருடய நடையைக் கொண்டே அறியலாம் என்பது பெறப்படுகிறது. அருணந்தி சிவாசாரியாருடைய படைப்புகள் யாப்பு வடிவில் அமைந்துள்ளமையால் செய்யுள் வழக்கில் அமைந்து உயர்ந்த நடையாகக் காணப்பெறுகின்றன. இருபா இருபஃது, ஆசிரியரின் பணிவுத் தன்மையைக் காட்டுகிறது. மெய்கண்டாரை நோக்கி

ஐயத்தைத் தெளிவு படுத்திக் கொள்வதற்காகப் பாடப்பட்டது அந் நூலாதலால் ஆசிரியரின் நடையில் பணிவு காணப்படுகிறது.

*"பேரா இன்பத்து இருத்திய பெரும"* (பா : 2)

*"அடியேன் செறிதலால்"* (பா : 3)

*"வெண்ணெய்வாழ் மன்னவா என்னுடைய*
*மாலையாம் மாற்றம் அறி"* (பா : 5)

*"கருமமும் - கரும பந்தமும் தெருள*
*அருளும் சிவபெருமானே"* (பா : 14)

என வரும் பகுதிகள் இக்கருத்துக்கு எடுத்துக் காட்டுகள் ஆகும்.

சிவஞான சித்தியாரின் பரபக்கம் பிறமத மறுப்புகளுக்குரிய பகுதியாக இருப்பதால் சொற் கடுமையும், வலியுறுத்திக் கூறும் பாங்கும் பெற்று விளங்குகின்றது. முன் இயலில் கூறியபடி பிறர் உவமைகளை மறுத்தும், பிறர் உவமைகளுக்குமறுப்பாகச் சைவ சித்தாந்த உண்மைகளைக் கூறியும் அமைத்திருக்கும் பாங்கு அவருடைய நடையில் குறிப்பிடத்தக்கதாகும். இப்பகுதியில் சொற்கள் கடுமையாகவும் அமைந்துள்ளன.

*"உன்னூலும் ஒருநூலாய் உரைப்ப தென்னே*
*உலட்டுநூல் பருத்திநூல் சிலம்பி நூல்கள்*
*அந்நூலும் அல்லாதே பொய்ந்நூல்கொண்டிங்கு*
*அறநோற்றுத் திரிந்தவா றழகி தாமே"* (பர-பா:103)

என்ற வரிகளைச் சௌத்திராந்திகளின் சமய நூலாகிய பிடகநூலை மறுக்கிற பொழுது அமைத்திருக்கிறார். இவ்வரிகளில் காணப்படுகின்ற சொற்கள் கடுமையானதாக இருப்பதை அறியலாம். சமய நூலாகிய பிடகநூலைப் பருத்தி நூல் என்றும், பட்டுநூல் என்றும், சிலம்பி நூல் என்றும் கூறி, அதிலும் ஓர் அமைதி காணமுடியாது, அதனைப் பொய்ந்நூல் என்றும் கூறி, பிறமத மறுப்பில் ஆசிரியர் தன்னுடைய கடுநடையைப் பயன்படுத்தியிருக்கிறார். அது போலச் சுபக்கத்தில்,

*"ஐயனே அழகிது உன்சொல்*
*இந்திர சாலம் ஆய்த்தே"* (பா:110)

என்று பிறமதத்தாரை மறுக்கும் பாங்கில் கடுமையும், நகையாடலும் கலந்துள்ளது. இவ்வாறு பிறமதத்தை மறுக்கும் பொழுது ஆசிரியருடைய நடையில் கடுமை காணப்படுகிறது. பெரும்பாலும் பரபக்கம் முழுமையும் வாத அடிப்படையிலேயே அமைந்துள்ளதாதலால் நேரடியாக ஒருவரிடம் கூறி மறுக்கும் விதத்தில் பாடல்களை அமைத்து முன்னிலைப் படுத்தி கூறுவது போலப் பாடல்கள் அமைந்துள்ளன.

*"உள்ள தாவது கண்ட தென்றுரை*
*கொண்ட தென்னுல கத்துநீ*
*பிள்ளை யாய்வளர் கின்ற நாளுனைப்*
*பெற்ற தாயொடு தந்தையைக்*
*கள்ள மேபுரி கால னாருயி*
*ருண்ண வின்றொரு காளையாய்*
*மெள்ள வேயுள ரென்று கொண்டு*
*விரும்பு மாறு விளம்பிடே"* (பா : 32)

இப்பாடலில் 'நீ' என்று விளித்து 'விளம்புவாயாக' என்று முடிப்பது முன்னிலைப் படுத்திக் கூறும் நடையை நினைவூட்டுகிறது. இதுபோலவே மறுதலைப் பாடல்கள் பெரும்பாலும் அமைந்துள்ளன. எனவே பரபக்கத்தில் கடுமையும், நகையாடலும், முன்னிலைப் படுத்துவதும் ஆகியவை கொண்ட நடையாகவே பாடல்கள் அமைந்துள்ளன. சுபக்கத்தில் சைவ சித்தாந்தக் கருத்துகளை மெய்கண்டாரின் நூலடிப்படையில் விளக்குகின்ற காரணத்தால் ஓர் ஆசிரியர், மாணவர்க்குக் கூறுவது போன்ற அமைப்பில் நடை அமைந்துள்ளது. "பகரக்கேள்நீ"(49), "கூறக்கேள் நீ"(50), "புகலக்கேள் நீ"(62), "சாற்றக் கேள்நீ" (79) என்பன போன்ற தொடர்கள் மாணவர்க்கு அசிரியர் பாடம் சொல்லும் அமைப்பினைக் காட்டுவது. எனவே மறைஞான சம்பந்தர் உள்ளிட்ட தன்னுடைய மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்வது போன்ற நடையமைப்பிலேயே சுபக்கப் பகுதியைப் பாடியுள்ளார். இவ்வாறு மூன்று பகுதிகளிலும் அவருடைய நடை, எடுத்துக் கொண்டிருக்கின்ற கருத்துகளுக்கு ஏற்ப அமைந்துள்ளது.

## சொல்லமைப்பு

சகலாகம பண்டிதராக விளங்கிய அருணந்தி சிவாசாரியார் தன்னுடைய சிவஞான சித்தியார் நூலை வடசொற்களாலும், தமிழ்ச் சொற்களாலும் அமைந்த தொடர்களினால் பாடியுள்ளார். இருபா இருபஃதில் அதிக வடசொற்களைக் காண முடிந்தில. அவ்விருபது பாடல்களும் அழகு தமிழ்ச் சொற்களால் அமைந்த காரணத்தால் இனிய ஓசையோடு திகழ்கிறது எனலாம், இருப்பினும் இடையிடையே தத்துவக் கருத்துகளைக் கொண்ட ஒரு சில வடசொற்கள் அவரறியாமலேயே பாடல்களில் இடம் பெற்றிருக்கின்றன. "காராக்கிருகம், வியாபகம், அபக்குவம்(2), அவத்தை(8), கருமம்(14)" போன்ற வடசொற்கள் கலந்தும் உள்ளன. ஆனால் பெரும்பாலும் தமிழ்ச் சொற்களே இருபா இருபஃதில் அமைந்து இனிமையைத் தருகின்றன.

சித்தியார் சுபக்கத்தில் பெரும்பாலும் தத்துவக் கருத்துகள் அமைந்திருக்கின்ற காரணத்தால் வடசொற்கள் மிகுந்து காணப்பெறுகின்றன. புத்திமற்காரியம் (37), சுவையம் (42), அத்துவாமார்க்கம் (62), அசிந்தன் (67), சாங்கம் (67), உபாங்கம் (67), அத்துவா (76), பஞ்சமந்த்ரம் (79), விக்கிரகம் (104), சிவோஉறம் பாவனை(298) போன்ற சொற்களைக் காணலாம். பரபக்கத்திலும் வடசொற்கள் மிகுந்து காணப்பெறுகின்றன. யோனி(31), விந்தியங்கள் (40), செனிப்பது (44), அசேதனம் (41), சுகம் (59), நிரையம் (158), பூர்வ கன்மம் (162), சோமயாகம் (190), பிரகிருதி (260), சகம் (264) போன்ற சொற்கள் இடம் பெற்றுள்ள வடசொற்களில் ஒரு சிலவாகும், இவ்வாறு வடசொற்களைக் கலந்து எழுதுகின்ற நிலை அருணந்தி சிவாசாரியாரின் சொல்லமைப்பில் குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு அவர் வடசொற்களைக் கலந்து எழுதுவதற்குக் காரணம் அவரது வடமொழிப் பயிற்சியே அன்றி, அக்காலத்தில் வடமொழி பெற்றிருந்த செல்வாக்கும் ஆகும். மேலும் தத்துவச் சொற்கள் வடசொற்களாக அமைந்திருந்தமையும் காரணம் ஆகும். நூல்களில் இடம்பெற்ற தத்துவச் சொற்களில் ஆய்வேட்டில் கையாளப் பெற்ற தத்துவச் சொற்கள் தமிழ்ப்படுத்தித் தரப் பெற்றுள்ளன.

வடசொற்களைக் கையாள்வதோடு, வழக்குச் சொற்களையும் ஆங்காங்கே கையாண்டிருக்கிறார். பண்ணிட (சுப.24), இத்தை (சுப.28), ஒக்க (சுப.29), இத்தால் (சுப.34), பண்ணுவது (சுப.49), மேலைக்கு (101) போன்ற வழக்குச் சொற்கள் பாடல்களில் அமைந்துள்ளன. இத்தகைய சொல்லமைப்புகள் அருணந்தி சிவாசாரியாரின் பாடல்களில் அமைந்து அவரின் பாடல்கள் இயல்பாக யாக்கப பெற்றவை என்பதை உறுதிப்படுத்துகின்றன.

## விவாத நடை

ஆசிரியரின் விவாத நடையில் பல அமைப்புகள் காணப்பெறுகின்றன. மாத்யூ ஆர்னால்ட் இலக்கியக் காலத்தை ஆக்க காலம் (Creative) என்றும், மதிப்பூட்டுக் காலம் (Critic) என்றும் இருவகையாகப் பிரிப்பர். அத்தகு நிலையில் கி.பி.13, 14 ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியக் காலத்தை மதிப்பீட்டுக் காலமாக பிரிப்பர் தமிழிலக்கிய வரலாற்று ஆசிரியர்கள்.[34] இவ்விரண்டு நூற்றாண்டுகளில் உரையாசிரியர்கள் பலர் தோன்றி இலக்கிய, இலக்கண, சமய நூல்களுக்கு உரை எழுதும் போது மூலநூல் ஆசிரியர்களின் வன்மை, மென்மைகளை எடுத்துரைத்தமையே அதற்குக் காரணமாகும். எனவே கி.பி.13ஆம் நூற்றாண்டில் தோன்றிய அருணந்தி சிவாசாரியாரும் மதிப்பீட்டுக் காலத்திற்குரிவராகவே விளங்குகிறார். தம்முடைய சிவஞான சித்தியார் நூலின் முதற்பகுதியைப் "பரபக்கம்" என்ற அமைப்பில் படைத்தமையால் அவர் அக்காலத்திற்குரிவராக விளங்குகிறார். அப்பகுதியில் அவரின் பிறமத மதிப்பீடுகள் அமைந்துள்ளன.

## போதத்தின் அடிப்படையில் பரபக்கம்

தம் ஞானாசிரியரின் சிவஞான போதத்தின் அடிப்படையில் சுபக்கத்தை எழுதிய அருணந்தி சிவாசாரியார், பரபக்கத்தையும் அந்நூல் அடிப்படையிலேயே எழுதியிருக்கின்றார். தம் வடமொழிப் பயிற்சியாலும், பிற சைவ சாத்திர, இலக்கியப் பயிற்சியாலும் அனுபவ அறிவினாலும் பரபக்கத்தை அமைத்துள்ளார். சிவஞான போதத்தின் பன்னிரண்டு சூத்திரங்களின் கருத்துகளை விளக்கும் வெண்பாக்கள், சைவ தத்துவக் கருத்துகளை விளக்கும் பொழுது பிறமத மறுப்பாகவும்

சிலவற்றை எடுத்தியம்புகின்றன. ஆனால் அப் பிறமத மறுப்புகளை இந்த இந்த மதங்களுக்குரியவை எனப் பெயர் குறிப்பிட்டு, அவ்வெண்பாக்கள் கூறவில்லை எனினும், விளக்கம் எழுதிய உரையாசிரியர்கள், அம்மறுப்புகள் எம்மதங்களுக்கு உரியவை என்பதனைக் குறித்துள்ளனர். சிவஞான முனிவர் இவ்வாறு குறிப்பிட்ட மதத்தார் ஆருகதர், அந்தக் கரண ஆன்மவாதி, இரணிய கருப்பவாதி, உலகாயதர், ஏகன்மவாதி, ஐக்யவாத சைவர், கீரிடாப் பிரமவாதி, சமணர், சாங்கியர், சிவாத்துவித சைவர், சிவசமவாத சைவர், சித்தான்மவாதி, மாத்துமிகர், நையாயிகர், பாஞ்சராத்திரி, பாடாணவாதி, பௌத்தர், பேதவாத சைவர், மீமாம்சகர், வைசேடிகர் முதலியோராவர்.[35]

மேலும் சிவஞான போத்தின் மூன்றாம் சூத்திரம் பிறமதம் கூறும் ஆன்ம விளக்கங்களின் மறுப்பாக அமைந்துள்ளது. எனவே இவற்றைக் கொண்டு பார்க்கும் போது, மெய்கண்டார் தம் நூலில் குறிப்பாகக் காட்டியவற்றையே அருணந்தி சிவாசாரியார் பரபக்கத்தில் விரிவு படுத்தியுள்ளார் என்பது பெறப்படுகிறது. மேலும் சிவஞான சித்தியாரின் பாயிரத்தில் கூறிய "எம் குருநாதன் கொண்டு எமக்களித்த ஞான நூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி என்றே" என்ற கொள்கைக்கு மாறுபடாது சிவஞான போத அடிப்படையிலேயே பரபக்கத்தைப் பாடியருளினார் என்பதும் பெறப்படுகிறது.

மேலும் வெள்ளைவாரணம் அவர்கள் சிவஞான போதத்தின் அடிப்படையில்தான் பரபக்கம் எழுதப் பெற்றது என்பதற்குக் கூறும் கருத்துகளும், இங்கு குறிப்பிடத் தக்கனவாகும்.

"மெய்கண்டார் இயற்றிய சிவஞான போதத்தை முதல் நூலாகக் கொண்டு அதன் வழிநூலாக இயற்றப்பெறும் சிவஞான சித்தியாரில் புறச்சமயத் தத்துவங்களை எடுத்துரைத்து மறுக்கும் பரபக்கம் இடம்பெறுதல் எங்ஙனம் பொருத்தமுடையதாகும் என்ற வினா அறிஞர் உள்ளத்தே தோன்றுதல் கூடும். ஆசிரியர் மெய்கண்டார் சைவ சித்தாந்த உண்மைகளை விளக்கும் முறையில் அருளிச் செய்த சிவஞானபோத நூலின் தொடக்கத்தே மங்கல வாழ்த்தினையடுத்து,

*"தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்*
*எம்மை யுடைமை எமையிகழார் - தம்மை*
*உணரார் உணரார் உடங்கியைந்து தம்மில்*
*புணராமை கேளாம் புறன்"*

என அவையடக்கம் கூறியுள்ளார். இவ்வெண்பாவில் "தம்மை உணரார் உணரார்" எனப் புறச் சமயத்தார் கொள்கைகள் பற்றி மெய்கண்டார் குறிப்பாக உணர்த்திய மறுப்பினை, விரித்து விளக்கும் முறையில் அமைந்ததே சிவஞான சித்தியார் பரபக்கமாகும். எனவே புறச்சமயத் தத்துவங்களை எடுத்துரைத்து மறுக்கும் பரபக்கப் பகுதி, முதனூலாசிரியராகிய மெய்கண்டார் நூலினை அடியொற்றி அமைந்ததே என்பது நன்கு புலனாம்."[36]

மேலும் அருணந்தி சிவாசாரியார் பரபக்கத்தைப் பாடியதற்குக் கொன்றை மாநகரம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முகசுந்தர முதலியார் பதிப்பில் வேறு காரணம் ஒன்றும் கூறப்பெற்றுள்ளது. "இந்நூலைத் தமிழில் இயற்ற வேண்டுங் காரணம்" என்ற தலைப்பின் கீழ் தத்துவ விளக்கப் பாடல் காரணமாகக் காட்டப் பெற்றுள்ளது.[37]

*"சீரார் கயிலைத் திருவாய் மலர்ந்த சிவாகமங்கற்*
*றாராய்வது வடசொற் பயின்றார்க் கெளிதாம் மொழியைச்*
*சாராதவருமத் தத்துவஞானந் தலைப் படுதற்*
*கேரார் தமிழ்ச் செய்யுளான் மயறீர வெழுதுவனே"* (பா. 4)

என்பது அப்பாடல். பாடல் தத்துவ விளக்கநூலிலிருந்து எடுத்தாளப் பெற்றமை குறிக்கப் பெறாமல், அருணந்தி சிவாசாரியார் பாடியதுபோல் குறிக்கப் பெற்றுள்ளது. எனவே இப்பாடலின் கருத்தையே பரபக்கம் பாடியதற்குரிய காரணமாகப் பதிப்பாசிரியர் காட்ட எண்ணியமை புலனாகின்றது. வடமொழி அறியாதார் ஆகமங்களை அறிதற்காகப் பரபக்கம் தமிழில் எழுதப் பெற்றது என்ற தம் எண்ணத்தை இப்பாடல் மூலம் பதிப்பாசிரியர் குறிப்பிடுகிறார் எனலாம். இச் செய்தியும் குறிப்பிடத் தக்கதாகும். அருணந்தி சிவாசாரியார் உலகாயதம், பௌத்தம், ஆருகதம், பூரவ மீமாம்சை, ஏகான்மவாதம், சாங்கியம், பாஞ்சராத்திரம் என்ற ஏழு மதங்களையும், அவற்றின் பிரிவுகளையும் பரபக்கத்தில் குறிப்பிட்டு அவற்றின் கொள்கைகளை மறுக்கின்றார்.

## தமிழகத்தில் பிறமத மறுப்பு

பிறமதங்களை மறுக்கும் சொற்போர்நிலை அருணந்தி சிவாசாரியாருக்கு முற்பட்டும் நிகழ்ந்திருக்கின்றன. மணிமேகலையின் காலத்தில் சமயக் கணக்கரிடையே சொற்போர் நடந்தமையைச் "சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதை" எடுத்தியம்புகிறது. மேலும்,

*"ஒட்டிய சமயத்து உறுபொருள் வாதிகள்*
*பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்"* (மணி- 1:60, 61)

என்று விழாக் காலத்து விழாவறைவோன் அறைந்தமை, சமயச் சொற்போர் பொதுமக்கள் காண நடந்தமையைக் காட்டுகிறது. சிலப்பதிகாரத்தில் "திறவோர் உரைக்கும் செயல் சிறந்து ஒருபால்"[38] என்ற வரியும் அதனை மெய்ப்பிக்கும். பல்லவர் காலத்தில் மகேந்திரவர்மன் எழுதிய மத்தவிலாசப் பிரகடனத்தில் காபாலிகன் ஒருவன் பிற சமயத்தாரோடு சொற்போர் புரிந்தமை இடம் பெற்றுள்ளது. மணிவாசகர் "எட்டிரண்டும் அறியாத என்னைப் பட்டி மண்டபம் ஏற்றினை, ஏற்றினை"[39] என்று பாடித் தம் காலத்தில் சமயச் சொற்போர் நிகழ்ந்தமையை நினைவூட்டுகிறார். இத்தகைய ஆதாரங்களைக் கொண்டு காணும் போது, தமிழக மெய்ப்பொருளியலில் சமயச் சொற்போர் காலந்தோறும் நடைபெற்றிருக்கிறது என்பது பெறப்படுகிறது. எனவே தான் அருணந்தி சிவாசாரியாரும் பிறமத மறுப்புகளைத் தெரிவித்திடும் பணியைத் தமது வாழ்வியலில் கொண்டு விளங்கினார். மெய்கண்டாரிடம் ஞானம் பெறுவதற்கு முன்னர் ஊர் ஊராகச் சென்று, சமயவாதிகளோடு சமய வாதம் புரிந்திருக்கிறார் என்ற செய்தியும், செவி வழிச் செய்தியாக அறியப்படுகிறது. அதற்கு ஏற்பத் திருத்துறையூரில் உள்ள அவர்தம் சமாதிக் கோயிலில் காணப்படுகின்ற ஓவியத்தில் வண்டி ஒன்றில் ஏடுகள் இருக்க அதை ஓட்டிச் செல்பவராக அவர் படம் வரையப்பட்டிருக்கிறது. எனவே வாழ்வில் கடைப்பிடித்து வந்த சொற்போர் முறையைத் தம் நூலிலும் அமைத்திருக்கிறார்.

## இந்திய மெய்ப்பொருளியல் வரலாறு

அருணந்தி சிவாசாரியார் பரபக்கத்தில் பிறமதங்களை மதிப்பீடு செய்திருப்பதை அறிவதற்கு இந்திய மெய்ப் பொருளியல் வரலாற்றை அறிதல் வேண்டற்பாற்றாகிறது. மேலை நாட்டு மெய்ப்பொருளியல் கிரேக்க நாட்டில் தோற்றம் கொண்டது என்பது முடிந்த முடிபு. தோற்றம் கொண்ட காலம் கி.மு.ஆறாம் நூற்றாண்டு எனலாம். ஏனெனின் கிரேக்க நாட்டில் முதல் மெய்ப்பொருள் இயல் அறிஞராக, உலகில் மதிக்கப் பெற்றவர் தேலீஸ்.(Thales). இவர் சோலன் காலத்தைச் சார்ந்தவர். சோலன் காலத்தை மெய்ப்பொருளியல் வரலாற்றில் கி.மு. 624 - 546க்கு இடைப்பட்ட காலப்பகுதி எனக் குறித்துள்ளனர்.[40] தேலீஸை அடுத்துத் தோன்றிய கிரேக்க மெய்ப்பொருள் அறிஞர்களில் குறிப்பிடத் தக்கவர் அனேக்ஸிமேண்டர். இவரின் பிறப்பைக் கி.மு.610 - 609 எனக் குறிப்பிடுவார் ஆர்.டி.ரானடே. கி.மு. 582 - 506ல் வாழ்ந்த மெய்ப்பொருள் அறிஞர் பிதாகரஸ் மேலைநாட்டு மெய்ப்பொருள் வரலாற்றில் சிறப்பிடம் பெற்றவர் ஆவார். பிதாகரஸை அடுத்து தம் மெய்ப் பொருளியல் கருத்தால் உலக அரங்கில் குறிப்பிடத் தக்க இடத்தைப் பெற்றவர் சாக்ரெட்டீசு. சாக்ரெட்டீசுவின் காலம் கி.மு. 470 – 399. சாக்ரெட்டீசை அடுத்துச் சிறப்பிடம் பெற்ற அறிஞர் பிளேட்டோ. பிளேட்டோவின் காலம் கி.மு. 487 - 347. பிளேட்டோவின் கொள்கைகளை நினைவுக் கொள்கைகளாக்கிய அரிஸ்டாட்டில் காலம் கி.மு. 384 - 322. இவ்வாறு மேலை நாட்டு மெய்ப்பொருளியல் கி.மு.ஆறாம் நூற்றாண்டில் தோன்றிப் படிப்படியாக வளர்ந்தது எனலாம்.

மேலைநாட்டு மெய்ப்பொருளியல் தோற்றம் கொண்டிட்ட கி.மு.ஆறாம் நூற்றாண்டில், கீழை நாடுகளில் மெய்ப் பொருளியல் தளிர் நடையிட்டது. கீழை நாடுகளில் ஒன்றான இந்திய நாட்டில் மெப்பொருளியல் ஆய்வு முறைகளைப் பெற்றிருந்தது. எவ்வாறெனின் அந்தக் காலக் கட்டத்தில்தான் இந்தியாவில் சமணமும், பௌத்தமும் உன்னத நிலையில் இருந்தன. சமண மதத்தின் தெய்வமாகக் கருதப் பெறும் மகாவீர வர்த்தமானரின் காலம் கி.மு. 559 - 527 ஆகும்.[41] இவர் அம்மதத்தின் தீர்த்தங்கரரில் 24ஆவது

தீர்த்தங்கரர் ஆவார். முதல் தீர்த்தங்கரர் விருஷபதேவர். இவரின் காலம் கணக்கிட முடிந்திலது. என்றாலும் 23ஆவது தீர்த்தங்கரரான பார்ச்சுவநாதர் காலம் கி.மு. 7ஆம் நூற்றாண்டு என்பதால்[42] - விருஷபதேவர் கி.மு. 7ஆம் நூற்றாண்டிற்குப் பல நூற்றாண்டுகள் முற்பட்டவர் என்பது பெறப்படுகிறது. எனவே ஆறாம் நூற்றாண்டிற்குப் பல நூற்றாண்டுகள் முன்பே தோன்றி - ஆறாம் நூற்றாண்டில் சமண மதம் வளர்ச்சி பெற்ற மதமாக விளங்கியது எனலாம்.

அதுபோலச் சமணத்தை ஒத்து விளங்கிய மதம் புத்தமதம். இதனைத் தோற்றுவித்தவர் கௌதம புத்தர் ஆவார். இவரின் பிறப்பு கி.மு. 563 என்பர்.[43] ஆனால் இவரின் கொள்கைகளுக்கு அடிப்படை, இவருக்கு முன்னமே இந்திய நாட்டில் பல புத்தர்களால் அறிவுறுத்தப் பெற்றிருந்தன. அதாவது கௌதம புத்தருக்கு முன்னர் பல புத்தர்கள் இருந்தனர். இதனை "இறந்த காலத்து எண்ணில் புத்தர்களும்" என்ற மணிமேகலைத் தொடர் குறிப்பிடும். (30-14) எனவே கௌதம புத்தருக்கு முன்னரே அவரின் கொள்கைகள் தோற்றம் பெற்று - ஆறாம் நூற்றாண்டில் அவரால் தனியொரு மதமாக உருவெடுத்தது எனலாம்.

கி.மு. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்த மகாவீர வர்த்தமானரும், கௌதம புத்தரும் தங்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தோன்றிய மெய்ப்பொருள் கொள்கைகளைச் சமய வடிவம் கொடுத்துப் பரப்பியது முடிந்த முடிபாகிறது. இவர்களின் கொள்கைகள் வேதத்தை மறுத்து எழுந்தவை. ஆதலால் வேதத்தின் காலம் காண வேண்டியது இன்றியமையாததாகிறது. வேதத்தின் காலத்தை முதன் முதலில் முடிவு செய்ய முயன்றவர் மாக்ஸ்முல்லர்.[44] அவர் வேதகாலத்தை கி.மு. 1200 - 600 எனக் குறித்தார். பின்னர் திலகர் என்பவரும், ஜேகொடா என்பவரும் வேத காலத்தைத் தனித்தனியே ஆராய்ந்தார்கள். அவர்கள் கண்ட முடிபு கி.மு. 4500 - 2500 என்பதாகும்.

வேதத்தின் ஈற்றுப் பகுதிகள் உபநிடதங்கள் ஆகும். அவை வேதங்களின் இலக்கை அல்லது நோக்கத்தை வெளிப்படுத்துவன ஆகும். எனவேதான் அவை வேதாந்தம் எனப் பெயரைப் பெற்றன.

உபநிடதங்களில் மிகப் பழமையானவை கி.மு.எட்டாம் நூற்றாண்டில் தொகுக்கப் பெற்றன.[45]

மேற்கூறப்பெற்ற காரணங்களைக் கொண்டு இந்திய மெய்ப்பொருளியல் வரலாற்றைக் காணும்போது, அதன் தோற்றத்தைக் கி.மு. 8ஆம் நூற்றாண்டிற்கு முன்பே கொண்டு செல்லலாம். எனவே இந்திய மெய்ப் பொருளியல் கி.மு. 8ஆம் நூற்றாண்டிற்கு முன்னே தோன்றி - வளர்ந்து கி.மு. 6ஆம் நூற்றாண்டில் தளிர் நடையிட்டு ஆய்வு நிலையைக் கண்டது என முடிவு கொள்ளலாம்.

இந்திய மெய்ப் பொருளியலில் இடம்பெற்ற மதக் கோட்பாடுகள் சமயக் கோட்பாடுகள் எனக் குறிக்கப் பெறுகின்றன. இந்தியத் தத்துவ ஞானம், சரியாகச் சிந்திப்பதற்கு மட்டுமின்றி முறையாக வாழ்வதற்கும் வழிகாட்டுகிறது என்பார் பேராசிரியர் ஹரியண்ணா.[46] இந்தியத் தத்துவ ஞானத்தில் பல சமயங்கள் (தரிசனங்கள்) அடங்கியுள்ளன. சமயங்கள் அனைத்தும் வேத உபநிடத ஆகமங்கள் என்னும் இலக்கியங்களை ஆதாரங்களாகக் கொண்டன. இந்தியச் சமயங்களை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். வேத உபநிடதங்களில் கூறப்பெற்ற கருத்துகளை ஒப்புக் கொள்வோர் முதற்பிரிவினர். அவர்கள் வைதிகர் எனப் பெற்றனர். வேத உபநிடதங்களை ஏற்றுக் கொள்ளாதவர் இரண்டாம் பிரிவினர். இவர்கள் அவைதிகர் எனப்பெற்றனர். வைதிகரில் குறிப்பிடத் தக்கவர் சாங்கியர், யோகர், நையாயிகர், மீமாம்சர், வேதாந்திகள், சித்தாந்திகள் ஆவார். அவைதிகரில் குறிப்பிடத் தக்கவர் உலகாயதர், சமணர், பௌத்தர் ஆவார். இச்சமயங்களைச் சைவசித்தாந்த அறிஞர்கள் நால்வகையாகப் பிரிப்பர். புறப்புறச்சமயங்கள், புறச்சமயங்கள், அகப்புறச் சமயங்கள், அகச் சமயங்கள் என்பன அவை. இந்தியச் சமயங்களில் சைவசமயத்தை இந்நால் வகையுள் அடங்காது இவற்றிற்கு மேலான சமயம் எனக் கொள்வர். இந்நான்கு பிரிவுகளுக்கு உரிய காரணங்களையும் அறிஞர்கள் கூறியுள்ளனர். வேதம், சிவாகமம், இவற்றை உடன் படாதவை சைவ சித்தாந்தத்திற்குப் பெரிதும் புறமாதலால் புறப்புறச் சமயங்கள் ஆயின. அவை உலகாயதம், நால்வகைப் பௌத்தம், சமணம் என்ற ஆறு சமயங்கள் ஆகும். வேதத்தை உடன்பட்டு ஆகமத்தை உடன்படாதவைப் புறச்

சமயங்கள் ஆயின. அவை தருக்கம், மீமாம்சை, ஏகான்மவாதம், யோகம், சாங்கியம், வைணவம் என்ற ஆறு சமயங்கள் ஆகும். வேத சிவாகமங்களை உடன்பட்டாலும், அவற்றை விட வேறு பிற நூல்களைச் சிறப்பாகக் கொண்ட சமயங்கள் அகப்புறச் சமயங்கள் ஆயின. அவை பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம், ஐக்கியவாத சைவம் என்பன. வேத ஆகமங்களைச் சிறப்பாகப் போற்றினும், குருவருள் இன்மையால் அவற்றிற்கு உண்மைப் பொருள் காணமாட்டாது, தத்தமக்குத் தோன்றியவாறே பொருள் உரைத்தவை அகச் சமயங்கள் ஆயின. பாடாணவாத சைவம், பேத வாத சைவம் ஈஸ்வர அவிகார வாத சைவம், சிவாத்துவித சைவம் என்பன அவை.[47]

இவ்வாறு இந்திய மெய்ப் பொருளியலில் காணப்பெறும் இந்தியச் சமயங்கள் பல வகைகளாகப் பிரித்துக் காணப்பெற்றாலும் - மெய்ப் பொருளியல் வரலாற்று ஆசிரியர்களால் வாதத்திற்கு எடுத்துக் கொள்ளப் பெறுபவை சிலவே. அவை உலகாயதம், சமணம், பௌத்தம், நியாய வைசேடிகம், சாங்கியம், யோகம், மீமாம்சை, வேதாந்தம், சித்தாந்தம் ஆகியவைகளே.

இந்த அமைப்பிலேதான் அருணந்தி சிவாசாரியாரும் முன்னர் கூறப் பெற்ற படி ஏழு மதங்களையும் குறிப்பிடுன்றார். அவருடைய மதிப்பீடுகள் நடுநிலையாக அமையவில்லை. அம்மதங்கள் கூறுகின்ற சமயக் கருத்துகளைப் பொருத்தமற்றவை என்று கூறுவனதாகவே அமைந்துள்ளன. பிறமதக் கருத்துகள் முழுமையும் எடுத்துக் கூறாது, எவை சைவ சித்தாந்தக் கொள்கைக்கு மாறுபட்ட கொள்கையாக இருக்கின்றனவோ அவைகளையே எடுத்துக் கூறி மறுக்கிறார்.

**உலகாயதம்**

இந்திய மெய்ப் பொருளியலில் "பொருளே முதல்" என்ற கோட்பாடு கொண்டு தங்கள் தத்துவக் கருத்துகளை வெளிப்படுத்தியவர்கள் உலகாயதர் ஆவர். இவர்கள் உலகம் மட்டுமே உள் பொருள் எனக் கொண்டமையால் உலகாயதர் எனப்பட்டனர். சார்வாகர் என்ற தத்துவ ஞானியால் முதன் முதலில் இக் கொள்கை

தோற்றம் பெற்றதால் சாருவாகம் என்றும் இச்சமயம் அழைக்கப்படுதல் உண்டு.[47] சாரு - இனிமை. வாக் - வாக்கியம். எனவே இனிமையான வாக்கியத்தையுடைய சமயம் என்ற பொருளில் "சாருவாகம்" என்று கூறுவாரும் உண்டு.[48]

இத் தரிசனத் தோற்றத்திற்கு வரலாறு ஒன்று கூறப்பெற்றுள்ளது. பிரகஸ்பதி என்ற வியாழக் கடவுள் இருக்கு வேதத்தின் கருத்தை இந்திரனுக்குக் கூறினான். அவ்வாறு கூறும்போது "உலகம் தான்" முடிவில் காணும் உள்பொருள் என்ற வேதக் கருத்தை இந்திரன் உளம் கொள்ளும் வண்ணம் கூறினான். அதனைக் கேட்ட இந்திரன் உலக இன்பத்தில் நாட்டம் கொண்டான். இந்திரனுக்கு கூறப்பெற்ற இவ்வறிவுரையே உலகாயதமாக உருவெடுத்தது என்று அவ்வரலாறு கூறும்.[50] ஆயின் இப்புராண வரலாறு ஆய்வு நிலைக்கு அமைவுடையதாகா. எனவே உலகாயதம் என்பது, காட்சி அளவையை மட்டும் ஏற்கின்ற மெய்ப்பொருள் கொள்கையாகக் கொள்ளுதலே ஆய்வுக்கு ஏற்புடையது. இக் கொள்கையின் தோற்றக் காலம் பற்றிய துல்லியமான சான்றுகள் கிடைத்தில. அரி வம்சத்தில் காணப்பெறுகின்ற வேனா என்ற அரசர் இக்கொள்கையை ஆதரித்திருக்கின்றார். இவ்வரசர் கடவுட் கொள்கையை மறுத்து வேதத்திற்கு எதிரான கொள்கையுடையவராய் விளங்கியிருக்கிறார். இவரைப்பற்றி வியாசர் குறிப்பிடுவதால் இம் மன்னரின் காலம் வியாசர் காலத்திற்கு (கி.மு.7ஆம் நூற்) முற்பட்டது எனலாம். பின்னர் புத்தர்காலத்தை ஒத்த காலத்தவரான "அசிதகேச கம்பலின்" என்பவர் தம் அறிவுரைகளில் சாருவாகக் கொள்கைகளை உட்படுத்தி வெளியிட்டுள்ளார். சாந்திரச்சதா என்பவர் தம் "தத்துவ சங்கிரகம்" என்ற நூலில் 'புரந்தரர்' என்பார் இக்கொள்கை உடையவராக விளங்கினார் என்று குறிப்பிட்டுள்ளார். இவருக்குப்பின்சதானந்தர் இக் கொள்கைவாதியில் குறிப்பிடத் தக்கவர் ஆவார். இவர் காலம் கி.மு. முதல் நூற்றாண்டு எனலாம். கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் மணிமேகலை பூதவாதியாகச் சாருவாக சமய வாதியைக் குறிப்பிடுகிறது. பின்னர் மணிவாசகரும்,

> *"உலகாயதன் என்னும் ஒண்டிறற் பாம்பின்*
> *கலாபே தத்த கடுவிடம் எய்தி"*[51]

என்று உலகாயதனைக் குறிப்பிடுகிறார். இக்காலக் கடவுள் கொள்கை மறுப்புடையவர்களின் கொள்கைகளில் சாருவாகக் கொள்கையைக்

காணமுடிகிறது. இவ்வாறு கி.மு. 7-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டுத் தற்காலம் வரை இக்கொள்கை இந்திய மெய்ப்பொருளியலில் இடம் பெறுகிறது எனலாம்.

இத்தகைய உலகாயத மதத்தை அருணந்தி சிவாசாரியார் தம் பரபக்கத்தில் முதன் முதலாக எடுத்துக் கொண்டு மறுக்கிறார். கடவுளை ஏற்றுக் கொள்ளாத சமயம் உலகாயதம் ஆதலால் இச்சமயத்தை முதலில் எடுத்துக் கொண்டார் என்று கூறுவர்.[52]

## கொள்கைகளும் மறுப்புகளும்

அருணந்தி சிவாசாரியார், தாம் முதன் முதலில் வாதத்திற்கு எடுத்துக்கொண்ட உலகாயத மதத்தைப் பற்றிக் குறிப்பிடும் பகுதியில் முதலில் அம் மதத்தைப் பற்றி அறிமுகப் படுத்துகிறார். அவர்கள் ஆடம்பர நிலையினை உடையவர்கள் என்றும், சிற்றின்ப வேட்கையினை உடையவர்கள் என்றும், வியாழக் கடவுளின் நூலையே அவர்கள் சமய நூலாகக் கொண்டவர்கள் என்றும் குறிப்பிடுகிறார்.[53] காட்சி அளவையை மட்டும் அளவையாகக் கொண்ட தொடக்க கால உலகாயதம், அருணந்தி சிவாசாரியார் காலத்தில் வியாழக் கடவுளின் நூலை அளவையாகக் கொள்ளும் நிலையை அடைந்தமை இதனின்று புலனாகிறது. உலகாயத மதத்தின் கொள்கைகளை 21 பாடல்களிலும், அதன் மறுப்புகளை 31 பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளார். ஆசிரியரால் கூறப்பெற்ற உலகாயதர் கொள்கைகளும் அக்கொள்கைகளுக்கு ஆசிரியரின் மறுப்பும் முறையே தரப்பெறுகின்றன.

## கொள்கை : 1

அளவைகளில் காட்சி அளவை மட்டுமே உண்மை. மற்ற அளவைகள் தேவையில்லை. இக்காட்சி அளவை ஆறு வகைப்படும். ஐயக்காட்சி, வாயிற் காட்சி, விகற்பக் காட்சி, அந்வயக் காட்சி, வெதிரேகக் காட்சி, திரிவுக் காட்சி என்பன அவை. எனவே வேறு அளவைகள் தேவையில்லை. இக்காட்சி அளவைகளால் காணும் உண்மைப் பொருள்கள் நிலம், நீர், தீ, காற்று என்ற நான்கும் ஆகும். (பா.13)

## மறுப்பு

இக்கருத்தை அருணந்தி சிவாசாரியார் மறுக்கிறார். உலகாயதர் காட்சி அளவையை மட்டும் கொண்டு கருதல், உரை அளவைகளை மறுப்பது பொருத்தமன்று. ஏனெனில் இளமையில் தாய் தந்தையரை இழந்துவிட்ட ஒருவன் தனக்கு தாய், தந்தை உண்டு என எண்ணுவது காட்சி அளவையால் அல்ல, கருதல் அளவையால் தான். மேலும் மேகம் முழங்கியும், மின்னியும், இருண்டும் எழுந்தவிடத்து இதனால் மழை பொழியும் என்று நினைப்பது கருதல் அளவையால் தான். அத்துடன் ஆறு, அகில், சந்தனம் இவற்றை அலைத்துக்கொண்டு வந்த விடத்துப் பெரிய மலையில் மழை பெய்துள்ளது என நினைப்பதும் இந்த கருதலளவையால்தான். இவை அனைத்தையும் உலகாயதரும் உணர்வர். எனவே அவர்கள் கருதல் அளவையை மறுப்பது பொறுத்தமல்ல என்று மறுக்கிறார். உரை அளவை தேவையில்லை என்பதையும் ஆசிரியர் பொருத்தமில்லை என்கிறார். வேத நூல்களை நாம் ஏற்கவேண்டும். உலகாயதரும் கூட வியாழனின் வேதநூல்களை ஏற்கிறார்கள். மேலும் சோதிடநூல் வல்லவர்கள் கூறும் உரைகளும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. அவர்கள் கூறும் உரைகளைக் கொண்டு நிலத்தில் பொதிந்திருக்கும் நிதி, முதலியவற்றை எடுப்பதும் உண்டு எனக் கூறி, அளவை பற்றிய உலகாயதரின் கருத்துகளை மறுக்கிறார். ( பாடல் : 33-36 )

## கொள்கை : 2

நிலம், நீர், தீ, காற்று என நான்கு பூதங்களில் காற்றினால் மற்ற பூதங்கள் கூடிட, வடிவுகள் உலகில் தோன்றுகின்றன. திரிகையில் வைத்த மண்ணால் குடங்கள் தோன்றுவது போல, அவ்வுருவங்கள் தோன்றுகின்றன. உருவங்களில், பொறி புலன்களும், புத்தி குணங்களும் நீரில் தோன்றும் குமிழி போலத் தோன்றுகின்றன. எனவே வடிவுகள் தோன்றிட இறை என்ற ஒன்று தேவையில்லை என்பது அவர்கள் கொள்கை. ( பாடல் : 15 )

## மறுப்பு

உலகாயதரின் கருத்துக்களில் இக்கருத்தே மையக் கொள்கையாகும். இதனையும் பொருத்தமில்லை என மறுக்கிறார்

அருணந்தி சிவாசாரியார். பூதங்கள் அழியாதது, என்றுமுள்ளது (நித்தியம்) என்பது தவறு. அவற்றில் உருத் தோன்றுதலும், கெடுதலும் நடைபெறுவதால் அவை என்றுமுளது என்று கூறமுடியாது. மேலும் அவை கூடவேண்டும் என்றால் அவற்றை கூட்டுவதற்கு ஒருவன் வேண்டும். அது எவ்வாறு எனின் குடம் முதலியவை மண்ணினின்று தானே தோன்றாது, குயவனால் எவ்வாறு உருவாக்கப் படுகின்றதோ, அது போலவே ஆகும். நீரில் தோன்றும் குமிழிபோல் என்ற உவமையும் ஆசிரியரால் மறுக்கப் படுகிறது. நீரில் தோன்றும் குமிழி நீராக இருக்கின்றதே தவிர வேறன்று. மேலும் நீர்க்குமிழி காற்றின் உதவியால் தோன்றுகிறது. எனவே உலகாயதர் பூதங்களிலிருந்து குணங்கள் தானே தோன்றும் என்று கூறும் கருத்திற்கு அது உவமையாகாது என்று கூறி அக்கருத்தை மறுக்கின்றார்.(பாடல்:37-38)

## கொள்கை : 3

பூதங்களில் காற்றுப் பிரியின் புலன்கள் கெடும். அவற்றின் குணங்களும் கெடும். எனவே இந்நிலைக்கு வேறாகக் கடவுள் என்றும், உயிர் என்றும் கூறுவது பொய். இதை உண்டு என்று கூறுவோர் ஒப்பிலா மலடி பெற்ற மகன் ஒருவன் முயற்கொம்பேறித் தப்பில் ஆகாயப் பூவைப் பறித்தமையைக் கூறியவர் ஆவார் என்று குறிப்பிடுகின்றனர். (பா : 16, 17)

## மறுப்பு

இக்கொள்கைக்கு உரிய கருத்தை ஆசிரியர் நேரடியாக மறுக்கவில்லை. பூதங்கள் ஒன்றோடொன்று தாமே கூடுவதில்லை, கூட்டுபவன் ஒருவன் வேண்டும் என்ற முன் கருத்து மறுப்பையே இதற்கும் ஏற்ப அமைத்து விடுகிறார்.

## கொள்கை : 4

கன்மம் என்பது இல்லை என்பது உலகாயதரின் கருத்தாகும். முற்பிறப்பில் ஆன்மாக்கள் செய்த கன்மம் எல்லாம் உயிர்களைப் பொருந்தி நின்று இப் பிறப்பிலே ஊட்டும் என்று கூறின் இப்பிறப்பில் செய்த புண்ணிய பாவங்கள், இக்காயத்தோடு கெடும் ஆதலால்

பிற்பிறப்பில் கூடுமாறு எவ்வாறு? அதற்குப் பதிலாகத் தூலஉடல் (புறஉடல்) கெட்டு நுண்ணுடம்பாய்ப் பொருந்தும் என்றால் அது எவ்வாறு நடக்கிறது? இவ்வாறு கூறுவது திரியோடு கூடிய விளக்கின் ஒளி, அத்திரியை நீங்கி வேறாக நிலைபெற்றது என்ற கூறுவது போன்ற நகைப்பைத் தருவதாகும். இவ்வாறு கூறிக் கன்மத்திற்குப் பிறமதத்தார் கூறும் விளக்கங்களையும், உலகாயதர் மறுக்கின்றனர். வயலிலிட்ட வைக்கோல், தழை என்பவை எருவாக மாறிப் பயிர்க்கு நன்மை செய்வது போல, ஒரு உடம்பில் செய்த வினைகள் மறைந்து பின்வரும் பிறப்புகளின் நுகர்ச்சியாக வரும் என்றால் அதுவும் தவறு. மேற்கூறப்பெற்றவை இட்ட இடத்தில்தான் பயன் கொடுக்குமேதவிர, வேறு இடத்தில் சென்று பயனைக் கொடா. அதாவது ஒரு பிறப்பில் செய்த வினைகள், அப்பிறப்பிலேயே பயன் தருமே அன்றி மறுபிறப்பில் பயன் தராது என்று மறுப்பார்கள்.

மேலும் பிறர் கூறிய அன்னமிட்டவர் புண்ணியம் பெறுவர் என்ற உவமையும் மறுக்கிறார்கள். அதாவது ஒருவர்க்கு அன்னமிடின் அவ் அன்னம் அவர் உடலில் செரித்துப் பின் மலமாகிறது. அப்படியிருக்க அன்னமிட்டவன் எப்படிப் பயன் பெற முடியும் ? அப்படிப் பயன் பெறுவதாயின் உண்டவன் மலத்தை இட்டவன் பெற்றது போன்றதாம், என்று பிறமதக் கருத்துகளையும் உலகாயதர் மறுக்கின்றார். உயிர்களின் உருவமும், செயல்களும் மாறுபடுவதற்குக் கன்மவினை காரணம் ஆகா, வினை காரணம் என்றால் கையிலுள்ள விரல்கள் கூடியும், குறைந்தும் காணப் பெறுவதற்கு என்ன காரணம்? உருவ, செயல் வேறுபாடுகளுக்குக் காரணம் பூதங்கள் மிகுந்தும், குறைந்தும், கூடினதுமே ஆகும். இன்ப துன்பங்களுக்குக் காரணம் கன்மம் என்பதும் தவறு. நீர், சந்தனம் முதலிய நறுமணத்தோடு கூடும் பொழுது நறுமணம் பெறுகிறது. தீயோடு கூடுகிற பொழுது சுடுகிறது. இத்தன்மைகளைப் பெற நீர் எந்த நன்மையும், தீமையும் செய்ய வேண்டியதில்லை. எனவே இவையெல்லாம் பொருள்களின் தன்மைகளே ஆகும். இவ்வாறு கன்மம் பற்றிய (பிறமத) கருத்துகளை உலகாயதர் மறுப்பதாக அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகிறார். (பாடல்:18-21)

## மறுப்பு

உலகாயதரின் கன்மம் பற்றிய கருத்துக்களைக் கூறிய அருணந்தி சிவாசாரியார் அவற்றை மறுக்கும்போது பொதுவாக

மறுக்கின்றாரே தவிர அவர்களின் ஒவ்வொரு கருத்திற்கும் மறுப்புத் தரவில்லை. கன்மம் தான் உடல் தோற்றத்திற்குக் காரணம். நெருப்பு ஏதேனும் ஒரு பொருளைப் பற்றித்தான் எரியும். அதுபோல உயிராகிய அறிவு கன்மத்தால் ஏற்பட்ட உடல் பற்றியே நிற்கும். உதாரணமாக அகலில் நெய் இருக்கம்வரை தீ எரியும். நெய் தீர்ந்திடின் தீ அணைந்திடும். அது போலவே உடம்பின் கன்மம் இருக்கும் வரை உடலில் உயிர் நிற்கும். கன்மம் தீர்ந்ததும் உயிர் மறையும். எனவே கன்மத்தால் உடல் உண்டாகிறது. உடல்வேறு உயிர்வேறு என்பதனை உணரவேண்டும்.

அறிவு உடலின் குணம் எனறால், பெரிய உடம்பில் பெரிய அறிவாகவும், சிறிய உடம்பில் சிறிய அறிவாகவும் இருத்தல் வேண்டும். அன்றியும் உடம்பு தேயும்பொழுது உயிரும் தேயவேண்டும். உடம்பு வளரும் பொழுது அறிவும் வளர வேண்டும். அவ்வாறு இல்லை. எனவே உலகாயதர் கூறுவது போல உயிர் உடம்பின் குணமல்ல. உடம்பு கன்மத்தால் தோன்றுவதாகும். இதைவிடுத்து உலகாயதர் கூறுவது போல உடம்பு பூதக் கூட்டமே என்றால் ஆண், பெண் சேர்க்கையின் காரியமாய் உடம்பு தோன்றுவது ஏன்? உலகாயதர் கூறும் நீர், சந்தனத்தோடு சேர்ந்து குளிர்ச்சியும், மணமும் பெறுவதும், தீயைச் சேர்ந்து வெப்பம் பெறுவதும் நல்வினை, தீவினைகளை உணர்த்துகின்றது எனலாம். எனவே உலகாயதர் கன்மம் இல்லை என்று கூறுவது பொருந்தாது என்று கூறுகின்றார். உலகாயதரின், உவமைகள் மூலம் வலியுறுத்தப் பெற்ற மற்ற கருத்துக்களை எல்லாம் தனித்தனியே மறுக்கத் தேவையில்லை. அவையெல்லாம் இப் பொதுக் கருத்தின் அடிப்படையில் பொருந்தாததாகின்றது என்பது அருணந்தி சிவாசாரியாரின் எண்ணமாகலாம். (பா:42-50)

**கொள்கை : 5**

வெற்றிலையும், பாக்கும், சுண்ணாம்பும் சேரும்போது சிவப்பு உண்டாகிறது. அதுபோலப் பூதங்களின் கூட்டுணர்வால் ஓர் உணர்வு ஏற்படுகிறது. அஃது அல்லாமல் ஆன்மா என்ற ஒன்று தனியே இல்லை. அவ்வாறு இருக்குமானால் அதனைக் காட்சி அளவில் காட்டுதல் வேண்டும். அது தவிரப் பிற அளவைகளால் கூறுவது முயலுக்கு கோடும், அதனது பெருமை கூறுவதும் போன்றதாகும். (பாடல் : 22)

**மறுப்பு**

வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு சேர்ந்தால் சிவப்பு நிறம் தோன்றுகிறது என்ற உவமை பொருத்தமாக இல்லை. அவை மூன்றும் உள்ளவரை, அவற்றால் தோன்றும் சிவப்பு இருக்கும். அது அவற்றின் தன்மையாகும். அப்படியிருக்க, உடலின் தன்மையாகாது, உடலில் உறுப்புகளாகத்தோன்றுவது எவ்வாறு? மேலும் வெற்றிலை முதலாய மூன்றினையும் கூட்டுவதற்கு ஒருவன் வேண்டும். அதுபோலப் பூதங்களைக் கூட்டுவதற்கும் ஒருவன் வேண்டும். அவனே இறைவன், என்று கூறி மேற்கூறப்பெற்ற கருத்தை மறுக்கிறார். (பாடல் : 39)

**கொள்கை : 6**

இறைவன் அருவம் என்றால் ஆகாயம் போலதாம். இறைவன் உருவமுடையவன் என்று கூறின் பூதக்கூட்டத்தால் தோன்றிய உடலுடையவன் ஆவான். அருவுருவம் என்றால் ஆகாயமாகிய அருவத்தில், உருவமாகிய கல்லை விட்டால் கூடி நிற்குமா? அதுபோல உருவமும் அருவமும் கூடாது. (பாடல் : 23)

**மறுப்பு**

இக்கொள்கைக்கு அருணந்தி சிவாசாரியார் நேரடியாக மறுப்புத் தரவில்லை. உலகாயதரின் கொள்கை, பூதங்களே உருவங்களை உருவாக்குகின்றன என்பதாகும். இக்கருத்தை மறுத்தப் பூதங்கள் கூடிட இறைவன் வேண்டும் என்பதை உறுதிப்படுத்தி முன்னர் கூறிவிட்டதால் இங்கு மறுப்பு அளிக்கவில்லை. இறைவன் ஏற்றுக் கொள்ளாதவரிடத்தில் இறை உருவத்தைப் பற்றிய ஆய்வு தேவையில்லை என்று அவர் நினைத்திருக்க வேண்டும்.

**கொள்கை : 7**

“சிற்றின்பமே சிறப்புடையது. பூமியிலிருக்கும் உண்மையான பெண் இன்பத்தினை விட்டு விட்டு, விண்ணில் வீட்டு இன்பம் உண்டு என்று எண்ணித் தவம் போன்றவற்றைச் செய்து தடுமாறுகிறார்கள். இவர்கள் கானல் நீரை, நீரென்று எண்ணிச் சென்று துன்புறுகின்றவர்கள்

ஆவார்கள். வாமநூலைத் தழுவி நடப்பவர்கள் நம்மோடு ஒத்தவர்கள். கொலை, களவு என்பவை அவர்களுக்கு விலக்கல்ல. அவர்களும் எம்மைப் போல மாதர்களைக் கண்டு மகிழ்பவர்களே. நாம் மட்டுமல்ல. அரன், அரி, அயன், இந்திரன் ஆகியோர் பெண்களைத் தலையில் கொண்டும், நாவில்கொண்டும், மார்பில் கொண்டும், உடம்பு முழுமையும் கொண்டும் பெரியவர்களாயினர். எனவே பெண்களோடு கூடி வாழ்வதே முத்தியாகும். அதனை விடுத்து மேலான இன்பம் தரும் வீடு என ஒன்று இருக்குமாயின் அதனைக் காட்டிடுக. ஐம்பொறிகளின் விருப்பம் நிறைவேற இன்பம் துய்ப்பதே சிறப்பு என்பர்" உலகாயதர் இத்தகைய சிற்றின்பக் கொள்கையை உலகாயதர் கொள்ளையாக அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார். (பாடல்:25-32)

## மறுப்பு

அருணந்தி சிவாசாரியார் மேற்கூறப்பட்ட கொள்கைக்கு மறுப்பை இறுதி ஏழு பாடல்களில் மிகவும் வன்மையாக அமைத்திருக்கிறார். இன்பம் துய்ப்பதற்குரிய பெண்களின் உடம்பைப் பற்றிப் பலவிதமாக மதிப்பீடு செய்கிறார். பெண்கள் உடல் "புன்புலால் மல மூத்திராதி பொசிந்து நாறு புலைக்கலம்" (பா : 58), "குரம்பை அழுக்கினோடும் புழுக்குலாம் நூலொழுக்கிடு கோழை ஈரல் நுரைக்கு மூத்திர பாத்திரம்" (பா : 59) என்று குறிப்பிட்டு அவற்றின் இழிநிலையை விளக்குகிறார். இத்தகைய நாற்றமுடைய மேனியில் இன்பம் துய்ப்பது பன்றிகள் மலத்தில் புக்கு அதனை உண்டு - புரண்டு - சுகத்தை அடைவது போன்றது. என்று கூறி - தன் வெறுப்புத் தன்மையை மேலும் வெளிப்படுத்தியுள்ளார். (பா : 60). இத்தகைய சிற்றின்பநிலை கடந்து - இறைவனைத் தொழுது முத்தியடைய வேண்டும் என்பது அவர் கருத்து. சிற்றின்பம் தேவை இல்லை என்று கூறிய ஆசிரியர், ஒட்டு மொத்தமாகக் கூறினால் இல்லற மக்கள் ஏற்க மாட்டார்கள் என்பதால், இவ்வுலகில் இன்பம் வேண்டும் என்றாலும் அதனையும் சிவபெருமான்தருவார் என்று குறிப்பிடுகிறார். அதற்கு ஓர் சான்றாகச் சுந்தரமூர்த்தி நாயனாரின் வாழ்வை எடுத்துக் காட்டுகிறார்.

*"வேதன் நாரணன் ஆர ணம்மறி யாவி ழுப்பொருள் பேதைபால்*
*தூத னாயிரு கால்ந டந்திடு தோழன் வன்மைசெய் தொண்டனுக்கு*

*ஆத லாலடி யார்க்க ளுக்கெளி யானடிக்கம லங்கள்நீ*
*காத லாலணை ஈண்டன் வேண்டின் இம்மை யேதருங் கண்டிடே"*

(பா : 57)

இப்பாடலில் அறிதற்கு அரிதாகிய விழுப்பொருள் சுந்தரமூர்த்தி நாயனாருக்காகப் பரவைபால் தூதனாக நடந்த துணைவன் ஆவான். எனவே அவனின் பாத கமலங்களை வழிபட்டால் போகத்தையும் தருவான் என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறு சிற்றின்பக் கொள்கையின் மறுப்பு அமைந்துள்ளது.

இத்தகு நிலையில் அருணந்தி சிவாசாரியார் உலகாயதரின் கொள்கைகளை மறுப்பதில் சிறந்து விளங்கித் தம் விவாத நடைத் திறனை வெளிப்படுத்துகிறார்.

## பௌத்தம்

பௌத்த மதத் துவக்குநராம் கௌதம புத்தர் கி.மு.563ல் தோற்றம் கொண்டார். சாக்ரெட்டீசுக்கு 100 ஆண்டுகட்கு முன்பும், லாவோசியஸ், மகாவீரர், சொரஸ்டர் ஆகியோருக்குச் சில ஆண்டுகள் பின்பும், கன்பூசியஸ், பிதாகோரஸ் முதலியோர் தோன்றிய உடன் காலத்தும் புத்தர் தோன்றினார் என்பர்.[54] இதனால்தான் போலும் பௌத்த சமயம் தத்துவங்களுக்குக் கருவூலமாக விளங்கிற்று. இச்சமயம் பற்றி டாக்டர். எஸ்.தசிபணர் குறிப்பிடும்பொழுது,

பிராமணம், "சடங்கு மயமே அறிவு மயம்" என்றது. ஆனால் பௌத்தம், "அறமயமே அறிவு மயம் என்றது".[55] என்று குறிப்பிடுகின்றார். இவ்வறிவுக் கொள்கைகளைப் புத்தர், நூல் வாயிலாகத் தெரிவிக்கவில்லை. அவரின் அறிவுரைகளைப் பின்னர் வந்த அவரின் மாணவர்களே தொகுத்தனர். அவ்வாறு தொகுக்கும்போது அவரவரின் வன்மை, மென்மைக்கு ஏற்பச் சிறுசிறு மாற்றங்கள் ஏற்பட்டன. அதனால் பௌத்தக் கொள்கை இரு பெரும் பிரிவாகப் பிரிந்தது. மகாயான பௌத்தம் - உறீனயான பௌத்தம் என்பன அப்பெரும் பிரிவுகள்.

கி.மு.487ல் ஏற்பட்ட கௌதமபுத்தரின் மறைவிற்குப் (பரிநிர்வாணம்) பின் புத்தமதக் கொள்கை நாட்டில் பரவ, பணியாற்றும் அறிஞர் குழுக்கள் உருவாகின. அக்குழுக்கள் சங்கம் என்ற பெயரால் அமைக்கப் பெற்றன. புத்தரின் மறைவின் அண்மைக் காலத்தில் முதற்சங்கம் நிறுவப்பட்டது. பின்னர் எழுந்த சங்கங்களில் அசோகர் காலத்தில் பாடலிபுத்திரத்தினில் கூடிய சங்கம் குறிப்பிடத் தக்கதாக அமைந்தது. தமிழகத்தில் கி.பி.2ஆம் நூற்றாண்டில் பௌத்தம் புகுந்து 12ஆம் நூற்றாண்டு வரை, அதாவது அம்மதத்தின் செல்வாக்கு இந்திய நாட்டில் அழிந்த காலம் வரை, சிறப்புற்றிருந்தது. தமிழில் மணிமேகலை, குண்டலகேசி, பிம்பிசாரக் கதை, சித்தாந்தத் தொகை, அபிதம்மாவதாரம் ஆகியவை குறிப்பிடத் தக்கப் பௌத்த நூல்களாகும். இத்தகு நிலையில் பௌத்தம் இந்திய மெய்ப் பொருளியலில் இடம் பெற்று விளங்குகின்றது. அருணந்தி சிவாசாரியார் பௌத்த மதத்தை அறிமுகப்படுத்திடும் பாடல் குறிப்பிடத் தக்கதாக அமைகிறது. பௌத்த மதக் கொள்கையினர் நீதியைத் தனக்கு அங்கமாகக் கொண்ட வேதத்தை ஏற்காது பிடக நூலை ஏற்று நாள்தோறும் ஓதுகின்றவர்கள். ஐந்து ஒழுக்கங்களைக் கொண்டவர்கள். துறவிகளுக்கு உரிய காவி நிற ஆடையை உடுத்துகிறவர்கள். அரசமரத்தைத் தெய்வமாகப் போற்றி, அதன் கீழ் அமர்ந்து யோகம் செய்பவர்கள்.

பௌத்த மதக் கொள்கையினர் கொள்கை வேறுபட்டால் நான்கு பிரிவினர்களாய்ப் பிரிந்திருந்தனர் என்றும் குறிப்பிட்டுள்ளார்.[56] இப்பாடல் மூலம் ஆசிரியர் விவாதத்திற்கு எடுத்துக் கொண்டவர்கள் பௌத்த தத்துவ வாதிகள் என்பது பெறப்படுகிறது. அவர்கள் ஆசிரியர் காலத்தில் ஐந்து சீலங்கள் எனக் கொல்லாமை, சத்தியம், பிரம்மச்சரியம், அசுதேயம், சங்கிரகம் ஆகியவற்றைக் கொண்டு விளங்கினர் என்பதும், பௌத்தர்கள் கொள்கையால் வேறுபட்டுச் சௌத்திராந்திகம், யோசாரம், மாத்தியமிகம், வைபாடிகம் என்ற நான்கு பிரிவினராய் இருந்தனர் என்பதும் பெறப்படுகிறது. இதில் சாதி வேறுபாடு காணாதவர்கள் சௌத்திராந்திகர்கள் என்றும்[57], குற்றத்தை உடைய சொற்களைக் கொண்டவர்கள் மாத்தியமிகர் என்றும், யோகசாரர்கள் சாத்திரத்தை உணராதவர்கள் என்றும்[58], பரிவு நிலைக்கு உரியவர்கள் வைபாடிகர்கள் என்றும்[59] அவரின் பாடல்களால் அறியப்பெறுகின்றன. மேலும் சௌத்திராந்திகன் மதம் தவிர மற்ற மூன்று பிரிவினர்களைப் பற்றி ஒரு சில பாடல்களே யோகசாரன்-3,

மாத்தியமிகன் -3, வைபாடிகன் -2 நூலில் இடம் பெற்றிருப்பதால் பௌத்தப் பிரிவுகளில் மற்ற மூன்று பிரிவுகளை விடச் சௌத்திராந்திக மதமே தமிழக மெய்ப்பொருள் வாதிகளால் அதிகம் எடுத்துக் கொள்ளப்பெற்று வாதிக்கப் பெற்றிருக்கிறது என்றும் தெரிகிறது.

## பௌத்த மதக் கொள்கைகளும், மறுப்புகளும்

பௌத்த மதத்தின் நான்கு பிரிவுகளை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். சௌத்திராந்திகர் மதக் கொள்கைகளை 31 பாடல்களிலும், மறுப்புகளை 40 பாடல்களிலும், யோகசாரன் மதக் கொள்கைகளை 1 பாடலிலும், மறுப்பினை இரண்டு பாடல்களிலும், மாத்தியமிகன் கொள்கைகளை ஒரு பாடலிலும், மறுப்பை இரண்டு பாடல்களிலும், வைபாடிகர் மதக் கொள்கைகளை 1 பாடலிலும், மறுப்பை 1 பாடலிலும் ஆக 79 பாடல்களில் பௌத்த மதக் கொள்கைகளையும், மறுப்புகளையும் அமைத்துள்ளார். பௌத்த மத நால்வகை பிரிவுகளும் ஆசிரியர் காலத்தில் வழக்கில் இருந்தமையைப் "புத்தர் நால்வரின்" என்ற (பா:64) தொடர் உறுதிப் படுத்துகிறது. பிடகநூலை ஆசிரியரும் அறிந்திருந்தமை "நீதியார் வேத நூலின் நெறியிலா அறம்" (பா:64) என்ற தொடரும், "பிடகங்களான வழுவிலா ஆகமங்கள் சொன்ன மாதவன்" என்ற தொடரும் (பா:65) சுட்டுகின்றன. இவை அருணந்தி சிவாசாரியாரின் பிறமத நூல் பயிற்சியையும் எடுத்துக் காட்டுகின்றன. இது பௌத்தமதக் கொள்கைகளை ஆசிரியர் வரிசைப்படுத்துவதற்கு எளிமையாயிற்று.

### கொள்கை: 1

பிடகநூலில் காட்சி, கருதல் என்ற இரு அளவைகள் பகரப் பெற்றுள்ளன. அவற்றால் (ஞானம்) அறிவு, (ஞேயம்) அறியப்படும் பொருள் பெறப் படுகின்றன. அவை கணந்தோறும் தோன்றி அழிகின்றன. அழியும் பொருள் தன் தன்மையை அடுத்து வரும் பொருளில் விட்டுச் செல்கிறது. இதனால் தொடர்ச்சி அறிவு உண்டாகிறது. உரு, அரு, வீடு, வழக்கு என நான்கு பொருளை அத் தொடர்ச்சி தருகிறது. அவை உள், இல் என அமைந்து எட்டாகவும் அமைகின்றன. (பா:66)

இக் கருத்துகள் பௌத்த மதக் கொள்கைகளில் இடம் பெற்றிருந்தமையை ஆய்வாளர் மூர்த்தி அவர்களும் குறிப்பிடுகின்றார்கள். பௌத்த மத அடிப்படைக் கொள்கைகளை மூன்றாகப் பாகுபடுத்தும் பொழுது முதல் கொள்கையாக யாவும் கணமே உள்ளவை என்பார். அவர் மேலும் அளவைகள் இரண்டு என்பதைக் கூறிஅவற்றினை நேர்அறிவு, கருதல் அறிவு என்றும் குறிப்பார்.[60]

**மறுப்பு**

அளவை இரண்டு என்று கூறும் கருத்துப் பொருத்தமுடையதல்ல. மூவுலகில் கீழ் உலகையும், மேலுலகையும் உணர்தற்கு, கருதல் அளவையால் இயலாது. நூலின்அறிவே வேண்டும். எனவே நூல் அளவையாகிய உரை அளவை இன்றியமையாதது ஆகும். உரை அளவையை இம்மதத்தார் ஏற்கவில்லை என்றால், பிடகநூ லாகிய அளவையை இம் மதத்தார் காட்டுவது பொருந்தாது. (பா : 106)

ஞானம், ஞேயம் என்ற இரண்டும் நிலையற்றது அநித்தம் என்பதும் பொருந்தாது. உண்மையை ஆராயப் புகுந்தால், பொருள்கள் அனைத்தும் புலப்படும் உரு நிலையையும், புலப்படாத அரு நிலையையும் உடையன என்பது பெறப்படும். புலப்படாத அரு நிலையினின்று உருநிலை தோன்றுவது தோற்றம் எனப்படும். புலப்பட்ட உருநிலை கலங்கி, அரு நிலை எய்தினால் அழிவு எனப்படும். எனவே இத்தகைய பொருள்களை ஒன்றுமில்லாதது (சூனியம்) என்று கொள்வதும், யாவும் கணமே உள்ளது என்று கூறுவதும் பொருந்தாது. (பா : 107)

**கொள்கை: 2**

இவர்தம் கொள்கையில் அடுத்து இடம் பெறுவது கந்தம் பற்றிய கொள்கையாகும். வீடு என்பது விடத்தக்கவையைக் குறிக்கும். அவை கந்தவீடு என்றும், குற்ற வீடு என்றும் இரு வகைப்படும். கந்தம் என்பது சேர்க்கையைக் குறிக்கும். அவை உருவம், வேதனை, ஞானம், குறி, பாவணை என வகுத்துக் கூறப்படும். சித்தத்தால் சிந்திக்கப்படும் ஓசை முதலியன உருவக் கந்தம். இவ்வுணர்வால்

தோன்றும். இன்ப, துன்ப மயக்கங்கள் வேதனைக் கந்தம், பெயர்கள் குறிக்கந்தம், ஒரு பொருளின் எச்சம் பாவனையாகும். இவை ஐந்தும் கூடுவதால் தான் அகச் சமுதாயமாகிய உடல் உருவாகும். இந்தக் கந்தம் நீங்கினால் துன்பம் இல்லை. (பா:59)

இந்தக் கந்தங்கள் பற்றிய விளக்கத்தை மூல நூல்கள் குறிப்பதால் புத்தரே அறச்செயல்களைப் பாகுபடுத்தும் போது இவ்வாறு பாகுபடுத்தினார் என்றும் கூறுவர்.[61] மேலும் "ஐந்து வகைக் கந்தத்து அமைதியாகி" என்றும்,

*"உருவு, நுகர்ச்சி, குறிப்பு பாவனை*
*உள்ள அறிவு இவை ஐங்கந்தம் ஆவன"*

என்றும் சாத்தனார் கூறுவார்.[62]

**மறுப்பு**

இக் கொள்கையை 109 ஆம் பாடல் முதல் 112 ஆவது பாடல் வரை அருணந்தி சிவாசாரியார் மறுத்துரைக்கின்றார். பூதங்கள் சேர்க்கையால் மட்டும் உருவம் உண்டாகாது. மேலும் பூதங்கள் தாமே கூடி உருவத்தை உண்டாக்கா. அடுத்து வினை, உருவத்தை உண்டாக்கும் என்பதும் தவறு அதுபோல உண்ணும் அன்னம்தான் உருவத்தை உண்டாக்கும் என்பதும் தவறு. ஏனென்றால் பூதங்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டவை. ஆதலால் சேராது. வினையிலும் அதன் இருவகையான பாவ, புண்ணியங்கள் ஒன்று சேரா. உணவு, உருவத்திற்குக் காரணம் என்றால் வயது முதிர்ந்த காலத்தில் உடல் வளராது - ஏன் தேய்கிறது? எனவே உருவம் உண்டாக்க ஒருவன் வேண்டும். அவனே முதல்வன் இவ்வாறு கூறிக் கந்தம் என்ற சேர்க்கையை மறுக்கிறார்.

**கொள்கை : 3**

தோற்றுபவன் என்று உரைக்கப் பெற்றவன் உருவம் முதலிய ஐந்தோடும் கூடி வருபவன் என்று கூறுதல் தொகை உண்மை வழக்காகும் உருவம் முதலிய ஐந்தையும் அவற்றோடு கூடாமல் ஒரு

கர்த்தா நீங்கி நின்று உண்டாக்குவான் என்பது தொகை இன்மை வழக்காம். இந்த வழக்குகள் இரண்டும், "இல்லது சார்ந்த உள் வழக்கு", "இள்ளது சார்ந்த இல்வழக்கு" என்ற நான்கோடு சேர ஆறாகும். யானைக்கோடு உண்டெடன்பது உள்வழக்கு. முயற்கொம்பு இல்லை என்பது இல்வழக்கு. அறிவைச் சார்ந்து அறிவு உண்டு என்பது உள்ளது சார்ந்த உள்வழக்கு. அறிவு கெட்டால் பின் அறிவு உண்டாகாது என்பது உள்ளது சார்ந்த இல்வழக்கு. அறிவு முன்பு இல்லாதாகிப்பின் உண்டாம் என்பது இல்லது சார்ந்த உள்வழக்கு. உள்ளங்கையில் மயிர் உண்டாம், அம்மயிரால் கயிறு உண்டாம் எனபது இல்லது சார்ந்த இல்வழக்கு இவ்வாறு வழக்கு பற்றிக் கூறப்படுகிறது. (பா : 70, 73, 74) வழக்கு பற்றிய செய்திகள் பௌத்த மதக் கோட்பாடுகளில் இருந்தமை மணிமேகலையால் அறியப்படுகிறது. உள்வழக்கு, உணர்வு என்ற பகுதிகள் மணிமேகலையால் குறிக்கப் பெற்றுள்ளன. (30-208) இவ் வழக்கிற்கு உதாரணங்கள் காட்டும்போது மணிமேகலையில் முயற்கோடு போன்றவை உதாரணங்களாகக் காட்டப்பட்டுள்ளன. (30-51-54) சித்தியாரிலும் அவ்வுவமைகள் காட்டப் பெற்றிருப்பன இங்குக் குறிப்பிடத் தக்கன

**மறுப்பு**

வழக்கு நிலையில் உணர்வு கெடாத தொடர்ச்சியாலே உணர்வு தோன்றும் என்ற புத்தமதக் கொள்கை மறுக்கப் பெறுகிறது (பா : 114). அறிவைச் சார்ந்து, அறிவு உண்டு என்று தொடர்ச்சி வழக்குக் கூறப்படுவது பொருத்தமன்று மேலும் அதற்கு உதாரணமாக ஓடும் நீர் இடையறாது செல்வதைக் காட்டுவதும் பொருத்தமன்று. ஏனென்றால் ஒரு மிதவையைத் தண்ணீரில் ஓரிடத்தில் விட்டால், அம் மிதவை அத் தண்ணீரோடு சென்றுவிடும். அதுபோல முந்தைய அறிவால் தேடும் பொருள்கள் முன்னையறிவோடு கெடும். எனவே தொடர்ச்சி என்பது பொருந்தாது என்று வழக்குகள் மறுக்கப் படுகின்றன. அதற்குரிய பாடல்.

*கேடிலாச் சந்தானத் தேபலிக்கு மென்று*
*கிளக்குநீ சந்தான நித்த மாகும்*
*ஓடுநீர் போலழிந்தா முணர்வொழுக்க மென்னின்*
*ஒழுகுநீ ரிட்டதெல்லா முடன்கழிதல் போலத்*
*தேடுபொருள் சீலம்பா வனைகுறிவிஞ் ஞானம்*
*சென்றவுணர் வோடேகு நின்றுணர்வி னேயா*

*நீடுநீரட முன்னொழுகிக் கெடாதுநிறைந் தோடும்*
*நிகழுமுணர்வுங்கேடின்றி நிறைந்து செலுங் காணே*
(பா : 114)

**கொள்கை : 4**

பௌத்தத்தின் அடிப்படைக் கொள்கையில், தலையாய கொள்கை உயிர் இல்லை என்பதாம். கந்தங்களுக்கு வேறாக அறிவுடைய பொருளாகிய உயிர் உண்டு எனக் கொள்ள வேண்டியதில்லை. உயிருக்கு அறிவு இல்லை என்றால் அது மண் முதலிய பூதங்களில் ஒன்றாக அடங்கும். அஃது அறிவுடையது என்றால் அதற்கு மேல் ஒருவன் தேவையில்லை. மேலும் ஐம்பொறிகளால் உயிர் உண்டு என்பதை அறியலாம் என்றால், இரவில் பச்சை நிறமும், சிவப்பு நிறமும் கலந்து நிற்கும்போது அவற்றை அறிய முடியாதது ஏன்? உயிர் உண்டு எனின் அது அருவமா? உருவமா? அருவமாயின் உருவமாகிய உடம்போடு பொருந்தாது. உருவமாயின் ஓர் உரு மற்றொரு உருவில் அடங்காது. உயிர் அணு என்றால் அது உடம்பில் உள்ள எத்தனையோ துளைகள் மூலம் ஓடிவிடும். உயிர் உடம்பில் எங்குள்ளது? உடம்பு முழுவதும் இருக்கிறது என்றால், உடம்பு தோறும் வேறு வேறு உணர்வுகள் உண்டாவது ஏன்? எனவே உயிர் என்பது ஒன்று இல்லை என்பதே முடிபு.

உயிரைப் பற்றிப் புத்தரிடம் வினவப்பட்ட பொழுது அவர் மௌனமாய் இருந்தார் என்பதை அனைத்துப் பௌத்தத் தத்துவ அறிஞர்களும் ஏற்பர். அந்த மௌனம் தான், உயிர் இல்லை என்ற கருத்தை உண்டாக்கிற்று என்பர்.[63]

**மறுப்பு**

உயிர் இல்லை என்ற கருத்தை 120 ஆம் பாடல் முதல் 126ஆம் பாடல் வரை மறுத்துரைக்கிறார். ஐந்து கந்தங்கள் உயிர் ஆகுமே தவிரத் தனி நிலையில் உயிர் என்ற ஒன்று இல்லை என்று கூறுவது பொருத்தமன்று. ஏனெனில் அந்த ஐந்து கந்தங்களை அறிவது உயிர்தான். உருவங்கள் முதலிய பொருள்களையும், அவற்றைக் காட்டி நிற்கும் விளக்கையும், கண்டு நிற்கும் கண் போலச்

சித்தத்தையும், இந்திரியங்களையும் உணருகின்ற உயிர் உண்டு. உடம்புடன் இந்திரியங்களும் மனமுமே உயிர், வேறு உயிர் இல்லை என்று கூறுவதும் பொருத்தமில்லை. உடம்பு உறக்கத்தில் இருக்கும் பொழுது எதனையும் அறிவதில்லை. மனமும் கணத்திற்குக் கணம் கெடும். இந்திரியங்களில் ஒன்று அறிந்ததை மற்றொன்று அறியாது. எனவே இவை மூன்றும் உயிர் (ஆன்மா) அல்ல. எனவே இவை மூன்றையும் அறிகின்ற உயிர் என்பது வேறாகும். இவ்வாறு உயிர் பற்றிய மறுப்புகளை அமைத்திருக்கிறார்.

**கொள்கை : 5**

காலம் என்ற ஒன்று இல்லை. பொருள்களில் தோற்றம், நிலை, இறுதி அல்லது அசைவு என்பது பற்றித்தான் காலத்தை அளந்தும், இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என வகைப்படுத்தியும் உணர்கின்றோம். எனவே பொருள்களின் தொழிலுக்கு வேறாக காலம் என்ற ஒன்று இல்லை. (பா : 82) காலம் இல்லை என்பது போலத் திசை என்பதும் இல்லை. ஒருவன் ஒரு பொருள் நோக்கிக் கிழக்கே உள்ளான் என்றால், மற்றொரு பொருளை நோக்கி அவனையே மேற்கில் அல்லது வடக்கில் அல்லது தெற்கில் அல்லது யாதெனும் ஒரு கோணத் திசையில் இருக்கின்றான் எனக் கூறவும் வாய்ப்பு ஏற்படுகின்றது. ஆதலின் திசை என்பது எவையேனும் இரண்டு பொருளைச் சார்த்திக் கூறும் கற்பனை உணர்வே அன்றிப் பொருண்மை உடையது அல்ல. (பா : 83)

**மறுப்பு**

காலம், திசை இல்லை என்பது பொருத்தமன்று. காலமானது காலை, உச்சி, மாலை என்றும் பொழுதாகவும், நெருநல், இன்று, நாளை என்னும் நாளாகவும், மற்றுமுள்ளனவாயும் இத்தன்மையிலே மூன்று விதமாய் வேறுபட்ட நன்மை தீமைகளைச் செய்யும். திசையானது ஆதியிலும், அநாதியிலும் உள்ளதாய்ப் பிறழாமல் அத்திசையை நோக்கிக் கன்மம் செய்வோர்க்குக் கன்ம பலத்தைக் கொடுக்கும். எனவே காலமும், திக்கும் உண்டு என்பதை உணர்தல் வேண்டும்.

கொள்கை : 6

பௌத்தமத அடிப்படைக் கொள்கைகளில் கடவுள் என்பதும் ஒன்றாகும். உயிர் இல்லை என்ற கருத்து எவ்வாறு வலியுறுத்தப் பெற்றதோ, அதுபோல இக் கொள்கையும் வலியுறுத்தப் பெறுகிறது.

அதன் சுருக்கம் :

உலகைப் படைத்தவன் உளன் என்றால் உலகம் அவனுக்கு முன் இருந்ததோ அல்லது பின் உளதாவதோ என்னும் வினாவிற்கு விடை கூறல் வேண்டும். முன்பு உள்ளதாயின் அதனை ஒருவரும் படைக்கவேண்டா. இல்லதாயின் அதனை ஒருவராலும் படைக்க முடியாது. காரண நிலையினின்றும் காரிய நிலைக்குக் கொண்டு வருவதே படைப்பு எனின், காரண நிலையானது புலப்படாத அருநிலை, காரியநிலை என்பது புலப்படும் உருநிலை. ஒரு பொருள் இவ்விரு நிலையும் உடைத்து என்றால், உலகம் உள்ளதும், இல்லதும் ஆம் என்று ஆகி முரணும்.

மேலும் குயவன் நிலத்தின் மேலிருந்து கொண்டு மண்ணால் குடத்தைப் படைத்தலைக் காண்கின்றோம். அதுபோலக் கடவுள் எப்பொருளின் மேல் இருந்துகொண்டு உலகத்தைப் படைக்கிறார் என்பதைச் சொல்லியாக வேண்டும். ஏதேனும் ஒரு பொருள் மேல் இருந்து படைத்தார் என்றால், உலகம் அவர் படைப்பின் முன்பே உள்ளது என்பதாய் முடியும்.

இனி உருவுடையவர்தான் ஒரு பொருளை ஆக்குதலைக் காண்கிறோம். ஆதலால் கடவுள் உலகத்தைப் படைக்கின்றார் எனின், அவரை உருவுடையவர் எனல் வேண்டும். வேண்டின், அவ்வுருவை அவர்க்குப் படைத்துக் கொடுத்தவர் யார்?

தன்விருப்பால் கடவுள் உருவை மேற்கொள்வார் என்றால், உயிர்களும் தம் விருப்பால் உருவு கொள்ளும் என்று மொழிதல் வேண்டும். எனச் சித்தியாரில் கடவுள் இல்லை என்ற பௌத்தரின் கருத்து கூறப்பெற்றுள்ளது. "புத்தரின் காலம், சாதி, சமயச் சார்புகளால் துயருற்ற காலம். கண்ட கண்ட பொருளை எல்லாம் மக்கள் கடவுளாகக் கொண்டும், அஞ்சியும், வணங்கியும் வாழத் தலைப்பட்டனர். எனவே

அவற்றால் ஏற்பட்ட துயர் கண்டு கடவுள் கொள்கையையே அழித்து விடுதல் நன்று என்று புத்தர் கருதியிருக்க வேண்டும்" என அறிஞர்கள் குறிப்பிடுவர்.[64] பௌத்தக் கோட்பாட்டில் காணப்பெறும் இக்கருத்தைச் சித்தியார் விரிவாகக் கூறியிருப்பது அக்காலச் சூழ்நிலையில் கடவுள் மறுப்புக் கொள்கை எவ்வாறு விரிந்து காணப்பெற்றது என்பதைக் காட்டுகிறது.

## மறுப்பு

இறைவன் இல்லை என்ற கொள்கையைப் பல பாடல்களால் மறுத்தாலும் 128 ஆம் பாடலில் சிறப்பாக மறுக்கிறார். உலகமெல்லாம் குடம்முதலியன போலக் காரியப்பட்டு வருதலாலே இதனைச் செய்தான் ஒருவன் வேண்டும். உயிர்கள் இயல்பாகவே தளைகளில் கட்டுண்டு நிற்பவை. அத்தளைகளை மெலிவித்து, உயிர்களின் அறிவை விரிவுபடுத்தி, உயிர்களானவை தம்மையும், முதல்வனையும் உணர்ந்து ஒன்றி இன்புறச் செய்ய உலகத்தைப் படைத்து, உயிர்களைப் படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருளல் என்னும் ஐந் தொழிலுக்கு உட்பட வைக்கின்றான் அம்முதல்வன். இது நல்ல குடிமகனாக வளர்வதற்கு உரிய மாணவர்களைக் கல்வி முறைகளாகிய கட்டுத் திட்டங்களுக்கு உட்படுத்தி, அவர் அறிவு முதிர்ந்தபின் தன்வயம் உடையராய்ச் செல்ல விடுவதோர் கல்விமுறையை ஒத்தது. இவ்வாறு உயிர்கள் இருவினையொப்பு என்னும் பக்குவநிலை எய்தும்போது, முதல்வன் குருவாய் எழுந்தருளி; உயிர்களின் தன்மையையும் உணர்த்துவான் எனக்கூறி மறுப்புகளை அமைத்துள்ளார்.

## யோகசாரன் மதம்

### கொள்கை :

ஒரே பாடலில் இப்பிரிவினரின் கொள்கை பற்றி ஆசிரியர் அமைத்துள்ளார். (பா : 135) அறிவே, இந்திரியங்களில் தோற்றப்பட்ட உருக்களுமாய் வருகிறது. மேலும் அவ்வறிவு புலன்களின் துன்பங்களினாலே கூடி வருகிறது. அவ்வறிவு அரூபம் ஆகும் உலகம் என்பது நிலையில்லாததாகிய சொப்பனம் போன்றது என்ற கொள்கைகளே அவர்களின் கொள்கைகளாகக் கூறப்பட்டுள்ளன.

### மறுப்பு

யோகசாரரிக் கருத்துகளை அருணந்தி சிவாசாரியார் இரு பாடல்களில் மறுக்கிறார். (136,137) யோகசாரர் உணர்வு (அறிவு) ஒன்றே உள்ளது என்று கூறி அக்கருத்தை விளக்கும்போது, அவ்வுணர்வோடு வாதனை என்னும் பிறிதொன்றினையும் உடன் கூட்டி விளக்கம் தருகிறார்கள். ஆதலினால் அவர்கள் கொள்கைப்படி உணர்வு, வாதனை என்ற இரண்டும் உள்பொருள் ஆகிறது. வாதனை என்பது, புறத்துப் பொருள்கள், தம் குணங்களாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பனவற்றால் ஐம்பொறிகளாகிய வாயில்களைத் தாக்க, அத் தாக்குதலால் வரும் பதிவுகளைக் கருத்து உணர்ந்து பொருள்படுத்தும் முறையேயாகும். எனவே வாதனை என்பது அறிவு அன்று என்று கூறி அறிவாகிய உயிர் பற்றிய கருத்தை மறுக்கிறார். கனவானது நனவிற் கண்ட பொருளின் மேல் கருத்தைச் செலுத்துவது ஆதலால் பிரபஞ்சம் கனவும் அல்ல என்று அவர்தம் கருத்து மறுக்கப்படுகின்றது.

## மாத்தியமிக மதம்

### கொள்கை :

இப்பிரிவுக் கொள்கையும், ஒரே பாடலில் அமைந்துள்ளது. அவயத்திற்கு வேறாக அவயவி என்பது ஒன்றில்லை. அவயம் கெட்டால், பின் பொருள் என்பதும் இல்லை. எனவே பொருள் இல்லாமையால் பொருளைக் கூடி நின்று அறியும் அறிவும் இல்லை என்ற கொள்கையினை உடையவர்கள் இவர்கள். இவர்கள் கொள்கை சூனியத்தை உட்படுத்துவது. இக்கொள்கையை நாகார்ஜுனர் என்பர். மஹாயான சூத்திரங்களிலிருந்து முறைப்படுத்தினார் என்று கூறுவர்.[65]

### மறுப்பு

இக்கருத்துக்கு மறுப்பாக இரு பாடல்கள் அமைந்துள்ளன. அவயவி இல்லை என்று கூறி அவயம் உண்டு என்று கூறுவது தவறு. ஏனென்றால் அவயமும் அவியவியும் கூடித்தான் ஒரு பொருள் உண்டாகும். அது போலப் பொருளாகிய உடலும், அதன் உணர்வாகிய

அறிவும் உண்டு. புலன்களும் அவற்றின் பொருள்களாக ஒலியாதிகளும், அவற்றை வேறுபட ஆராயும் உட்கருவிகளும் நிற்க, உயிர் வந்து கூடவில்லை என்றால் ஒரு பொருளையும் துணிந்துஅறிய முடியாது. எனவே உயிர் இல்லையென்று கூறுவது பொருத்தமில்லை என்று கூறி மறுக்கிறார்.

**வைபாடிகம்**

இவர்தம் கொள்கையும் ஒரே பாடலில் கூறப்பெறுகிறது. இவர்கள் பொருளையும் அறிவையும் ஏற்றுக் கொள்கிறவர்கள். சுண்ணாம்பும், மஞ்சளும் கூடிச் சிவப்பு நிறம் உண்டாவது போலப் பொருள்களும், உணர்வும் சேரும்பொழுது காட்சி உண்டாகிறது. இதனை உணர்ந்தால் வீட்டுபேற்றை அடையலாம் என்பது இவர்தம் கருத்து. வைபாடிகர்களை உலகு உண்மையை ஏற்றவர்கள், காட்சிப் பொருள் கொள்கையினை ஏற்றவர்கள் என்று கூறும் கூற்று[66] இங்கு நினைவு கூறத் தக்கது.

**மறுப்பு**

இவர்தம் கருத்துக்கு மறுப்பாக ஓர் பாடலே அமைந்துள்ளது. பொருள் என்பது புறத்தில் உள்ளது, அறிவு அகத்தில் உள்ளது. இரண்டும் ஒன்று சேரமாட்டா. உணர்வு உருவமற்றது. பொருள் உடையது. எனவே இவ்விரண்டையும் சேர்ப்பது ஆன்மா ஆகும். இவ்வாறு நால்வகைப் பௌத்தக் கருத்துகள் மறுக்கப்படுகின்றன. இத்தகைய சமயங்களோடு சமணம், மீமாம்சை, ஏகான்மவாதம் ஆகிய சமயக்கருத்துகளை அருணந்தியார் மறுக்கும் போது அவரின் விவாத நடை நினைந்து இன்புறத் தக்கனவாக அமைகின்றன.

**புராணம்**

சமய இலக்கியங்களில் பொதுவாகப் புராண நிகழ்வும் இடம் பெறுதல் இயல்பாகும். வழிபடுவோரின் மனத்தகத்தே சமய உணர்வுகளை மேலும் மேலும் ஏற்படுத்தப் புராணக் கதைநிகழ்ச்சிகள்

கருவிகளாகக் கொள்ளப் பெற்றன. எனவே சமய உணர்வுமிக்க மக்களிடையே சமய தத்துவங்களை வலுப்படுத்த, அருணந்தி சிவாசாரியார் தத்துவக் கருத்துகளை விளக்கும் பொழுது, புராண நிகழ்ச்சிகளைப்பயன்படுத்தி விளக்கியிருக்கிறார். இறைவன் மும்மூர்த்திகளில் ஒருவனல்லன். அவர்களுக்கும் மேம்பட்டவன் என்ற கருத்தை வலியுறுத்தும் பொழுது, "அரி, அயற்கு அறியவொண்ணா மேவுறு நிலையும்" (சுப.69) என்ற வரியில் சிவபெருமானின் அடியையும், முடியையும் காண்பதற்குப் பிரமனும், திருமாலும் முயற்சித்த புராணக் கதையைச் சுட்டுகின்றார்.

முன்னொரு காலத்தில் திருக்கயிலாய மலையிலுள்ள பூஞ்சோலையில் சிவபெருமானும், உமாதேவியாரும் பல திருவிளையாடல்களைச் செய்து வீற்றிருக்கும் சமயத்தில் உமாதேவியார் மகிழ்ச்சியால் சிவபெருமானுடைய திருக் கண்களைக் கைகளால் புதைத்தார். அப்பொழுது உலகமெங்கும் இருள் பரந்தது. உயிர்கள் அதனால் வருந்தின. இதனை அறிந்து சிவபெருமான் நெற்றிக் கண்ணைக் கொண்டு உலகிற்கு ஒளி கொடுத்தார். இந்தப் புராணச் செய்தியைக் கூறி இவ்வாறெல்லாம் இறைவன் திருமேனி கொள்வது உயிர்களுக்கு அருள் புரிவதற்கே என்று கீழ்க்கண்ட பாடலில் குறிப்பிடுகின்றார்.

*"நாயகன் கண்ந யப்பால்*
*நாயகி புதைப்ப எங்கும்*
*பாய்இருள் ஆகி மூட*
*பரிந்துஉல கினுக்கு நெற்றித்*
*தூ யநேத் திரத்தி னாலே*
*சுடர்ஒளி கொடுத்த பண்பின்*
*தேயம்ஆர் ஒளிகள் எல்லாம்*
*சிவனஉருத் தேசது என்னார்"* (சுப.72)

நெற்றிக்கண்ணை உடைய சிவபெருமான் ஒருமுறை யோகநிலையில் இருந்த அவர் தவத்தைக் கலைக்க முயன்ற மன்மதனை நெற்றிக் கண்ணால் சிவ பெருமான் எரித்தார். பிறகு இமயத்து அரசர் மகளாகிய உமாதேவியை மணந்து உலகுக்குப் பேரின்பம் அளித்தார். இந்தப் புராணக் கருத்தைக் கீழ்வரும் பாடலில் குறிப்பிட்டு இத்தகைய அருளைச் செய்வதற்கே இறைவன் திருமேனி கொள்கின்றான் என்கிறார்.

*"கண்ணுதல் யோகுஇ ருப்ப,*
*காமன்நின் றி டவேட் கைக்கு,*
*விண்உறு தேவர் ஆதி*
*மெலிந்தமை ஓரார் , மால்தான்*
*எண்ணிவேள் மதனை ஏவ,*
*எரிவிழித்து, இமவான் பெற்ற*
*பெண்ணினைப் புணர்ந்து, உயிர்க்குப்*
*பேரின்பம் அளித்தது ஓரார்"* (பா.73)

சண்டிகேசுவரார் பெரிய புராண அடியார்களில் ஒருவர் இவர் தன்னுடைய கிரியையாகிய தவத்தைக் கலைத்த தம் தந்தையின் காலை வெட்டியவர். இவருடைய புராண வரலாற்றையும் அருணந்தி சிவாசாரியார் கையாண்டுள்ளார். அத்துடன் தேவரில் வரங்கள் பெற்ற தக்கன், வேள்வியைச் செய்தாலும் இறைவனால் தண்டனைக்கு ஆளான வரலாற்றையும் அருணந்தி சிவாசாரியார் கையாண்டுள்ளார். இவ்விருவர் வரலாற்றையும் கீழ்க்கண்ட பாடல் கொண்டுள்ளது

*"அரன்அடிக்கு அன்பர் செய்யும்*
*பாவமும் அறமது ஆகும்*
*பரன் அடிக்கு அன்பு இலாதார்*
*புண்ணியம் பாவம் ஆகும்*
*வரம் உடைத்தக்கன் செய்த*
*மாவவேள்வி தீமை ஆகி*
*நரரினில் பாலன் செய்த*
*பாதகம் நன்மை ஆய்த்தே"* (சுப-பா 119)

இப்பாடலில் பரமசிவனது திருவடிளுக்கு அன்புடையார் செய்யும் பாவச் செயல்களும் அறங்களாக முடியும் பரமசிவனது திருவடிக்கு அன்பிலாதார் செய்யும் புண்ணியச் செயல்களும் பாவங்களாய் முடியும் என்பதற்கு இவ்விரண்டு வரலாறுகளும் மேற்கோள்களாகக் காட்டப் பெற்றிருக்கின்றன

## உத்தி

உத்தி எனும் சொல் பல பொருள்களைக் கொண்டு விளங்குகின்றது. அனுமானம், அறிவு, சேர்தல், அபின், இசைவு, இணக்கம், செல்வம், சொல், தந்திர உத்தி, திருவுறுப்பு, தூக்கங்கள், தேமல், படப்பொறி என அப்பொருள்களைத் தமிழ்மொழி அகராதி வகுத்துக் காட்டும்.[67] பலபொருள்களைக் கொண்டு விளங்கும் இச்சொல் இலக்கியத்திலும், இலகியத் திறனாய்விலும் இடம்பெறும் பொழுது தனிப் பொருள் கொள்ளுகின்றது. தமிழ்ச் சொல் அகராதி இதனைத் தந்திர உத்தியாக அமைக்கின்றது. "நுற்பொருளை உலக வழக்கத்திற்கும், செய்யுள் வழக்கத்திற்கும் பொருந்தக் காண்பித்து, ஏற்புழியறிந்து, இதற்கு இவ்வகையாம் என்று தக்கபடியாக வைக்கும் தன்மை" எனத் தமிழ் ஆங்கில அகராதி குறிப்பிடும்.[68] இத்தகைய பொருள்களை உத்தி என்னும் சொல் கொண்டிருப்பதால் படைப்பாளருக்கு இவ்வுத்தி, தம் கலைத்திறனை விளக்கப் பயன்படும் ஓர் கருவி என்பது பெறப்படும், இவ்வுத்தியால் அருணந்தி சிவாசாரியார் சிறப்புற்று விளங்குகிறார். இவ்இயலில் முதலில் இடம்பெற்ற பாவகையும் - நடையும் ஆசிரியரின் உத்திக்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும், அவைகளுடன் பரபக்கத்தில் ஆசிரியரின் மறுப்புகளாக அமைந்துள்ள கருத்துகள் அனைத்தும் அவரின் உத்திக்குச் சிறந்த சான்றுகளாக விளங்குகின்றன. அவற்றிலும் உவமைகள் நிலையில் மிகவும் குறிப்பிடத்தக்க நிலையில் அவ்வுத்திகள் இடம் பெற்றுள்ளன. பிற சமயத்தார் காட்டிய உவமைகளை மறுத்து. அதன்மூலம் சிவபெருமான் பெருமைகளைக் காட்டுதலும், பிறர் உவமைகளைச் சைவ சமயக் கருத்துகளுக்கு உவமையாக்கிக் காட்டுதலும், பிறர் உவமைகளை நகையாடுதலும் அவரின் உத்திகளாக அமைந்துள்ளன.

### உத்தி : 1

பரபக்கத்தில் இடம் பெற்றுள்ள பிறமதக் கருத்துகளில் அவர்களால் சுட்டப் பெற்றுள்ள உவமைகளை எடுத்துக்காட்டி, அவ்வுவமைகள் அம்மதத்தாரின் கருத்துக்கு ஏற்புடையன அல்ல என்பதைத்தக்க காரணங்களோடு ஆசிரியர் காட்டுவது மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்

உலகாயதர் சிலம்பியினிடத்தில் நூல் தோன்றுவது போல முன்பு இல்லாத ஐம்பொறி உணர்வு, துயில், பயம் முதலியவை உடம்பின் குணங்களாகத் தோன்றும் என்பர், இங்கு உவமை "சிலம்பியிடத்து நூல் தோன்றுவது போல" என்பது.[69] இதனை ஆசிரியர் மறுக்கிறார்.

எல்லாச் சிலந்தியிடத்தும் ஒரே மாதிரியான நூல்தான் தோன்றும், அது போலப் பூதங்களில் வேறுபாடு இல்லாமையால் தோன்றுகின்ற உயிர்களில் மிருகம், பறவை முதலிய உடல் பேறுபாடுகள் ஏற்படக் கூடாது. ஆனால் உலகில் உயிர் வேறுபாடுகள் ஏற்படுகின்றன. எனவே இவ்வுவமை பொருந்தாது என்பார்.

சௌத்திராந்திகன் கன்மத்தைப் பற்றிக் கூறும்போது கன்மம் அறிவை உண்டாக்கும், அறிவு அக்கன்மத்தைக் கெடுக்கும் என்று கூறும்போது விறகிலே தீ தோன்றி, அவ்விறகைச் சாம்பர் ஆக்கினாற் போல என்ற உவமையைக் கூறுவர்.[70] இதனை ஆசிரியர் மறுக்கிறார்.

விறகில் உண்டான தீ அதனைச் சாம்பர் ஆக்கிவிட்டால், மீண்டும், விறகாக அதை உண்டாக்க முடியாது. அதுபோலக் கன்மத்தை அறிவு அழிக்கும் என்றால் அறிவு பிறக்கும்போதே அக்கன்மத்தை அழித்துத்தானே பிறந்திருக்கவேண்டும். கன்மத்தை அழித்துப் பிறக்கும் அறிவு தான் தோன்றிய பின்னும் கன்மத்தை எவ்வாறு அழிக்கும்? எனவே உவமை தவறு என்பார் ஆசிரியர்.

பிரபாகர மதத்தார் உயிரானது அறிவு, கெட்டு, மண்போல, கல் போலக் கிடந்தால் முத்தி கிடைக்கும் என்பர்.[71] இதனை மறுப்பார் ஆசிரியர்.

அறிவு கெட்டு முத்தி கிடைப்பதாயின் மூர்ச்சித்து அறிவிழந்தாரும் முத்தி அடையவேண்டும். மேலும் உயிர் வடிவாகிய அறிவு கெட்டால் தானும் கூடக்கெடும். எனவே மண்போல, கல்போல உயிர் கிடக்கும் என்பது தவறு.

சத்தப் பிரமவாதி குடிக்குந் தன்மை உடைய பால், உண்ணும் தன்மை உடைய தயிராய்த் திரிவதைப் போல், அருவாகிய சத்தம் உருவமுடைய உலகமாய்த் திரிந்து வரும் என்பர்.[72]

இதனை அவர்கள் கருத்துக் கொண்டே ஆசிரியர் மறுப்பார். சத்தப் பிரமவாதிகள் சத்தம் மயக்கத்தால் உலகமாகிக் காட்சி தருகிறது. எனவே சத்தமே உண்மை என்று கூறுவார்கள். அதன்படி பார்த்தால் பால் தயிரானபின் மீண்டும் பாலாக வேண்டும். அது பாலாவதில்லை. தயிராகவே கெடும். அது போலச் சத்தம் உலகமாகி, உலகமாகவே அழியுமே தவிர மீண்டும் உலகம் சத்தம் ஆகாது. இங்கு அவர்கள் கருத்து முரண் படுகிறது. எனவே இவ்வுவமை பொருந்தாது என்கிறார்.

மாயாவாதிகள் கிரணங்களை உடைய சூரியன் பல குடங்களில் உள்ள நீரில் தோன்றுவது போல, இறைவன் உலகில் உயிராகத் தோன்றுகிறான் என்பர். இவ்வுவமையும் மறுக்கப் படுகிறது. பாத்திர நீர் நிழலில் இருந்தால் அதில் சூரியன் தெரியாது. அதுபோல இறை இல்லாத உடம்பும் இருத்தல் வேண்டும். அவ்வாறு இல்லையே. மேலும் பாத்திர நீரில் சூரியனைக் காணுகின்ற உயிர் உண்டு என்பது பெறப்பட்டு - அவர்கள் உவமையாலே - உயிர் இல்லை என்ற அவர்கள் கொள்கை மறுக்கப் பெறுகிறது என்ற உவமையைப் பொருந்தாது ஆக்குகின்றார் ஆசிரியர்.[73]

மேலும் இம்மதத்தாரின் ஒளியும் - மணியும் போல இறையும் - உயிரும் ஒன்றாக இருக்கும் என்ற உவமையும், இரவில் கயிற்றைப் பாம்பு என்று மயங்கி நினைப்பது போலப் பொய்யான உலகைமெய்யாக நினைக்கின்றோம் என்ற உவமையும், சிலம்பியிலிருந்து நூல் தோன்றுவது போலப் பிரமத்திலிருந்து உலகம் தோன்றுகிறது என்ற உவமையும் ஆசிரியரால் மறுக்கப்படுகின்றன. முதல் உவமை பொன், குணி, ஒளி - குணம் என்று கூறப்பெற்று மறுக்கப் படுகிறது.[74] இரண்டாவது உவமை அவ்வாறு மயங்குவதால் உயிராக இருக்கும் இறைக்குக் குறைவு ஏற்படும் என்று கூறி மறுக்கப் படுகிறது.[75] மூன்றாவது உவமை சிலந்திக்கு உயிர் என்ற வினைமுதற் காரணம் நூல் தோன்றக் காரணமாகிறது. அதுபோல உலகுக்கு வினைமுதற் காரணமாகிய இறைவன் உண்டு எனப்பட்டுக் கொள்கை மாறுபடுகின்றது என்று கூறி மறுக்கப்படுகிறது.[76]

பாற்கரியன் மதத்தார், உப்பானது நீரிலே கூடி நிற்கும் தன்மை போலப் பிரமம் சடப்பொருள்களில் கூடி நிற்கும் என்று கூறுவர். இதனை மண்ணிலிருக்கும் சாரத்தை நீர் ஏற்று உப்பாகிறது

என்பதல்லாமல், உப்பு என்பது தனி ஒரு பொருள் அல்ல என்று கூறி மறுப்பார் ஆசிரியர். மேலும் இம்மதத்தார் வித்திலிருந்து மரம் தோன்றுவது போல, இறைவனிடத்திலிருந்து உலகம் தோன்றுகிறது என்பர். இதனை மரம் மீண்டும் வித்தைத் தோற்றுவிப்பது போல, உலகம் இறைவனை மீண்டும் தோற்றுவிக்கும் என்பது பெறப்பட்டுக் கொள்கை முரண்பாடாகும் என்று கூறி மறுக்கிறார் ஆசிரியர்.[77]

இவ்வாறு பிறமத மறுப்புகளில் அவரவர் உவமைகளைப் பொருத்தமில்லை என்று எடுத்துக் கூறுவது அருணந்தி சிவாசாரியாரின் மறுப்பு உத்திகளில் ஒன்றாகக் காணப்பெறுகிறது.

## உத்தி 2

உவமைகளை மறுப்பதோடு நின்றுவிடாமல் அவ்வுவமைகளைச் சைவ சித்தாந்தக் கருத்துகளுக்கு உரித்தாக்கிக் கொள்வது என்பதும் ஆசிரியர் பால் காணப்பெறுகின்ற மற்றொரு உத்தியாகும் பிறமதத்தார் தத்தம் கருத்துக்களுக்குக் காட்டுகின்ற உவமையை, அவர்களுக்குப் பொருந்தாது என்று கூறிச் சைவ சித்தாந்தக் கருத்திற்கே அவை ஏற்புடையன என வாதிக்கும் ஆசிரியரின் திறம் சிறப்புடையதாகும்.

உலகாயதர் இறைவன் என்பவன் இல்லை என்று கூறி ஐம்பூதங்களின் கூட்டம் தான் உலகாக உருவாகிறது என்ற கொள்கையினை உடையவர்கள். இத்தகைய கருத்தை வலியுறுத்த

*"வைத்துறு கடாதி பல மண்ணில் வருமா போல்"* 14

*"இத்தில் வரு நீரினில் எழுங் குமிழியொத்தோர்"* 14

என்ற உவமைகளும்,

வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு இவற்றின் கூட்டுறவால் சிவப்புத் தோன்றுவது போல (பா : 38) என்ற உவமையும் உலகாயதரால் பயன்படுத்தப் பெறுகின்றன.

இந்த மூன்று உவமைகளையும் ஏற்றுக்கொண்ட ஆசிரியர் "மண்ணில் கடம் தோன்றிடக் குயவன் வேண்டும் (பா : 36), நீரில் குமிழி தோன்றிடக் காற்று வேண்டும் (பா : 36) வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு கூட்டிட ஒருவன் வேண்டும் (பா : 38) என்பதால் உலகைத் தோற்றவும் ஒருவன் வேண்டும்," என்று உலகாயதரின் கருத்தை மறுத்துச் சைவ சித்தாந்தக் கருத்தான "அவன் அவள் அது என மூவினமையால் தோற்றிய திதி"[78] என்ற கடவுட் கொள்கையை நிலை நாட்டுகிறார்.

சௌத்திராந்திகர், மருந்தெண்ணெயில் மருந்து தோன்றாமல், கரைந்து நுட்பமாகக் கலந்திருந்து நன்மையைத் தரும். அது போல, பூத உருவும் நுண்ணுருவு உடையதாய் உலகில் கலந்திருக்கும் என்பர் (பா : 112)

இதனை ஏற்று மருந்தையும், எண்ணெயையும் கூட்டும் முறையில், கூட்டிட மருத்துவன் ஒருவன் வேண்டும். அவை தானே கூடாது. எனவே பூத உருவையும், உலக உருவையும் கூட்டியுண்டாக்கும் ஒரு முதல்வன் வேண்டும் என்ற சைவ சித்தாந்தக் கருத்தை அவ் உவமையின் மூலம் வலியுறுத்தி விடுகிறார்.

நிகண்டவாதிச் சமயத்தார் விரைந்து செல்லும் அம்பு, இலக்கில் தப்பாமல் படுவதுபோல், ஒருவன் செய்த புண்ணிய பாவங்களும் தப்பாமல் செய்தவனைச் சென்று பற்றும் என்பர்.

இவ்வுவமையினையும் முன்னர் மறுத்திருப்பது போலவே அம்பு எய்ய ஒரு வில்லி வேண்டும் (பா :158), அதுபோலப் பாவ, புண்ணியப் பயன் கூட்ட இறைவன் வேண்டும் என்று கூறி,

*"அவையே தானே யாய் இருவினையில்*
*போக்கு வரவு புரிய ஆணையின்*
*நீக்கம் இன்றி நிற்கும் அன்றே"*[79]

என்ற சைவ தத்துவக் கொள்கையைப் பிறர் மத உவமையால் நிறுவுகிறார்.

பட்டாச்சாரியர், மாலையில் உள்ள பூவும் அதன் மணமும் முன்பு இருந்து பின் மாலையாகக் கூடியது போல (196) சத்தமும் பொருளும் கூடி வேதம் ஆயிற்று என்பர். இதனையும் முன்னவை போல் மாலையாகக் கூட்ட ஒருவன் வேண்டுவது போல வேதம் ஒருவனால் உண்டாக்கப் பெற்றது என்று சைவ தத்துவத்திற்கு உரிய உவமையாக்குகிறார் ஆசிரியர்.

மாயாவாதி, பலநிற மணிகள் ஒரு கயிற்றில் கோர்க்கப்பட்டது போல உலகில் தோன்றும் பல வடிவபேதங்கள் இறைவனில் கூடி நிற்கின்றன என்று உவமையால் வற்புறுத்துவர். இவ்வுவமையால் உருவமாய் இறை உள்ளது என்பது அவர்கள் நிறுவும் கருத்து. இவ்வுவமையினை ஏற்று, மணிகள் பேதப்படுவது போல உலகமும் பேதப்படுகிறது. நூல்போல் இறை பேதப்படுவதில்லை என்று விளக்கம் கூறி "அவையே தானே ஆய்" என்ற சைவ தத்துவக் கொள்கைக்கு ஏற்புடையது ஆக்குகிறார்.

இவ்வாறு பிறமத உவமைகளைத்தன்மத விளக்கத்திற்கு ஏற்புடையதாக்கி, அதன் மூலம் பிறமதத்தை மறுக்கும் உத்தி ஆசிரியரிடம் காணப்பெறுகின்றது.

**உத்தி 3**

பிறர் மதக் கொள்கைகளை மறுக்கும் போது அவர்களின் கொள்கையை நகையாடிட, உவமைகளைப் பயன் படுத்தும் பாங்கும் ஆசிரியர் பால் காணப் பெறுகிறது.

காட்சி அளவையை ஏற்கும் உலகாயதரை மறுத்து, கருதல் அளவையினை உறுதிப் படுத்த,

*"பிள்ளையாய் வளர்கின்ற நாளுனைப் பெற்ற தாயொடு தந்தையைக்*
*கள்ளமேபுரி காலனாருயி ருண்ண வின்றொரு காளையாய்*
*மெள்ளவே யுளரென்று கொண்டு விரும்புமாறு விளம்பிடே"*

(பா : 32)

என்று கூறியுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கது.

அதுபோல மகளிர் பால் இன்பம் நுகர்வதைக் குறிக்கோளாய்க் கொண்டே உலகாயதரை மறுக்கும் போது,

*"அசுத்தமேவி அளைந்து தின்றே சுகித்தன வாயிடும்"* (பா : 59) என்று பன்றிகள் மலத்தில் புக்கு வாழ்வதைக் கூறி நகையாடுகிறார்.

சௌத்திராந்திகன் கூறுகின்ற பிடகநூல் பற்றிக் கூறும் போது அப்பிடக நூலை, கண்கழுவாமல் சூரியன் உதிக்கு முன்னமேயே புலாலுடன் உண்ணும் சாப்பாட்டு விழைவினால் சொல்லப்பட்டது என்று கூறி, நகையாடுவதும் இங்குக் குறிப்பிடத் தக்கது. (பா : 102)

நிகண்டவாதி உடம்பு வருந்துதலே மோட்சம் என்பார். அப்படியானால் வீடுபெற நிகண்டவாதியை மூக்கை அறுத்துக் கொள்ளச் சொல்கிறார். (பா : 161)

பட்டாச்சாரியின் ஏதாவது ஒரு உருவைப்பற்றி நின்று ஒலியானது வேதமாக வரும் என்று கூறுவர். எனவே அவ்வாறு கொண்டால் தவளையிடத்து உண்டாகும் சத்தமும் வேதமாகும் என்று நகையாடுகிறார். (பா : 195)

சத்தப் பிரமவாதி சத்தமே பொருள் என்பான். இதனை மறுக்கும்பொழுது நகையாடி மறுக்கிறார்.

பாஞ்சராத்திர மத மறுதலை முழுமையும் தசாவதாரத்தை நகயைாடுவதாகவே உள்ளது. இவ்வாறு பிறமதக் கருத்துகளை மறுப்பதோடு மட்டுமல்லாமல் பிறமதக் கொள்கைகளை நகையாடுவதும் அவரின் உத்தியாகக் காணப் பெறுகிறது.

**முடிவுரை**

மக்களின் உணர்வில் இறை உணர்வை உண்டாக்கிட இசைப் பாடல்கள் எவ்வாறு பயன்பட்டனவோ, அதுபோல இறைத் தத்துவங்களைப் பரப்பிடப் பாவகைகளை அருணந்தி சிவாசாரியார் கையாண்டுள்ளார் என்பது பெறப்படுகிறது.

சமயப் போராட்டக் காலத்தில், தாம்வாழ்ந்தமையால் அக்காலக் கட்டத்திற்கேற்ப விவாத நடையில் தம் நூல்களை ஆசிரியர் படைத்துள்ளமை குறிப்பிடத் தக்கதாக அமைகிறது.

இலக்கிய உத்தியுள்ள உணர்வைத் தம்நூல்களில் கையாண்டு தத்துவ நூலையும் சிறந்த இலக்கிய நூலாகக் காணலாம் என்பதை உணர்த்திக் காட்டியுள்ள அருணந்தி சிவாசாரியாரின் திறன் போற்றுவதற்குரியதாக அமைகின்றது.

# 6. நூல்கள் தந்திடும் சமய நெறி

முன்னுரை: வழிபாடு - வழிபாடு அரன் பணியாகும் - வழிபாட்டின் பயன் - வேறுசில வழிபாட்டு முறைகள் - அடியார் வழிபாடு ; சிவபெருமானின் திருமேனிகள் - உருவத் திருமேனி - அருவ, அருவுருவத் திருமேனிகள் ; முத்திநிலை - முத்தி அடைவதற்குரிய வழிகள்; சமய நெறியில் சமுதாயம் - சமுதாய நிலை - சமுதாயக் கோட்பாடுகள் - சமுதாய உயர்வுக்குரிய வழிகள் - முடிவுரை.

## முன்னுரை

"திருக்கோயில்கள், மடாலயங்கள் பக்தியை வளர்க்கின்றன. பக்தி வளர வளரப் பண்பாடு வளர்கிறது. மக்களுக்கு அறிவு வளரும் பொழுதே பண்பாடும் வளர வேண்டும் என்பதால் கல்வி நிலையங்கள் அறிவை வளர்க்கின்றன. திருக்கோயில்கள், மடாலயங்கள் பண்பை வளர்க்கின்றன," எனபர்.[1] திருக்கோயில்களும், மடாலயங்களும் சமய வழிபாடுகள் மூலம் அப் பண்பாட்டை வளர்க்கின்றன. சமய வழிபாடுகள் உலகில் காணப்பெறும் சமயங்களுக்கேற்ப மாற்றங்களைப் பெற்று விளங்குகின்றன. சமயங்கள் தோறும் காணப்பெறுகின்ற வழிபாடுகளை இரு வகையில் அடைக்கலாம். உருவ வழிபாடு - அருவ வழிபாடு என்பனவாக அவ்விரு வகைகளைக் கொள்ளலாம். உலக அரங்கில் இந்து சமயம் உருவ வழிபாட்டைக் கொண்டதாகும். இந்து சமயத்தின் ஒரு பிரிவான சைவ சமயம் உருவ வழிபாட்டைப் பெரிதும் பேணி வருகிறது. அதே நேரத்தில் அருவுருவ வழிபாட்டையும் ஒரு சிறிது தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. அதாவது இலிங்க வடிவம் அருவுருவத்தைக் குறிப்பதாகும். இத்தகைய உருவ வழிபாட்டையும், அருவ வழிபாட்டையும் அடிப்படையாகப் பெற்ற சைவ சமயத்திற்குத் தத்துவப் பொருள் பொதிந்த வழிபாட்டு முறையை அருணந்தி சிவாசாரியார் நூல்கள் நன்கு விளக்குகின்றன.

### வழிபாடு

சைவ சமய உணர்வில் மிகவும் இன்றியமையாதது வழிபாடாகும். வழிபாட்டு முறை இன்றியமையாததைத் திருமூலர் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

*"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு*
*அண்ணல் அதுகண்டு அருள் செய்யா நிற்கும்*
*எண்ணிலி பாவிகம் எம்இறை ஈசனை*
*நண்ணல் செல்லாது நழுவுகின் றார்களே "*[2]

என்பது அவர் பாடல். இப்பாட்டின் மூலம் சிவவழிபாடு செய்வது புண்ணியமாகும் என்று குறிப்பிடுகின்றார் திருமூலர். பண்டு தொட்டு இப்புண்ணிய வழிபாட்டு முறைகள் தமிழகத்தில் இருந்தன என்பதைச் "சிறப்பொடு பூசனை செல்லாது"[3] என்ற திருவள்ளுவரின் வாக்கிலிருந்து அறியலாம், "சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்"[4] என்று திருமுறையும் பூசனையைக் குறிக்கும். இத்தகைய பூசனை முறைகளாம் வழிபாட்டு முறைகளை அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன. சித்தியார் சுபக்கம் பூசனையை இரண்டு வகையாகப் பிரிக்கின்றது. அகப் பூசனை என்றும், புறப் பூசனை என்றும் அவ்விரு வகைகள் கூறப்பெறுகின்றன. அகப்பூசனையை அந்தரியாகம் என்ற வடசொல்லால் சிவஞான சித்தியார் குறிப்பிடுகிறது.

அகப்பூசனை செய்யும் முறையைக் கீழ்க்கண்ட பாடல் குறிப்பிடுகிறது.

*"நாட்டும்இத யத்தானும் - நாபியினில் அடியாய்*
*ஞாலம், முதல் தத்துவத்தால் எண்விரல் நாளத்தாய்,*
*மூட்டுமோ கிநிசுத்த சிந்தைமலர் எட்டாய்*
*முழுஇதழ்எட்டு அக்கரங்கள் முறைமையினில் உடைத்தாய்-*
*காட்டு, கம வாசனைமேல் ; ஈசர், சதா சிவனும்,*
*கலாமூர்த்த மாம், இவற்றின் கண்ணாகும் சத்தி*
*வீட்டைஅருள் சிவன்மூர்த்தி மானாகி, சத்தி*
*மேலாகி, நிற்பன், இந்த விளைவறிந்து போற்றே "*

(சுப : 300)

இப்பாடல் இறைவனை மனத்தகத்தே இருத்தி (சிவோகம் பாவனை செய்து) திரு அஞ்செழுத்தால் பூசித்து, தியானத்தைக் (நிஷ்டையைக்) கைக்கொண்டு செய்யக் கூடிய அந்தரியாகம் அகப்பூசனையாக அமைந்து அண்டத்தில் இருந்தவாறே, ஆலயத்திலும், உடலிலும் நிறைந்து நிற்கும் இறைவனை, இதயக் கமலாமாகிய ஆசனத்து அமைத்து, மூர்த்தியை வணங்குவது என்று

விளக்கம் தருகிறது. அதாவது இறைவனை, உள்ளப் பெருங்கோயிலில் ஊனுடம்பு அகிய ஆலயத்தில் கொண்டு வணங்குகின்ற முறையைக் குறிப்பிடுகிறது எனலாம். இந்த அக வழிபாட்டை (அந்தரிய யாகத்தை) எப்படிச் செய்வது என்பதையும் பாடல் விளக்குகிறது. வாசனைப் பொருள்கள், மலர், நறும்புகை, தீபம், அபிடேகப் பொருள்கள், திருவமுது முதலிய பூசனைப் பொருள்களை எல்லாம் மனதிலே முதலில் கற்பித்துக் கொள்ள வேண்டும். பின்னர் இறைவனைச் சிந்தை தனில் வைத்துப் பூசித்து, அவ் அருள்வழி நின்று, மீண்டும் மீண்டும் தியானிக்க வேண்டும். அவ்வாறு தியானித்தால் கண்ணாடியைத் துடைக்க, அதிலுள்ள மாசு நீங்கி ஒளி மேலிட்டு வருவது போலச் சிவனும் ஆன்மாவின் கண் பொருந்தி மேலிட்டு வந்து விளங்கித் தோன்றுவான் என்று குறிப்பிட்டு (பா:301) அகப்பூசனை முறையைச் சுபக்கம் தெளிவு படுத்துகிறது.

அகப்பூசனைக்கு மறுதலையான புறப்பூசனையையும் சித்தியார் குறிப்பிடுகிறது. புறத்தே இறைவனுடைய திருவடிகளைப் பூசனை செய்யவேண்டுமானால் தான் வருந்துதலும், பிறரை வருத்துதலுமின்றி, மரத்தின் கீழ் உதிர்ந்த பூக்களும், ஆறு, குளம் முதலியவற்றில் உள்ள நீரும், யாசகம் இன்றி வந்த அமுதும் கொண்டு திருக்கோயிலில் உள்ள சிவ வடிவத்தை வணங்கி, அம் முதல்வனின் திருவடிகளை வழிபடல் வேண்டும். மேலும் தம்மால் விளையும், புண்ணிய பாவங்களுக்கு யாம் என் செய்யக் கடவேம் எனச் சிந்தித்தலும், வேற்றுமை இன்றி எவ்விடத்தும் சிவனையே பார்க்கும் தன்மையாராதலும் வேண்டும். இவ்வாறு புறத்தே வழிபடுதலைப் புறப்பூசனை என்று சித்தியார் குறிப்பிடுகின்றது.

"புறம்பேயும், அரன்கழல்கள் பூசிக்க வேண்டில்,
பூமரத்தின் கீழ்உதிர்ந்த போதுகளும் கொண்டு,
சிறந்துஆருஞ் சீர்ச்சிவனை ஞானத்தால், அங்குச்
சிந்திக்கும் படிஇங்குச் சிந்தித்து, போற்றி
அறம்பாவங்க கட்குநாம் என்கடவேம் என்றும்
ஆண்டவனைக் கண்டக்கால், அகம்புறம் என் னாதே
திறம்பாதே பணிசெய்து நிற்கை அன்றோ
சீர்அடியார் தம்முடைய செய்தி தானே ? " (பா:302)

என்பது மேற்கூறப்பெற்ற கருத்துக்குரிய பாடலாகும். இக்கருத்தோடு மணிவாசகரின் "நன்றே செய்வாய், பிழை செய்வாய், நானோ இதற்கு நாயகமே"[5] என்ற வாக்கு ஒப்பிடத் தக்கதாகும்.

இவ்வாறு அகப்பூசனையையும், புறப்பூசனையையும் விளக்கிக் காட்டிய சித்தியார் இரண்டு பூசனை முறைகளில் அகப்பூசனையே சிறப்புடையதென்று வலியுறுத்தவும் செய்கிறது விறகின் கண் தீயும், பாலின் கண் நெய்யும், பழத்தின் கண் சுவையும், எள்ளின் கண் எண்ணெயும் போல முதல்வன் எங்கும் உயிர்களின் பக்குவத்திற்கேற்பத் தோன்றியும், தோன்றாமலும், உடனாயும் நிற்பான். ஆதலால் மலப் பிணியைத் தவிர்க்க விரும்புவோர் அகப்பூசைனையே செய்யவேண்டும். அவ்வாறு செய்தால் மறைந்து நிற்கும் இறைவன் வெளிப்பட்டு உயிரின் உள்ளே தோன்றித் தீயானது தன் கண் அடைந்த இரும்பை மாசு நீக்கித் தன் வண்ணமாக ஆக்குதல்போல் காப்பான் என்று கூறி அகப் பூசனையை வலியுறுத்துகின்றார்.

*"இந்தனத்தின் எரி, பாலின் நெய், பழத்தின் இரதம்*
*எள்ளின்கண் எண்ணெயும் போல் எங்கும் உளன்இறைவன்*
*வந்தனைசெய்து எவ்விடத்தும் வழிபடவே அருளும் ;*
*மலம்அறுப்போர், ஆன்மாவில், மலர்அடிஞா னத்தால்*
*சிந்தனைசெய்து அர்ச்சிக்க ; சிவன், உளத்தே தோன்றி*
*தீஇரும்பைச் செய்வதுபோல், சீவன் தன்னைப்*
*பந்தனையை அறுத்துதா னாக்கித்தன் உருவப்*
*பரப்பெல்லாம் கொடுபோந்து, பதிப்பன், இவன் பாலே"*

(பா : 303)

என்பது பாடல். இப்பாடலில் நான்கு உவமைகள் பயன்படுத்தப் பெறுகின்றன. இந்நான்கும் முதல்வன் உலகப் பொருள்களில் பொருந்தி நிற்பதற்கு உவமைகளாகும். விறகில் தீ, உலகோர்க்குச் சிறிதும் தோன்றாது மறைந்து நிற்பதற்கு உவமையாகும். பாலில் நெய் மந்ததரப் பக்குவர்குச் சிறிது தோன்றியும், தோன்றாமலும் உடன் நிற்றற்கு உவமையாகும். பழத்தில் சுவை மந்தப் பக்குவர்க்கு உய்த்துவரும் வழி விளங்கித் தோன்றுதற்கு உவமையாகும். எள்ளின் எண்ணெய் தீவிரப் பக்குவர்க்கு உவமையாகும். இத்தகைய நால்வரும்

அகப்பூசனை செய்து இறைவனை வழிபட்டால் வீடுபெறலாம் என்று இப்பாடல் குறிப்பிடுகிறது. எனவே நூலாசிரியருக்கு அகப்பூசனையில் நாட்டம் பெரிதும் இருந்தமை புலப்படுகிறது.

**வழிபாடு அரன் பணியாகும்**

வழிபாடு செய்கின்ற பொழுது எவ்வாறு வழிபாடு செய்யவேண்டும் என்பதையும் சித்தியார் குறிப்பிடுகிறது. இன்றைய மக்களிடத்தே காணப்பெறும் ஆரவார வழிபாட்டிற்கு ஒரு மாற்றமாக - சிறந்த வழிபாட்டு முறையைக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது எனலாம். தனது கருத்துக்கு இயைந்த கடவுளை மனத்தால் நினைந்து, வாக்கால் துதித்து, மந்திரங்களை உச்சரித்து, கைகளால் இனமாகிய மலர்களை எடுத்து அர்ச்சித்து, வணங்கிச், சினம் முதலியவற்றை அகற்றி வாழ்வது அறமானால் யாவர்க்கும் இறைவனாகிய சிவன் முன்னின்று பயன் அளிப்பான் என்று கூறுகின்றது. இப்பாடல் மூலம் இறைவனிடத்து ஒன்றி நின்று பூசை செய்வதே சிறப்பு என்பதை உணரலாம். இறைவனை வழிபடும் முறையில் மிகவும் குறிப்பிடத் தக்க பாடலாக இப்பாடல் அமைந்துள்ளது. (பாடல்:114)

இறைவனின் பூசனை முறையை வலியுறுத்திய சித்தியாரில் வழிபாடு செய்வதற்காகவே மனிதப் பிறவி கொடுக்கப் பெற்றது என்பது குறிக்கப் பெற்று அதன் மூலம் பூசனையும் வலியுறுத்தப்படுகிறது.

*"மானுடப் பிறவி தானும்*
*வகுத்தது, மனவாக் காயம்,*
*ஆனிடத்து ஐந்தும் ஆடும்*
*அரன்பணிக் காக அன்றோ ?*
*வானிடத் தவரும் மண்மேல்*
*வந்து, அரன் தனைஅர்ச் சிப்பர் ;*
*ஊன்எடுத்து உழலும் ஊமர்*
*ஒன்றையும் உணரார், அந்தோ!"* (பா : 182)

இப்பாடல் பூசனை என்பது சிவபெருமானுக்கு ஆன்மா செய்யும் பலியாகக் குறிப்பிடுகிறது. இப்பாடலோடு,

*"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்*
*தாழ்த்த சென்னியும் தந்த தலைவனைச்*
*சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே*
*வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே"*[6]

என்ற அப்பர் பாடலை ஒப்பிடலாம். இவ்விரு பாடல்களின் மூலமாக இறைவன் ஆன்மாக்களுக்கு அளித்துள்ள கருவி, கரணங்களைக் கொண்டு அப்பெருமானோடு தொடர்பு கொண்டு விளக்கம் பெறுதலே சிவபூசனை என்பது பெறப்படுகிறது.

**வழிபாட்டின் பயன்**

அகப்பூசனையாலோ, புறப்பூசனையாலோ வழிபட்டால் இறைவன் மலம் அகற்றிப் பிறவி நோய் தீர்ப்பான் என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாகும். வழிபாடு இத்தகைய பலனைத் தரும் என்பதைச் சித்தியாரின் பல பாடல்கள் உணர்த்துகின்றன. மேலும் இறைவனும் இரண்டு நிலையில் நின்று அப்பூசனையை ஏற்கின்றான் என்றும் அவை குறிப்பிடுகின்றன.

*"தாபர சங்க மங்கள்*
*என்றுஇரண்டு உருவில் நின்று,*
*மாபரன், பூசை கொண்டு*
*மன்னுயிர்கது அருளை வைப்பன்,*
*நீவரன் தன்னை நெஞ்சில்*
*நினைவையேல், நிறைத்த பூசை ;*
*ஆய், பரம் பொருளை நாளும்*
*அர்ச்சி, நீ, அன்பு செய்தே "* (பா : 118)

இப்பாடலில் சிவபெருமான், உயிர்கள் பத்தியோடு செய்யும் பூசனையை ஏற்று, நிலைபெற்ற உயிர்களுக்கு அருள் செய்வான் என்பது கூறப்பெற்றுள்ளது. மேலும் பூசனையைச் சிவலிங்கம், சிவனடியார் என்று சொல்லப்பட்ட இருதிருமேனிகளையும் ஆதாரமாகக் கொண்டு இறைவன் ஏற்பன் என்றும் கூறப்பெற்றுள்ளது.

சித்தியாரின் பரபக்கத்தில் சௌத்திராந்திகன் மதத்தை மறுத்த ஆசிரியர், இறுதியில் சிவனை வழிபட்டால் பிறவியாகிய துன்பம் வாராது என்பதனை விளக்குவதையும் இங்குக் குறிப்பிடலாம்.

*"மானாதி கரணங்கள் எல்லாம் அடக்கித் தன்னை*
*வழிபடுதல் வறிவருளி மாக்கருணைக் கையால்*
*இனாதபிறப் பினில் நின்றுஎடுத்து மாறா*
*இன்பமுத்திக்கே வைப்பன் எங்கள் முத்தியிதுவே*
(பர-பா : 134)

என்பது பாடற் பகுதியாகும். இவ்வாறு அகப்பூசையையும், புறப்பூசனையும் சுட்டிக் காட்டி அவற்றுள் அகப்பூசனையே சிறப்புடைத்து என்று விளக்குகிறார். இவற்றால் பிறவிப் பிணி நீங்கும் என்பதையும் அவர் விளக்குகிறார்.

## வேறு சில வழிபாட்டு முறைகள்

சித்தியாரின் இருபகுதிகளும் அருணந்தி சிவாசாரியார் வலியுறுத்தும் இருவகைப் பூசனைகளைக் கூறுவதுடன் ஐந்தெழுத்தைக் கூறி வழிபடும் வழிபாட்டையும், குரு வழிபாட்டையும், வேதநூல் வழிபாட்டையும் ஆங்காங்குக் குறிப்பிடவும் செய்கின்றன. ஐந்தெழுத்து விதிப்படி உச்சரித்து வழிபட்டால் இறைவன் அருள் கிடைக்கும் என்பதையும் ஓர் பாடல் குறிப்பிடுகிறது. திருவஞ்செழுத்தினாலே சிவன் ஆன்மாவை உடையான் என்பதையும், திருவஞ்செழுத்தினாற் சிவனது உருவ, அருவ, அருவுருவத்திருமேனிகள் அமைந்தன என்பதையும் உணர்ந்து இருதயத்தில் (ஆன்மாவில்) இறைவனை ஐந்தெழுத்தால் பூசித்தால் இறையருள் கிட்டும் என்பது அப்பாடலின் பொருள்.

*"அஞ்செழுத்தால், ஆன்மாவை அரனுடைய பரிசும்,*
*அரன்உருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு,*
*அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி*
*ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத்து அர்ச்சித்து,*
*அஞ்செழுத்தால் குண்டலியின் அனலை ஓம்பி,*
*அணைவ அரிய கோதண்டம் அணைந்து, அருளின் வழிநின்று*

*அஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்க, மதி அருக்கன்*
*அணைஅரவம் போல் தோன்றும், ஆன்மாவில் அரனே.*

(பா :299)

ஐந்தெழுத்து மந்திர வழிபாடு போல ஆகமங்களை வழிபடுதலையும் சித்தியார் குறிக்கிறது. வேதம், ஆகமம் என நூல்கள் இரண்டாகும். ஏனைய நூல்கள் அவற்றிலிருந்து விரிந்த நூல்களாகும். வேத ஆகமத்தில் வேதம் பொதுநூல். ஆகமம் சிறப்புநூல் ஆகும். இவைகள் உலகத்தவர்க்கும், அணைந்தோர் தன்மையினர்க்கும் (சத்திநிபாதர்க்கும்) இறைவனால் தரப்பெற்றன, இவை கூறிய நெறிப்படி நடந்து இறையருள் பெற வேண்டும் என்பதைப் பாடல்கள் தெரிவிக்கின்றன. (பா : 265, 268) இவ்வாறு வேத ஆகமங்கள் கூறும் வழியில் நிற்பது சிவனை வழிபடுவது போன்றதாகும்.

இருபா இருபஃதின் இறுதியில் குரு வழிபாடு கூறப்பெற்றுள்ளது. அத்துடன் தனக்குத் தன் ஞான ஆசிரியர் மெய்கண்டார் ஞானகுருவாக எழுந்தருளி ஞானம் அருளியதை மனதிற் கொண்டு, குரு வழிபாட்டுப் பெருமையை அருணந்தி சிவாசாரியார் சித்தியாரின் சுபக்கத்தின் இறுதிப் பகுதியிலும் அமைத்துள்ளார்.

1. ஒவ்வொருவரும் தன் ஞான குருவை முதல்வனாகக் கொண்டு வழிபடல் வேண்டும் என்பது குருவழிபாட்டின் முதன்மைக் கருத்தாகும். (பா : 326) அருணந்தி சிவாசாரியார் மெய்கண்டாரை முதல்வனாகவே எண்ணி வழிபட்டமை,

*"கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி*
*மண்ணிடையில் மாக்கள் மலமகற்றும் வெண்ணெய்நல்லூர்"*

(இரு.இரு. பா : 1)

என்ற இருபா இருபஃது பாடற்பகுதியால் அறியலாம்.

2. குரு வழிபாட்டால் தான் திருவடி ஞானம் கிடைத்திடும். எனவே குரு யாவர்க்கும் இன்றியமையாது வேண்டப்படுவர் என்பதையும் சுபக்கம் உணர்த்துகிறது. (பாடல் : 327)

3. சொரூபம், சுத்தம், இலயம், மோகம், அதிகாரம் என்னும் ஐவகையானும் அறியக் கிடந்த முதல்வனே குருமூர்த்தமாம் எனக் கொண்டு, ஞான குருவை வழிபட்டு ஒழுக வேண்டும், முதல்வனே அக் குருமூர்த்தியை ஏற்படுத்தி திருக்கண் நோக்கு ஆதியாகிய தீக்கையால் மலமகற்றித் தானருள்வான். (பா : 328) என்று குறிப்பிட்டுக் குரு வழிபாட்டைச் சித்தியார் வற்புறுத்துகிறது.

**சிவனடியார்கள் வழிபாடு**

அருணந்தி சிவாசாரியார் கூறுகின்ற சிவவழிபாட்டு முறைகளில் ஒன்று சிவனடியார் வழிபாடாகும். சிவஞான போதத்தின் 12 ஆம் சூத்திரம் :

*"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா*
*அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ*
*மாலற நேயம் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே "*

என்பதாகும். இச்சூத்திரத்திற்கு விரிவாகச் சிவஞான சித்தியாரின் 12ஆம் சூத்திரத்தை ஆசிரியர் அமைக்கும் பொழுது அடியார்களின் பெருமைகளை விளக்கியும், அடியார்களுக்குச் செய்ய வேண்டிய தொண்டுகளையும், அதனால் ஏற்படுகின்ற பயன்களையும் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். சிவனடியார்களைச் சங்கம சேவைக்கு உரியவர்கள் என்று குறிப்பிட்டு அவர்தம் பெருமைகளைக் கீழ்வரும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

*"அறிவுஅரியான் தனைஅறிய, யாக்கை ஆக்கி,*
*அங்குஅங்கே உயிர்க்குயிராய் அறிவுகொடுத்து, அருளால்*
*செறிதலினால், திருவேடம் சிவன்உருவே ஆகும்*
*சிவோகம்பா விக்கும் அத்தால், சிவனும் ஆவர் ;*
*குறியதனால் இதயத்தே அரனைக் கூடும்*
*கொள்கையினால் அரன்ஆவர் ; குறியொடுதாம் அழியும்,*
*நெறியதனால், சிவமேயாய் நின்றிடுவர் என்றால்*
*நேசத்தால் தொழுதிடு நீ, பாசத்தார் விடவே."* (பா:324)

இப்பாடலில் சிவனடியார் வேடத்தை இறைவன் தன்னை வழிபடுவதற்காகவே ஆக்கினான் என்று குறித்திருப்பது மிகவும் சிறப்புடைத்தாகும். யாராலும் அறிய முடியாதவன் தன்னை அறிவதற்காகத்தான் அச்சிவ வடிவத்தை ஆக்கினான் என்பது அருணந்தி சிவாசாரியாரின் முடிபாகும். சிவன்வேறு, சிவனடியார்வேறு, சிவவடிவம் வேறு அல்ல என்பதைப் பாடலின் திருவேடம் சிவன்உருவே ஆகும் என்ற பகுதி குறிப்பிடுகிறது.

*"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரு மறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்,*
*அன்பே சிவமா யமர்ந்திருந்தாரே "*

என்ற திருமந்திரப் பாடல் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

அவ்வாறு கூறுவதற்குரிய காரணத்தையும் ஆசிரியர் காட்டுகின்றார். அடியார்கள் தங்களுடைய மனத்தகத்தே சிவனையிருத்தி வழிபாடு செய்வதாலும், அருள்வழி நின்று இதயதானத்தில் சிவனை இருத்தி, வழிபட்டுத் தியானம் சாதித்தலாலும் அவர்கள் சிவனோடு ஒத்தவர்கள் என்று குறிப்பிடுகின்றார். அடியார்கள் தன்னிடத்தில் தம்மைக் காணாது இறைவனைக் காணுகின்றார்கள். எனவேதான் அவர்களை வழிபடவேண்டும் என்பது ஆசிரியரின் கருத்தாகத் தெரிகிறது. இத்தகு முறையில் அடியார்களை வழிபடுவதற்குரிய காரணங்களை ஆசிரியர் விளக்கியிருப்பது அவரின் சைவத்திறத்தை எடுத்துக் காட்டுகிறது. இத்தகைய அடியார்களை வழிபடவேண்டும். அவ்வாறு வழிபடுவதே சிறப்பு என்பதையும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

"ஈசனுக்கு அன்புஇல்லார் அடியவர்க்கு அன்புஇல்லார் ;
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்புஇல்லார் ;
பேசுவதுஏன் ? அறிவில்லாப் பிணங்களை நாம்இணங்கில்
பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர் ; விடு நீ ;
ஆசையொடும் அரன்அடியார் அடியாரை அடைந்திட்டு
அவர்கருமம் உன்கரும மாகச் செய்து
கூசிமொழிந்து, அருள்ஞானக் குறியில் நின்று
கும்பிட்டுத் திட்டமிட்டுக் கூத்தாடித் திரியே " (ப:323)

இப்பாடலில் அடியாரிடத்து அன்பில்லாதவர் நிலையை ஆசிரியர் கடுமையாகச் சாடுகிறார். அவர்கள் உயிரோடு இருந்தும் பிணத்தோடு ஒத்தவர்கள், தன்மேல் அன்பில்லாதவர்கள், பிறந்து இறந்து படும் துன்பங்களை அனுபவிப்பவர்கள் என்று குறிப்பிடுகின்றார். அடியார்களை வழிபடாதவர்கள் இத்தகைய நிலையை உடையவர்கள் என்று கூறிய ஆசிரியர், இறை அடியார்களை வழிபட்டால் என்ன பெருமை அடைவார்கள் என்பதையும் குறிப்பிடுகின்றார். பேரன்போடு இறையடியார்களை வழிபட்டால், அவர்களுக்குரிய பணிகளைச் செய்தால் முதல்வனது அருளாகிய மெய்ஞ்ஞானத்தைப் பெறலாம் என்பது ஆசிரியர் காட்டும் வழியாகும்.

இவ்வாறு வழிபாட்டு முறைகளை வகுத்துக் காட்டிப் பயனையும் சுட்டிக் காட்டி, சமய நெறியில் வழிபாட்டை இன்றியமையாததாக அருணந்தி சிவாசாரியார் நூல்கள் எடுத்தியம்புகின்றன.

2

## சிவபெருமானின் திருமேனிகள்

வழிபாட்டு முறையைச் சுட்டிக்காட்டிய அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள் வழிபடலுக்குக் குறியாக அமைந்த இறைவனின் திருமேனிகளையும் சுட்டிக் காட்டுகின்றன. இறைவனின் பொது (தடத்த) இலக்கணம் உருவம், அருவம் அருஉருவங்கள் கொண்டிருப்பதேயாகும். இத்தகைய பொது இலக்கணத்தை,

*அருவமும் உருவாரூப மானதுமன்றி நின்ற*
*உருவமும் மூன்றுஞ் சொன்ன ஒருவனுக்குள்ள வாமே "*

(பா : 83)

என்ற பாடற்பகுதி மூலம் விளக்குகிறார் ஆசிரியர்.

## உருவத் திருமேனி

இறைவன் உருவ வடிவத்தை எடுத்ததற்குக் காரணங்கள் உண்டு என்பது முதலில் விளக்கப் பெறுகிறது.

1. உயிர்களுக்கு ( போக ) இன்ப உணர்வைக் கொடுப்பதற்காக ஏற்பட்டது உமா மகேசுர வடிவம்.

2. உயிர்களுக்கு யோக முத்தியைக் கொடுப்பதற்குத் தென்முகக் கடவுள் வடிவம் கொள்ளப்பட்டது.

3. உயிர்கள் செய்த வினைகளை கொடுப்பதற்கு; கோப வடிவங்கள் எடுக்கப் பெற்றன, இவ்வாறு உயிர்களுக்கு அருளுவதற்கே இறைவன் உருவ வடிவங்களைக் கொண்டருளினான் என்று விளக்கப்படுகிறது. (பாடல் : 70)

## அருவ, அருஉருவத் திருமேனிகள்

உருவத் திருமேனி ஏற்றருளினார் என்ற அளவிலேயே உருவம் ஒடுங்குவதற்கு அருவத் திருமேனி கொள்ள வேண்டிய நிலையில் அருவத் திருமேனி ஏற்பட்டது. அருவத் திருமேனி கொண்டதற்குக் காரணமும் அதுவே ஆயிற்று. அந்த அருவம் எனப்படும் சூக்குமப் பொருள், பின் உருவம் எனப்படும் தூலநிலை அடையும்போது அருஉருவத் திருமேனி ஏற்றருள்கிறான் இறைவன். எனவே அருவமும், உருவமும் உயிர்களுக்குஅருள்புரிய எடுத்தருளிய உருவத் திருமேனிகளால் ஏற்பட்டது ஆகும் என்பது விளக்கப்படுகிறது. (சுப . பா : 75)

மேலும் இறைவன் உயிர்களின் பொருட்டு பிரமன், திருமால் வடிவங்களை ஏற்று அருளினான் என வேத ஆகமங்கள் கூறுகின்றன. அவ்வுருவங்களில் இறவைனின் சத்தி இருந்து தோற்றுவித்தல் முதலிய தொழில்களைச் செய்கின்றது என்றும் அவை விளக்கம் தருகின்றன.

இவ்வாறு வழிபாட்டிற்குரிய உருவம் முதலியன மூன்று என்று குறிப்பிட்டாலும் அருணந்தி சிவாசாரியார் உருவ வழிபாட்டையே பெரிதும் போற்றியவர் ஆவார்.

1. இருபா இருபஃதில் "ஊரும் பேரும் உருவும் கொண்டு என், ஊரும் பேரும் உருவும் கெடுத்த" என்றும் (பா : 4) "கைகள், தலை, வாய், கால் செவிமூக்குயர் மெய் கொண்டு என்வினை வேரறப்பறித்த" (பா : 6) என்றும் கூறியிருப்பதாலும்,

2. சித்தியாரில் சிவபெருமான், சத்தி, முருகன், விநாயகர் ஆகியோருக்கு வணக்கப் பாடல்கள் பாடியிருப்பதாலும்,

3. இறைவன் சத்தி வடிவத்தை எடுப்பதால்தான் உலக உயிர்கள் இன்பம் துய்க்கின்றன என அம்மையப்பர் வடிவத்தைச் சிறப்பிப்பதாலும்,

4. அம்மையப்பன் என்ற சொல்லை இறைவனைக் குறிக்கப் பல இடங்களில் பயன் படுத்துவதாலும்

மேற்கூறப்பெற்ற செய்தி உறுதியாகிறது. இவ்வாறு சிவனின் திருமேனியைப் பற்றிய விளக்கங்கள் அமைந்துள்ளன.

3

## முத்தி நிலை

இறைவனை உருவத் திருமேனியில் வழிபடுவதால் பெறும் பயன் முத்திநிலையாகும். முத்தி என்பதையும் சித்தியார் பல பாடல்கள் மூலம் விளக்குகிறது. “சைவ சாதனங்களால் அடையும் பயன்கள் இரண்டாகும். ஒன்று பாசநீக்கம், மற்றொன்று சிவப்பேறு.” அதாவது உயிர்கள் அடையவேண்டிய முடிந்த பயன் வீடுபேறு ஆகும். இதுவே சிவப்பேறு ஆகும். இதனை முத்தி என்றும் கூறுவர்.[7] முத்தி பற்றிய கருத்துகள் சமயங்கள் தோறும் வேறுபடுகின்றன. இதனை அருணந்தி சிவாசாரியார் குறிப்பிட்டுப், பிற மதங்களின் முத்தி பற்றிய கருத்துகள் தவறு என்பதையும் நிறுவுகிறார்.

*“இம்மையே ஈரெட்டு ஆண்டு எய்திஎழில் ஆரும்*
*ஏந்திழைஆர் முத்திஎன்றும், இரும்சுவர்க்க முத்தி*
*அம்மையே என்றும்முத்தி ஐந்து கந்தம்*
*அறக்கெடுகை என்றும்அட்ட குணம்முத்தி என்றும்*
*மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி என்றும்,*
*விவேகமுத்தி என்றும், தன் மெய்வடிவாம் சிவத்தைச்*
*செம்மையே பெறுகைமுத்தி என்றும் செப் புவர்கள் ;*
*சிவன்அடியையச் சேரும்முத்தி, செப்புவது, இங்குயாமே ”*

(சுப. பா : 264)

இப்பாட்டிலிருந்து கீழ்க்கண்ட கருத்துகளைத் தொகுத்துக் காட்டலாம். உலகாயதர், ஏந்திழையாரின் இன்பம் முத்தி என்பர். மறு உலகில் இன்பம் நுகர்தலைச் சொர்க்கமுத்தி என்பர் மீமாம்சகர். உருவம், ஞானம், வேதனை, குறி, வாசனை என்ற ஐந்து கந்தங்களும் முற்றிலும் ஒழிவதைப் பௌத்தர் முத்தி என்பர். எட்டு தீக் குணங்களை நீக்கி எட்டு நல்ல குணங்களைப் பெறுதல் முத்தி என்பர் சமணர்கள். கல்போல அறிவின்றி இருப்பதை வைசேடிகர் முத்தி என்பர், பிரகிருதியினின்று உயிர், தன்னை வேறாகப் பகுத்தறிவதே முத்தி என்று சாங்கியர் கூறுவர். உலகம் தோன்றியதற்குக் காரணமாகிய, மாயையின் வேறாகிய பிரம்மமே யான் என்று உணர்வதே முத்தி என்பர் அத்வைதிகள், மும்மலங்களும் நீக்கப்பெற்றுச் சிவசமமாய் இருப்பதே முத்தி என்று சிவசமவாதிகள் குறிப்பிடுவர். இவ்வாறு ஏந்திழையார் முத்தி, சொர்க்க முத்தி, ஐந்து கந்த அறக்கெடுமை முத்தி. அட்டகுண முத்தி, பாடாணம் போல்கை முத்தி, விவேக முத்தி, சிவத்தைப் பெறுகை முத்தி என்று பிறமதத்தார் கூறுவதை இப்பாடலில் கூறியுள்ளார். ஆனால் இம் முத்திகளுக்கு எல்லாம் அப்பாற்பட்ட உண்மைப் பொருளைக் கூறுவது சைவ சித்தாந்தம் என்பதால் சைவ சித்தாந்திகள் கூறும் முத்தி சிவனடியைச் சேர்வதே ஆகும் என்றும் கூறுகின்றார். எனவே அருணந்தி சிவாசாரியார் சைவ சித்தாந்த முத்தியாகக் கூறுவது மும்மலங்களும் நீங்கப் பெற்றுச் சிவனடியைச் சேர்வதே (முத்தி) ஆகும் என்பது பெறப்படுகிறது.

இதனையே பிறரும்,

> *“உள்ள மலநீக்கி ஓங்கு சிவானந்த*
> *வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே - கள்ளவிழ்பூங்*
> *கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்தில்*
> *சித்தாந்த முத்தியெனத் தேறு ”*[8]

என்று குறிப்பிடுவர்.

முத்திபற்றி மெய்கண்டார் குறிப்பிடும்பொழுது உயிரானது,

> “வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது
> வெய்யோனே ஆகாத மீன் போல”

இறைவனிடத்தில் நிற்பதே முத்தி என்று குறிப்பிடுகிறார்.[9]

மேலும் “அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி அயரா அன்பின் அரன் கழல் சேருமே”[10] என்று குறிப்பிட்டு, இறைவன் திருவடியில் அயராது அன்பு வைத்து, அரன் கழல் செல்லுதலும் முத்தி நெறி என்று குறிப்பிடுகின்றார். இந்த அடிப்படையில் தான் அருணந்தி சிவாசாரியாரும் முத்தி நெறி விளக்கங்களைப் பல பாடல்களில் அமைத்துச் செல்கிறார்.

## முத்தி அடைவதற்குரிய வழிகள்

ஆற்று வெள்ளம் பல கிளைகளாக ஓடி இறுதியிலே கடலிலே சென்று கலப்பது போலப் பக்தி என்பது, பலவித நெறிகளிற் சென்று, இறுதியில் முத்தியைத் தரும். முத்தி அடைவதற்குரிய பல நெறிகளை அருணந்தி சிவாசாரியார் ஆங்காங்குக் குறிப்பிட்டுக் கொண்டே செல்கிறார். சிவாகமங்கள் முதலிய ஞான நுல்களைத் தான் படித்தலும், பிறருக்கு படிப்பித்தலும், அவற்றிலே கூறப்பட்ட சிறந்த பொருட்களைத் தான் ஞானாசிரியரிடத்துக் கேட்டலும், அதனை நிறைவுடையார்க்கு உரைத்தலும், செவ்விதாகக் குற்றமற்ற அப் பொருளைச் சிந்தித்தலும் ஆகிய இவ் ஐந்தும் ஞான நெறியின் அடிப்படையில் எழுந்த முத்தி நெறிகளாகும். மேலும் சிவசிந்தனை முதல், சிவபூசனை - அக்னி காரியம் ஈறாகச் செய்யும் செயல்களாகிய கன்ம வேள்வியும், விரதங்களாலே உடம்பை மெலிவித்தல் முதலிய தவவேள்வியும், மந்திரங்களைக் கூறுகின்ற செப வேள்வியும், இருதய முதலிய தானங்களில் சதாசிவன் முதலிய மூர்த்திகளைக் கொண்டு தியானித்தலாகிய தியான வேள்வியும் இறைவனை வழிபட்டு முத்தி அடைவதற்குரிய வழிகளாகும்.

ஞானத்தால் முத்தி அடையலாம் என்பது ஆசிரியர் கூறும் வழிகளில் மற்றொன்றாகும். புறச்சமய நூல்களின் வழியே ஒழுகியும், அகச் சமய நூல்களின் வழியே சென்று ஒழுகியும், மனு முதலியோரால் சொல்லப்பட்ட வேத நூல் வழியே சென்று ஒழுகியும், வேதங்களில் கூறிய தரும நெறிகளை மேற்கொண்டு, அந்நெறிவழியே வழுவாது ஒழுகியும், அரிய தவங்களைச் செய்தும், அரிய கலைஞானங்கள் பலவற்றைப் பயின்றும், வேதங்களை ஓதியும், புராணங்களை ஆராய்ச்சி செய்து அறிந்தும், இந்நெறிப்படி சென்றால் சைவ சித்தாந்தம் கைவரப் பெறுவர். இவற்றால் சரியை, கிரியை, யோகங்களைச் சாதித்துப் பெற்ற ஞானத்தால் சிவனடியைச் சேரலாம் என்று ஞானத்தால் முத்தியடைவதைக் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு வழிகளைக் கூறிய ஆசிரியர் அந்த ஞானமே முத்தி தரும் என்பதை மற்றொரு பாடலிலும் வலியுறுத்திக் காட்டுகிறார். (சுப.279) அப்பாடலில் வலியுறுத்தும் பகுதியைவிட, அதனை அறியாதாரின் நிலையைக் கடுஞ் சொல்லால் கூறுவது சிறப்பிடம் பெறுகிறது. மெய்ஞ்ஞானம் ஒன்றினாலேதான் வீடுபேறு அடையலாம் என்று நான்மறைகள், புராணங்கள், நல்ல ஆகமங்கள் சொல்ல, அவ்வாறன்று கன்மங்களும், விவேகஞானமும், தத்துவ விசாரமும், சரியை, கிரியை, யோகங்களும் முத்தி அளிப்பன என்று கூறும் ஊனத்தார் என்ன பயனைப் பெறுவார்களோ? என்று அப்பாடலில் கூறும் செய்தி குறிப்பிடத் தக்கதாகும். இவ்விரு பாடல்களிலிருந்து அருணந்தி சிவாசாரியார் ஞானத்தால் வீடு பெறுவதையே வலியுறுத்துகிறார் என்பது பெறப்படுகிறது.

சிவஞானத்தின் வகைகளை ஆசிரியர் ஒரு பாடலில் தெளிவு படுத்துகிறார். சிவஞான நெறியானது வேத ஆகமங்களைக் கேட்டல், கேட்ட பொருள்களைச் சிந்தித்தல், சிந்தித்து அப்பொருள்களின் உண்மையைத் தெளிந்து நிற்றல், தெளிந்தவாறே நிட்டையில் கூடுதல் என்ற நால்வகைப்படும், இத்தகைய நான்கு நெறிகளில் நின்றால் ஞானமுத்தி பெறலாம் என்று குறிப்பிடுகின்றார். (சுப - பா : 276)

இந்த ஞான முத்தியினால் சொல், மனம் ஆதியாக நிற்கச் சிவத்தின் இயல்பு, ஆன்ம அறிவின் கண் விளங்கித தோன்றும், ஆன்மாவிற்கு ஆன்ம இயல்பு எது என்பதும் தோன்றி விடும். உலகின் உண்மை நிலையும் பெறப்படும், மேலும் இறைவனுடைய உண்மைத் தன்மையும் பெறப்படும், அவ்வாறு பெறும் பொழுது முத்திநிலை கிட்டுகிறது என்று ஞான முத்தியின் நிலையை எடுத்துக் காட்டி, அவற்றின் வகைகளையும், பயன்களையும் காட்டி, ஞானகுருவைப் பெற்று, ஞானமுத்தி அடைவதை வற்புறுத்துகிறார் ஆசிரியர். ஞானமுத்தியை அவர் இவ்வாறு வற்புறுத்திக் கூறுவதற்குக் காரணம், தாம் மெய்கண்டாரை ஞான குருவாய்ப் பெற்று, ஞான முத்தி பெற விழைந்தமையே ஆகும்.

முத்தி நிலையை இறைவன் தருகின்ற விதத்தையும், முத்தி பெறுவோரின் நிலையையும் ஆசிரியர் பலவாறாகக் குறிப்பிடுகின்றார். தம் கருத்தைக் கூறும் பொழுது வாத அடிப்படையில் கூறுகிறவர் ஆதலால் இறைவன் தரும் முத்தித் திறத்தை வாத

அடிப்படையிலேயே அமைத்துள்ளார். இறைவனின் திருவடியை அடைவது முத்தி என்ற பொழுது ஒரு வினா எழுகிறது. அதாவது சிவமே உயிரில் எங்கும் பரவி நிற்கையில் உயிர்களாகிய நாம் அதை அடைய வேண்டியதில்லையே, அப்படி இருக்கையில் நாம் இறைவனுடைய அடியை அடையவேண்டும் என்பது எப்படி முத்தியாகும்? என்பது வினாவாகும். இந்த வினாவை எழுப்பிக்கொண்டு ஆசிரியர் விடையும் தருகிறார். சிவம் எங்கும் பரவி இருப்பது அன்று என்றும், உயிர்களில் வேறாக நிற்கின்றது என்றும் சொன்னால் அது முழுமுதற் பொருள் ஆகாது . அப்போது முழுமுதல் ஆகாத இறைவனை அடைவது என்பது முத்திநிலை அன்று என்று முடியும்.

எனவே உடம்பெங்கும் செறிந்திருக்கும் உயிர் போலச் சிவனும், உயிர் எங்ஙனும் பரவி நிற்பான் என்பதே உண்மை. அத்தகைய இறவைன் பதி ஞானத்தை அளித்து, மலரடிக் கீழ் வைத்தலாகிய பரமுத்தியை ஆன்மாவிற்குக் கொடுத்தலைச் செய்கின்றான். எனவே முத்தியையும் இறைவனே அருள்வீழ்நிலை மூலமாக அளிக்கின்றான் என்பது பெறப்படுகிறது. அந்த நேரத்தில் இறைவன், கண்ணில் கண் ஒளி போலத் தோன்றி நிற்கின்றான். இவ்வாறு இறைவன் முத்தி கொடுப்பதைக் கீழ்வரும் பாடலில் மிகச் சிறப்பாகக் குறிப்பிடுகிறார்.

"இரும்பைக்காந் தம்வலித்தாற்போல், இயைந்துஅங்கு, உயிரை
எரிஇரும்பைச் செய்வதுபோல், இவனைத்தான் ஆக்கி
அரும்புஇத்துஇந் தனத்தைஅனல் அழிப்பதுபோல், மலத்தை
அறுத்து, அமலன் அப்புஅணைந்த உப்பேபோல், மலத்தை
விரும்பி, பொன் னினைக்குளிகை ஒளிப்பதுபோல், அடக்கி
மேளித்துத் தான்எல்லாம் வேதிப்பான் ஆகி
கரும்பை, தேனை, பாலை, கனியமுதை, கண்டை,
கட்டியைஒத்துஇருப்பன் அந்த முத்தியினில் கலந்தே" (பா:321)

இப்பாடலின் மூலம் இறைவன் முத்தி அளிக்கும் திறன் நன்கு வெளியாகிறது. காந்தம் இரும்பினைத் தன்னகத்து இழுத்து அதனோடு இயைந்து நிற்றல் போல இறைவன் உயிரினையும் தன்னகத்து வலித்து அதனோடு இயைந்து நிற்கின்றான். தீயானது தன்கண் அடைந்த இரும்பைத் தன் வண்ணமாக்குதல் போல இறைவன் உயிர்களைத் தன் வண்ணமாக்குகிறான்.

நெருப்பானது விறகினில் நுண்ணியதாய் இருந்த, தீயினை வெளிப்படுத்தி விறகாம் தன்மையினை அழித்துத் தானேயாக்கி நிற்றல் போல உயிரானது மலத்தை நீக்கித் தானேயாகி நின்றும், நீரோடு கலந்த உப்பினைப் போலத் தன்னுள் கலப்பித்து நின்றும், களிம்பு நீங்கிப் பொன்னாகிய செம்பினை இரதக் குளிகை மறைத்து நிற்றல் போல உயிர்களின் மல, பாசங்களை விருப்பினாலே செயலாக்கி நின்றும், மூலிகை வகைகளைக் கூட்டி ஒரு உலோகத்தைப் பிறிதொன்றாக்கி நிற்கும் இரசவாதி போல உயிரையும், சிவசமமாக மாற்றி நின்றும் பரமுத்தியைத் தருகின்றான் என்று குறிப்பிடுகின்றார். இப்பாடலில் உயிரானது முத்தி நெறியைப் பெற அனுபவிக்கின்ற ஒவ்வொரு படி நிலையையும் ஒவ்வொரு உவமையின் மூலம் விளக்கியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும். இவ்வாறு முத்தி நிலையை அருணந்தி சிவாசாரியார் விளக்கிக் காட்டி அவற்றிற்குரிய சாதனங்களாகச் சைவ நெறிகளையும் குறிப்பிட்டிருக்கிறார்.

**சமய நெறியில் சமுதாயம்**

சைவ சித்தாந்தச் சாத்திர நூல்களாக அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள் விளங்கினாலும் சமுதாயத்தின் உயர்வுக்குரிய நெறிகளையும் அவைகள் குறிப்பிடுகின்றன. சமயநெறி சமுதாயப் பண்புக்கு அடிப்படையானது என்பதையும் அவைகள் உணர்த்துகின்றன. அருணந்தி சிவாசாரியார் நூல்களில் காட்டிடும் சமுதாயக் கோட்பாடுகள் மூன்று.

1. *அவர் காலத்திய சமுதாய நிலைகள்*
2. *சமய நெறிக்கு வேண்டும் சமுதாயக் கோட்பாடுகள்.*
3. *சமுதாய உயர்வுக்குரிய வழிகள்.*

அருணந்தி சிவாசாரியார் சமய நெறியில் தெய்வ வழிபாட்டை நாளும் செய்கின்ற சிவாசாரியார் மரபில் தோன்றியவராக இருந்தாலும் அவ்வழிபாட்டில் தம்மை முழுமையும் ஈடுபடுத்திக் கொண்டவாறே சமுதாய மக்களோடு பழகுகின்ற வாய்ப்பினையும் ஏற்படுத்திக் கொண்டிருந்தவர். பிற மதத்தாரோடு வாதம் புரிகின்ற தன்மை உடையவர் ஆதலாலும், தம்மைச் சார்ந்த மாணவர்களுக்கு ஞான அருளுரை செய்பவர் ஆதலாலும், தம்மைக் குலகுருவாக ஏற்ற குடும்பங்களுடன் பழகுபவர் ஆதலாலும் சமுதாயத் தொடர்பு அவருக்கு இயற்கையாகவே ஏற்பட்டிருந்தது.

மெய்கண்டாரின் நூலுக்கு விரிநூலாகத் தம் நூலை அமைத்திருந்தாலும், தம்முடைய அருளுரை முறைகளையும் ஆங்காங்குச் சுட்டிக் காட்டவும் முனைந்துள்ளார். இறை வழிபாட்டில் தோய்ந்த உள்ளம் படைத்தவர் ஆதலால் வழிபாட்டு முறைகளையும், சமயம் சார்ந்த மக்களுக்குச் சமய வழிபாட்டுத் தெளிவினையும், அதே நேரத்தில் தவறுகளை அகற்றும் போக்கினையும் அருணந்தி சிவாசாரியார் குறிப்பிட்டிருக்கிறார். மேலும் தம் நூலில் பிறமத்தாரும் சைவ சமயச் சார்புடையவர்கள் ஆவதற்கும் உரிய அரிய கருத்துகளையும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

## சமுதாய நிலை

அருணந்தி சிவாசாரியார் வெறும் சமயத் துறையில் மட்டும் தம் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாது, சமுதாயத்தோடுப் பின்னிப் பிணைந்திருந்த சமய வாழ்க்கையை மேற்கொண்டிருந்தார். எனவேதான் சமயத்துறைத் தத்துவக் கருத்துகளுக்குச் சமுதாய நிகழ்ச்சிகளை உவமைகளாகக் கொண்டு விளக்கம் தந்துள்ளார். அவருடைய உவமையில்இடம் பெற்ற சமுதாய நிகழச்சிகளில் மருத்துவர் பிணி நீக்கும் நிலை (சுப-பா :124,125) மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். மருத்துவரை உவமையாகக் கொண்டு அவர் தத்துவ விளக்கம் கூறுவதில் அறுவை சிகிச்சை (சுப.-பா : 125) இடம் பெற்றமை அவர் காலத்தில் அம்முறை இருந்தமையைச் சுட்டிக் காட்டுகிறது. அது போல நாடக நடிகர்களை அவர் உவமையாக்கிக் (சுப-பா:164, 214, 237 ) காட்டியிருப்பது அக்காலச் சமுதாயச் சூழல் நாடகத்தறைக்கு முக்கியத்துவம் கொடுத்ததைச் சுட்டுகிறது. நாடகத்திலும் தோற்பாவைக் கூத்து மிகச் சிறப்பிடம் பெற்றிருக்கிறது. இத்தகைய செய்திகள் அவர்தம் உவமைகளால் உணர்ந்து கொள்ள முடிகிறது.

ஆசிரியர் காலத்தில் குற்றங்களுக்குரிய தண்டனைகள் வழங்கப் பெற்றமையும் சுபக்கப் பாடல்களால் அறியப்படுகின்றன. அரசர்கள் தம் ஆணைப்படி நடக்காதவரைச் சிறையில் அடைத்துத் தண்டனை கொடுத்திருக்கிறார்கள். (சுப -பா :121) இல்லற வாழ்வில் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் தங்கள் வழி நடக்காது குற்றம் செய்வார்களேயானால் அவர்களை அடித்தும் விலங்கிட்டும் தண்டனைக்கு உள்ளாக்கி அவர்களைத் திருத்த

முனைந்திருக்கின்றனர் என்பதும் புலனாகிறது. (சுப-பா.106 ) இவற்றால் சமுதாயத்தில் குற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன என்பதும் அவை தண்டனையால் திருத்தப் பெற்றிருக்கிறன்றன என்பதும் தெரிகிறது. சமுதாயத்தில் நீரினைத் தெளியவைக்கத் தேற்றா மரத்தின் வித்தைச் சேர்க்கின்ற முறை இருந்தமையும் பெறப்படுகிறது. (சுப -பா:313)

அதுபோலத் துணியிலுள்ள அழுக்கைப் போக்குவதற்குச் சாணியும், உவர்மண்ணும் சேர்க்கப் பெற்றமையும் தெரியவருகிறது.

*"எழும்உடல் கரணம் ஆதி*
*இவைமலம்; மலம் மலத்தால்*
*கழுவுவன் என்று சொன்ன*
*காரணம் என்னை ? என்னின்,*
*செழுநவை அறுவை, சாணி*
*உவர்செறி வித்து, அழுக்கை*
*முழுவதும் கழிப்பன் ; மாயை*
*கொடு, மலம் ஒழிப்பன், முன்னோன்"*

(சுப-பா:142)

என்பது அப்பாடல். இவ்வாறு அக்காலச் சமுதாயத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை ஆசிரியர் சுட்டிக் காட்டியுள்ளார்.

## சமய நெறிக்கு வேண்டும் சமுதாயக் கோட்பாடுகள்

அருணந்தி சிவாசாரியார் காலத்தில் தமிழகத்தில் பல சமயங்கள் இருந்தன என்பது அவருடைய பரபக்கத்தின் மூலமாகத் தெரியவருகிறது. அத்தகைய சமயங்களின் கருத்துகளை நன்கு உணர்ந்த அருணந்தி சிவாசாரியார் அச்சமயவாதிகளை நோக்கி ஓர்வேண்டுகோள் விடுக்கின்ற பாடல் மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்.

*"யாதொரு தெய்வம் கொண்டீர்*
*அத்தெய்வம் ஆகி, ஆங்கே*
*மாதொரு பாக னார்தாம்*
*வருவர், மற்று அத்தெய் வங்கள்*

*வேதனைப் படும் இறக்கும்*
*பிறக்கும், மேல்வினையும் செய்யும்*
*ஆதலான், இவை இலாதான்*
*அறிந்துஅருள் செய்வன் அன்றே"* (சுப-பா:115)

இந்தப் பாடல் அவரின் சைவ சித்தாந்தக் கொள்கைப் பிடிப்பிற்கு ஓர் எடுத்துக் காட்டான பாடலும் ஆகும். பிற சமயத் தெய்வங்கள் அனைத்தும் பிறந்து இறக்கின்ற உயிர் வர்க்கங்களைச் சார்ந்தது ஆதலால் அத் தெய்வங்களைக் காட்டிலும் மாதொரு பாகனாம் சிவபெருமானே தெய்வமாவான் என்று ஆசிரியர் குறிப்பிடுவது இங்கு நினைவு கூரத் தக்கதாகும். இப்பாடல் சமய நெறியிலே ஏற்படுகின்ற பூசல்களுக்கெல்லாம் ஓர் மாற்றாக அமைந்துள்ளது எனலாம். சைவ சமயத்தினரை நோக்கிப் பிற சமயத்தாரோடு பூசல் உண்டாக்கிக் கொள்ளவேண்டாம் ; ஏனென்றால் பிறதெய்வங்கள் வலிமையற்றவை என்று கூறுவது போலவும் இப்பாடல் அமைந்துள்ளது. எனவே சமய நெறியில் பூசல் வேண்டாம் என்ற சமுதாயக்கோட்பாடு இப்பாடல் மூலம் சுட்டிக் காட்டப் பெறுகிறது.

சமயநெறியில் மக்களுக்குச் சிறந்த அறநெறிகளைக் கூறுவதன் மூலம் சமுதாயக் கோட்பாடுகளை ஆசிரியர் வகுத்தமைத்துள்ளார்.

முயற்சி என்பது சமுதாயத்தில் பெரிதும் வேண்டப்படுகின்ற ஒன்றாகும். "முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்" என்பது மரபாகும். ஆனால் அதே சமயத்தில் முயற்சிகள் தோல்வியடைவதும் உண்டு. அத்தோல்விக்குக் காரணம் ஊழே என்பது சமய மரபாகும். இம்மரபை ஏற்றுக்கொண்டு முயற்சியைக் காட்டிலும் ஊழ் தான் இருவினைச் செயல்கட்குக் காரணம் என்று காட்டுகிறார் அருணந்தி சிவாசாரியார். அவ்வாறு அவர் காட்டும்பொழுது மனிதனின் இன்ப துன்பங்களுக்குக் காரணம் ஊழ் என்று கொண்டு முயற்சியில்லாமல் இருக்கக்கூடாது. முயற்சியும் தேவை என்பதையும் ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது. "இம்மையின் முயற்சியால் இருநிதி ஈட்டி இன்பம் நுகர்வர்", "இலாதவர் பொருளுமின்றி இம்மையேயிடருழப்பர்" (பா:97) என்று கூறி, முயற்சியுடையார் இன்பம் துய்ப்பர், முயற்சியில்லாதவர் துன்பம் அனுபவிப்பர் என்றும் குறிப்பிடுகிறார். இக்குறிப்பு முயற்சி

தேவை என்பதையும் வலியுறுத்துகிறது எனலாம். எனவே சமுதாயக் கோட்பாட்டில் முயற்சி தேவை என்பதை வலியுறுத்தி அதே நேரத்தில் சமய நிலையில் இருவினைகளால் இன்ப துன்பங்கள் நடைபெறுகின்றன என்பதை முடிவாக்கிக் காட்டுகின்றார்.

இவ்வாறு சமுதாயத்தில் இன்ப துன்பங்கள் உயிர்களுக்கு ஏற்படுவது இருவினையால் என்று கூறி, அவ்வாறு ஏற்பட்டாலும் முயற்சியைக் கைவிடலாகாது என்பதையும் ஏற்றுக்கொண்ட அருணந்தி சிவாசாரியார், இன்பத்தை அடைய எத்தகுநல்வினையைச் செய்யவேண்டும் என்பதையும் வரையறுத்துக் கூறுகின்றார். நல்வினையால் இன்பத்தைப் பெற மனத்தின் நினைவாலும், வாக்கின் செயலாலும், தொழிலாலும் முயலவேண்டும் என்பது அவர் கூறும் அறிவுரையாகும். (சுப-பா : 103) மனத்தின் நினைவால் உண்டாகும் நல்வினைகள் அருளுடைமை, பொறையுடைமை, பிறர் பொருள் விரும்பாமை, செய்ந்நன்றி மறவாமை, வஞ்சகமின்மை, நடுநிலை நிற்றல், அபிமானம் பேணல், அழுக்காறின்மை, அவா அறுத்தல், பிறர் துயர் கண்டிரங்கல் முதலியன. வாக்கினால் உண்டாகும் அறம்கூறல், புறங்கூறாமை, உண்மை பேசுதல், இனியன சொல்லுதல், கடுஞ் சொல் விலக்கல், வேத ஆகமங்களை ஓதல் முதலியன. உடலால் உண்டாகும் நன்மைகள் அரிய தவங்களைச் செய்தல், பூசைகள், ஓமங்கள் செய்தல், பகுத்துண்ணல், நந்தவனம், சோலைகளை உண்டாக்குதல், பிறர் மனை விரும்பாமை, குளம் தோண்டல், கல்விக்கூடங்கள், திருக்கோயில்கள் அமைத்தல் முதலியன என்பர்.[11]

இத்தகைய செயல்களைச் செய்தால் நல்வினைகள் ஏற்பட்டு இன்பம் உண்டாகும். இவற்றிற்கு மறுதலையான செயல்களைச் செய்தால் துன்பம் உண்டாகும் என்பதும் அவர் வாக்கால் தெளிவுறுகிறது. (சுப-பா:103) இக்கருத்திலிருந்து சமுதாயத்தில் நல்ல செயல்களைச் செய்யவேண்டும் என்ற கோட்பாடு வலியுறுத்தப் பெறுகிறது. இது சமயத்தால் சமுதாயத்திற்குக் கிடைத்த நல்ல பயன் ஆகும். இத்தகைய நல்ல செயல்களைச் செய்யாது நல்லவற்றிற்கு மாறாகத் தீயசெயல்களைச் செய்தால், "அடித்துத் தீர்த்து அச்சம் பண்ணி, இக்கிரமத்தினாலே ஈண்டு அறம் செய்என்று இறைவன் கூறுவான்" என்பதாக கூறி (பா:105) அருணந்தி சிவாசாரியார் சமுதாயப் பணிகளாகிய நல்லவற்றைச் செய்ய வற்புறுத்துவது மிகவும் குறுப்பிடத் தக்கதாகும். அச்சுறுத்திச் சமுதாயப் பணிகளைச் செய்யத் தூண்டுகிற

அருணந்தி சிவாசாரியார் அவற்றால் கிடைக்கும் பயனை எடுத்துக் கூறியும் மேற்கூறிய சமுதாயப் பணிகளைச் செய்யத் தூண்டுவதும் குறிப்பிடத் தக்கதாகும்.

*"தானம்செய் பொருள் தரித்தோர்*
*செய்தவர் தக்க செய்தி*
*ஊனம்பின் உறவே காண்டும்*
*பலம்உறு விப்பான் வேண்டும்*
*ஈனம்இல் செய்தி ஈசன்*
*இடும்பணி இவைநாம் செய்தால்*
*நூனங்கள் அதிகம் நோக்கி*
*நுகர்விப்பன், வினைநோய் தீர "*

(சுப-பா:111)

இப்பாடலில் தானம் முதலிய கருமங்கள் முதல்வனால் விதிக்கப்பட்ட விதிகளாகும். இவற்றை நாம் செய்யும் இடத்து அவற்றால் ஆகிய புண்ணிய பாவங்களை அறிந்து அப்புண்ணிய பாவங்களின் பயனை இறைவன் தருவான் என்று குறிப்பிடுகின்றார்.

**சமுதாயம் உயர்வதற்குரிய வழிகள்**

சமுதாயப் பணிகளாகிய கோட்பாடுகளை மேற்கண்டவாறு குறித்த அருணந்தி சிவாசாரியார் சமுதாயத்தில் வாழுகின்ற மனிதனின் ஒழுக்க முறைகளையும் வகைப் படுத்திக் காட்டுகின்றார்.

*"ஒழுக்கம், அன்பு அருள் ஆசாரம்*
*உபசாரம், உறவு, சீலம்*
*வழுக்குஇலாத் தவம், தானங்கள்,*
*வந்தித்தல், வணங்கல், வாய்மை,*
*அழுக்குஇலாத் துறவு, அடக்கம்*
*அறிவொடு, அர்ச்சித்தல் ஆதி*
*இழுக்குஇலா அறங்க ளானால்,*
*இரங்குவான் பணி, அறங்கள்"*

(பா:113)

இப்பாடலில் தனி மனிதன் கைக்கொள்ளவேண்டிய நடைமுறை வாழ்க்கைநெறி கூறப் பெற்றுள்ளது. ஒழுக்கம், அன்பு, அருள், தத்தம் குலத்திற்குரிய செயல்களைச் செய்தல், உபசரித்தல், யாவரிடத்திலும் நட்புடைமை, சீலம், வழுக்கிலாத் தவம், தக்கோர் மாட்டுச் செய்யும் தானம், தக்கன இவை. தகாதன இவை என்று பகுத்தறிதல் ஆகிய இத்தகைய அறங்களைத் தனி மனிதன் கைக்கொள்ள வேண்டும் என்று ஆசிரியர் குறிப்பிடுவது சிறப்பு நிலையாகும்.

இவை யனைத்தும் வேத ஆகமங்களில் கூறப்பட்டவைதான். இருப்பினும் வேத ஆகமக் கருத்துகளை வகைப்படுத்தி எளிமையாக்கிக் கூறியிருக்கிறார் அருணந்தி சிவாசாரியார். வேத, ஆகமங்கள்வழி நடக்கவில்லை என்றால் அத்தகைய நடவாத உயிர்களைத் தண்டித்தல் பொருட்டு இறைவனால் அமைக்கப்பட்ட சிறைச்சாலைகளே நரகங்கள். வேதஆகம விதிகளின்படி நடந்தால் செல்வத்தோடு வாழ்கின்ற மேன்மையான இடங்களே சொர்க்கங்கள் (பா.120) என்று அவர் குறிப்பிட்டு, நரக, சொர்க்கங்களுக்கு விளக்கம் தந்து சமுதாயக் கோட்பாட்டில் பணிகளை வலியுறுத்துகிறார். வேத ஆகங்களில் கூறப்பெற்ற தானங்களில் எள் துணை அளவு செய்தாலும், அது நிலம்போல் அகன்றும், ஓங்கியும், பெருகியும் செய்பவனைப் பிறப்பு இறப்பாகிய துன்பத்திலிருந்து கரையேற்றும் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். (பா:278) இப்பகுதியில் சிறிதளவாவது தானங்களைச் செய்தல் வேண்டும் என்று ஆசிரியர் வற்புறுத்துகின்றார். வேத ஆகமங்களில் பசு, பூமி, பொன், வெள்ளி, எள், நெய், துணி, வெல்லம், நெல், உப்பு முதலியவை தானம் கொடுக்கும் பொருள்களாகக் கூறப்பெற்றிருக்கின்றன. அருணந்தி சிவாசாரியார் கூற்றிலிருந்து தானம் அளிப்போன் அன்பினாலும், ஏற்போன் தகைமையானும் தானம் பெருமை அடைவதே அன்றி, தானப் பொருளின் அளவுக்கு ஏற்பப் பெருமை அடைவதில்லை என்ற குறிப்பை அறியலாம்.

வளமுடையான் ஒருவன் வறுமையுடையான் ஒருவனுக்குத் தானம் கொடுப்பதை ஆசிரியர் இவ்வாறு பல இடங்களில் சுட்டிக் காட்டிச் சமுதாயக் கோட்பாட்டில் ஒன்றான எளியவரைக் காப்பாற்றுதலைக் கூறுகின்றார் இதன் மூலம் சமுதாயம் உயர்வதற்கு வழியும் புலப்படுகிறது.

சமுதாயக் கோட்பாட்டின் இறுதி நிலையாக அருணந்தி சிவாசாரியார் குறிப்பது நிலையாமையாகும். நிலையாமையை உணர்ந்தால் சமுதாயத்தில் பணிகளைச் செய்வதற்கு ஆர்வம் உண்டாகும். எனவே இறைவனை வழிபடவும் சமுதாயத்திற்குத் தொண்டு செய்யவும் நிலையாத உடம்பைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்று கூறுகின்றார்.

*"கருவினுள் அழிவ தாயும்,*
*கழிந்திடாது அழிவ தாயும்,*
*பரிணமித்து அழிவ தாயும்,*
*பாலனாய் அழிவ தாயும்,*
*தருணனாய் அழிவ தாயும்,*
*தான்நரைத்து அழிவ தாயும்,*
*உருவமே அழிவே யானால்,*
*உள்ளபோ தேபார், உய்ய"* (சுப-பா:183)

இப்பாடலின் கருத்து, தாயின் கர்ப்பத்திலே அழிவதாயும், பிறந்த உடனே அழிவதாயும், குழவிப் பருவத்தில் அழிவதாயும், பாலனாய் வருகின்ற பருவத்தில் அழிவதாயும், இளமைப் பருவம் உடையவனாய் அழிவதாயும், விருத்தனாய் அழிவதாயும் உடைய பண்பினை உடல் கொண்டது. ஆதலால் அந்த உடல் உள்ளபோதே உய்யப் பார்த்தல் வேண்டும் என்று அருணந்தி சிவாசாரியார் குறிப்பிடுகின்றார். உடலானது அழியும் தன்மை உடையது என்பதை உணர்கின்றபோது அந்த உடலில் தங்கியுள்ள உயிரின் பயனை எய்துவதற்குச் சமுதாயப் பணிகளைச் செய்ய வேண்டும் இறைவனை வழிபட வேண்டும் என்று குறிப்பாலே ஆசிரியர் காட்டுகின்றார். உடம்பு நிலையாமையை எடுத்துக் கூறிய அருணந்தி சிவாசாரியார் கீழ்வரும் பாடல் மூலம் வாழ்க்கை நிலையாமையையக் குறிப்பிடுகின்றார்.

*"அரிசனம் பூசி, மாலை*
*அணிந்து, பொன் னாடை சாத்தி,*
*பரிசனம் பின்பு செல்ல,*
*பாரகர் பரிக்க, கொட்ட,*

*வரிசின்னம் ஊத, தொங்கல்*
*வந்திட, உணர்வு மாண்டு*
*பெரியவர் பேச்சும் இன்றிக்*
*கிடத்தலால், பிணத்தோடு ஒப்பர்"*

(சுப-பா:185)

இப்பாடலின் மூலம் சந்தனம் முதலிய வாசனைப் பொருள்களைப் பூசியும் மாலைகளை அணிந்தும், பொன்னாடை சார்த்தித் தமது பணியாளர்கள் பின்னேவர இசைக் கருவிகள் முழங்க, குடை சாமரங்கள் சூழ, இவற்றோடு கூடி நின்ற ஒருவர், அறிவு மயங்கிப்பேச்சின்றிக் கிடந்துவிட்டால் பிணத்திற்கு ஒத்தவராகி விடுகின்றார் என்று குறிப்பிட்டு, இத்துணைச் செல்வ வாழ்க்கை என்றும் நிலைப்பதல்ல. எனவே அது இருக்கின்ற பொழுதேயே நல்ல பல செயல்களைச் செய்யவேண்டும் என்று குறிப்பாகக் காட்டுகின்றார். இப்பாடல் மூலம் அருணந்தி சிவாசாரியார் காலத்தில் செல்வ வாழ்வினர் சிவிகை ஊர்ந்து வாழ்ந்தனர் என்பது நன்கு புலனாகின்றது. மேலும் அவர்கள் மணப் பொருள்களை விரும்பி அணிந்திருக்கின்றனர் என்பதும், குடை, சாமரம் போன்ற சின்னங்களைத் தம் உரிமைக்கு உரிய பொருள்களாகப் பயன்படுத்தியிருக்கின்றனர் என்பதும் தெரிய வருகிறது. இவற்றை ஆசிரியர் குறிப்பிட்டு இத்தகைய ஆடம்பர வாழ்க்கை தேவையில்லை என்பதை வெளிப்படுத்துகிறார்.

வாழ்க்கை நிலையாமையைக் கூறிய ஆசிரியர், அடுத்துச் செல்வ நிலையாமையைக் கூறுகிறார்.

*"பிணத்தினை ஒத்து வாழ்வோர்*
*பின்நடைப் பிணங்கள் போல*
*உணக்கியே உழல்வீர் உங்கள்*
*உடல்உயிர் உணர்வும் எல்லாம்*
*கணத்திடைத் தோன்றி மாயும்*
*காயம்என்று அறிந்து, ஒருக்கால்*
*வணக்குறீர், அரனை ; என்றும்*
*வானவர் வணங்க, வைப்பன் "* (பா:186)

செல்வச் செழிப்பால் தருக்கோடு வாழ்கின்றவர்கள் ஆசிரியரால் இப்பாடலில் பிணத்தோடு ஒத்தவர்கள் என்று கூறப்படுகின்றனர். செல்வ வாழ்வில் வாழுகின்ற பெரியவர்களுக்கு நடக்கும் சிறப்பெல்லாம் (அதாவது இசைக்கருவிகள் முழங்குதல், குடை, சாமரம் முதலியன உடன் வருதல் முதலியன) பிணத்திற்கும் நடப்பதால் அவர்களை அவ்வாறு அழைத்திருக்கிறார். அத்தகைய செருக்குடையோர் பின் சென்று வருந்திப் பெறுகின்ற செல்வம் முதலிய பொருள்கள் எஞ்ஞான்றும் நிலைத்து நிற்கும் பொருள்கள் அல்ல என்பதையும், இறைவனின் அருட்செல்வமே நிலையானது என்பதையும் இப்பாடலின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. இத்தகு நிலையில் பொருள்களும் நிலையாமையுடையன என்பதை உணர்ந்து விட்டால் அவற்றைக் கொண்டு பல தானங்களை செய்வதற்கு உயிருக்கு ஊக்கம் வரும் என்பது அருணந்தி சிவாசாரியாரின் கோட்பாடாகும். இவ்வாறு அருணந்தி சிவாசாரியார் தம் காலத்துச் சமுதாய நிலையையும், சமுதாயத்தோடு சமுதாயத்தில் பின்னியிருந்த சமய நிலையையும், சமயத்தால் சமுதாயத்திற்குக் கிடைத்த கோட்பாடுகளையும் மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார்.

## முடிவுரை

அருணந்தி சிவாசாரியாரின் நூல்கள் மூலம் அக்காலத்தில் வழக்கிலிருந்த சைவ வழிபாட்டு முறைகளை அறிந்து கொள்ள முடிகின்றது. சிவனடியார்களை வழிபடுவதால் ஏற்படும் பலன்கள் அறியப் படுகின்றன. அவர்தரும் இறைவனின் வடிவ விளக்கங்கள் சைவ சமய உட்பொருளை விளக்கி நிற்கின்றன. மேலும் உருவ வழிபாட்டின் மேன்மைகளும் உணர்த்தப் பெறுகின்றன.

முத்தி பற்றிய கருத்தில் காணப்பெற்ற வேறுபாடும், சைவசமயக் கோட்பாடும் தெளிவாக்கப் பெறுகிறது. சமுதாயத்திற்குச் சமய நூல்கள் நாளும் பயன் படுகின்றன என்பதும், அத்துடன் சமய உயர்வால் சமுதாய உயர்வு ஏற்படுகிறது என்பதும் நன்கு உணர்த்தப் பெறுகின்றன.

# நிறைவுரை

அருணந்தி சிவாசாரியாரின் நூல்களை ஆய்வு செய்வதில் முதலாவதாக அமைகிறது இவ்வாய்வு. இவ்வாய்வினால் கீழ்க்கண்ட எண்ணங்கள் பெறப்படுகின்றன.

1. அருணந்தி சிவாசாரியார், ஆசிரியர், நூலாசிரியர், உரையாசிரியர். அருளாசிரியர் எனப் பல்வேறு நிலைகளில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வது சைவசமய வளர்சிச்குப் பெருமை சேர்க்கிறது.

2. எத்துணை கற்றாலும் ஞானாசிரியர் வாயிலாகவே உண்மையறிவு பெற முடியும் என்பதைனச் சகலாகம பண்டிதராக விளங்கிய அருணந்தி சிவாசாரியார், தம் மாணவராகிய மெய்கண்டாரையே ஞானகுருவாக ஏற்றுக் கொண்டதன் மூலம் உண்மையெனத் தெளிய முடிகிறது.

3. அருணந்தி சிவாசாரியார் குலமரபு கருதாது, குருமரபுச் சிறப்பினைக் கருதிய பாங்கு சைவசாத்திர மரபின் பெருமைக்கு மேலும் பெருமையூட்டுகிறது.

4. தாம் இன்புறுவது உலகின்புறத் தான் பெற்ற அருளுரைப் பயனை உலகமும் பெற அருணந்தி சிவாசாரியார் நூல்களைப் படைத்தருளியமை, போற்றி வணங்கத்தக்க செயலாக அமைந்துள்ளது.

5. இருபா இருபது வினா அமைப்பிலும், சிவஞான சித்தியார் விடை அமைப்பிலும் விளங்கித் தத்துவக் கருத்துகளை எளிமையாக்கித் தருகின்றன.

6. சிவஞான சித்தியாரில் பரபக்கம், பிறர்தம் மத மேற்கொண்டு களைவதாகவும், சுபக்கம், தனாது நிறுவுதலாகவும் அமைந்து சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளக்குகின்றன.

7. சங்க காலத்திலேயே தொடங்கிவிட்ட சமயச் சொற்போரின் வளர்சியே பரபக்கம் என எண்ணிப்போற்றும் வண்ணம் அமைந்துள்ளது.

8. சிவஞானபோதம் மிகப் பிழிவான கருத்துகளையே கூறுவது எனவே அடிப்படையான கருத்துகளே அதன்கண் உள்ளன. அவ்வடிப்படைக் கருத்துகளை உரையாசிரியர்கள் தம்பாங்கிற்கேற்ப; அருணந்தி சிவாசாரியார் விளக்கம் தந்து சாத்திர உரையாசிரியர்களுக்கு முன்னோடியாக விளங்குகிறார்.

9. சமயநெறி, வாழ்வியல் நெறியே என்பதனை வினையையும், வினைப்பயனையும் பற்றிக் கூறும்போது வலியுறுத்திச் சாத்திரக் கருத்துகளை சமுதாயத்தின் மத்தியில் சிறப்பிடம் பெறவைக்கும், ஆசிரியரின் திறம் போற்றுதற்குரியது.

10. மாயையை விளக்கும் பகுதியில் உலகத்தோற்றத்தை ஆசிரியர் குறிப்பிடுவது சமயக் கணக்கர் மதி வழி கூறிய உலகியல் நூல் என்ற சிறப்பை சிவஞான சித்தியாருக்கு அளிக்கிறது.

11. மெய்ப்பொருளியல் நூல்களாக ஆசிரியரின் படைப்புகள் மிளிர்ந்தாலும், இலக்கியச் செவ்வியிலும் இணையற்று நிற்கின்றன. வீறுபெறும் விருத்தப்பாக்கள், உவமை, உருவக அணிநலன்கள் இலக்கியச் சுவையை அள்ளித் தருகின்றன.

12. வடசொற் கலப்பு, காலவகையினாலும், பொருள் வகையினாலும், தவிர்க்க முடியாததாக இருந்திருக்கின்றது. ஆயினும் அவற்றைத் தமிழாக்கிக் காணும்போது சமயம் என்பது எங்கோ உள்ள ஒன்று என்ற நினைவு மாறி நம்மைச் சூழ்ந்திருக்கும் உலகியல் நெறியே சமயம் என்பது பெறப்படுகிறது.

13. யாதொரு தெய்வங்கண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வருவார் என எண்ணும்போது யாதும் ஊரே என்ற ஒருமைப்பாட்டுணர்வு இறையுணர்விலும் கலந்திருப்பது தெளிவாகிறது.

இத்தகைய முடிபுகளால் அருணந்தி சிவாசாரியார் சீரிய சிந்தனையாளராகவும் செம்மை சான்ற திறனாய்வாளராகவும் விளங்குவது புலனாகின்றது.

இவ்வாய்வின் பயனாய், சைவ சித்தாந்த முடிபுகள் மேலும் மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற ஆய்வுகள் சாத்திரநூலில் பெருகவேண்டும் என்பது பெறப்படுகிறது. சாத்திர வடமொழிச் சொற்கள் தமிழாக்கம் செய்யப்பெறல் வேண்டும் என்பதும் பெறப்படுகிறது. மேலும் ஆசிரியரின் காலத்திற்குப் பின்னர் தோன்றிய சாத்திர நூல்களில் அருணந்தி சிவாசாரியாரின் கோட்பாடுகள் எத்தகைய தாக்கம், எவ்வாறு பெற்றிருக்கின்றன என்பது ஆய்வு செய்யவேண்டியனவற்றில் ஒன்றாக அமைகிறது.

---

திருச்சிற்றம்பலம்

# விளக்கக் குறிப்புகள்

## இயல் ஒன்று

1. அருணாசலம். மு; தமிழ் இலக்கிய வரலாறு; 13ஆம் நூற்; ப.252

2. ஞானசம்பந்தர் தேவாரம் ; 1-59-4.

3. "பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவார் ஐயுறவேண் டாவொன்றும்
வேயானதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குள நீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே"

4. பெரியபுராணம் ; திருநாவு ; பாடல் : 11.

5. விழுப்புரம்-கடலூர் புகைவண்டிப் பாதையில் உள்ளது அவ்வூர்.

6. சுப்பிரமணிய முதலியார் சி.கே; பெரிய புராண உரை முதற் பகுதி; 1931 ; ப.188.

7. கலைக்களஞ்சியம் ; முதற்பகுதி

8. பெருந்தோட்டத்து அத்தீச்சுவரபுராணம் ; சந்தானாசாரியார் காப்பு.

9. முத்தையா பிள்ளை சந்திப்பு ; 1914. "பொய்ச் சமய, புறச் சமய இருள் நீங்கவும், மெய்ச்சமயமாகிய சைவ சமய ஒளி மேலிடவுங் கருதி சகல ஆகமங்களையும் சகடத்தின் மேல் ஏற்றிக்கொண்டு சிதம்பரம், திருவண்ணாமலை, காசி, நேபாளம் முதலிய பல இடங்களிலும் சென்று தருக்கமுறையில் எவரும் தன் கீழடங்கசைவ ஸ்தாபனஞ் செய்வாராயினார்."

10. பரபக்கம் ; பாடல்: 10.

11. "தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியா வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறா
விரவுபுக ழருணந்தி விறலார் செல்வத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே."

12. சிவலிங்கனார். ஆ; இலக்கியக் கொள்கை; தொகுதி.6; உ.த.ஆ.நி.; ப : 237

13. சுபக்கம் ; பாடல் : 3.

14. சுபக்கம் ; பாடல் : 194.

15. சுபக்கம் ; பாடல் : 273.

16. பரபக்கம் ; பாடல் : 57, 58.

17. மறைஞான சம்பந்தர், சுபக்கம் இருவருரை,திருவாவடுதுறை;1957,ப.3.

18.சுபக்கம்; பாடல்: 76, 92, 232.

19. சதாசிவபண்டாரத்தார்.வை; பிற்காலச் சோழர்; அ.ப.க.; ப.123.

20. இருபா இருபஃது; திருவாடுதுறைப் பதிப்பு; 1955; ப.1.

21. தமிழ் இலக்கிய வரலாறு; 13ஆம் நூற்; ப.282.

22. சிவஞான போதமும்,சிவஞான பாடியமும்-சமாசப் பதிப்பு,1936, ப.29.

## இயல் இரண்டு

1. "கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே" தொல். பொருள்.85.

2. "ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றிய உயர்ந்த பால தாணையின்
ஒத்த தலைவனும் தலைவியும் காண்ப" தொல். பொருள்.90

3. "பாங்கருஞ் சிறப்பின் பன்னெறியானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே" தொல். பொ.76.

4. மதுரைக் காஞ்சி - 453-55.

5. தற்பதங் கண்டுளோர் சைவசித்தாந்தத்தே - பாடல் : 1396.

6. சித்தலிங்கையா டி.பி; சைவசமயத் தோற்றமும் வளர்ச்சியும்; 1979;ப.17.

7. இராசசிம்மன் கயிலாசநாதர் கோவில் கல்வெட்டு.

8. ஆதியில் வேதங்களும், ஆகமங்களும் தமிழிலும் இருந்தன. இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என இன்று வழங்கும் இதே பெயர்களோடு அன்று தமிழிலும் நான்கு வேதங்கள் இருந்தன. அவற்றுள் ஒன்றாகிய சாமவேதம் இராவணனால் பாடப் பெற்றது. காலப்போக்கில் தமிழ் வேதாகமங்கள் அழிந்து விட்டன. வடமொழி வேதாகமங்கள் மட்டும் அழியாது நிலைத்து நின்றன. எனவே அவைகளையே தமிழரும் தங்களுக்குப் பிரமாண நூல்களைக் கொள்ளத் தலைப்பட்டனர் என்பதே அன்னாருடைய கருத்து.
-சைவ சித்தாந்த உண்மை வரலாறு; 1980; ப.6.

9. லெட்சுமணன்.கி; இந்தியத் தத்துவ ஞானம், 1980, ப.358.

10. இருபத்தெட்டு ஆகமங்கள்:

| | | | |
|---|---|---|---|
| 1.காமிகஆகமம் | 8.சஹறாச்சரம் | 15.வீரம் | 22.லளிதம் |
| 2.யோகசம் | 9.அம்சுமான் | 16.ரௌரவம் | 23.சித்தம் |
| 3.சிந்தியம் | 10.சுப்ரபேதம் | 17.மகுடம் | 24.சந்தானம் |
| 4.காரணம் | 11.விஜயம் | 18.விமலம் | 25.சர்வோத்தமம் |
| 5.அசிதம் | 12.நிச்வாசம் | 19.சந்திரஞானம் | 26.பாரமேச்வரம் |
| 6.தீப்தம் | 13.ஸ்வயம்பூ | 20.முகபிம்பம் | 27.கிரகணம் |
| 7.சூட்சுமம் | 14.ஆக்நேயம் | 21.ப்ரோத்கீதம் | 28.வாதுளம் |

11. லெட்சுமணன்.கி; இந்தியத் தத்துவ ஞானம், 1980,ப.359.
12. அனவிரத வினாயகம் பிள்ளை.சி; சைவசித்தாந்த வரலாறு; 1966; ப.44
13. அருணாசலம்.மு; தமிழிலக்கிய வரலாறு; 13ஆம் நூற்; 1970;ப.274.
14. "உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
 பிதிருபா உண்மை பிரகாசம் - வந்தஅருட்
 பண்புவினா போற்றி கொடி பாசமிலா நெஞ்சுவிடு
 உண்மைநெறி சங்கற்ப முற்று."
15. பாடல் எண்: 10.
16. தமிழ் இலக்கிய அகராதி - பாலூர் கண்ணப்ப முதலியார்.
17. கதிரைவேற் பிள்ளை. தமிழ் மொழியகராதி.
18. பரபக்கம் ; பாடல்: 9.
19. பரபக்கம் ; பாடல்: 10.
20. மறைஞான சம்பந்தர் உரை.
21. மீனாட்சி சுந்தரம் பிள்ளை. த.ச.; சித்தியார் பரபக்கம்; திருவாடுதுறை ஆதீனம்; முகவுரை; 1955; ப.32.
22. Devasenapathi. V.A., Saiva Siddhanta, 1974 - P.7
23. அருணாசலம்.மு;தமிழ் இலக்கிய வரலாறு;12ம் நூற்; II; 1973; ப.707.
24. பதினாறாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை ; தொகுதி : 1 ; ப.432.
25. ஜெயா. ப ; விநாயகர் வழிபாடு; 1972; ப.16.
26. சிவஞான போதம் - காப்புச் செய்யுள்.
27. சீவகசிந்தாமணி - அவையடக்கம் உரை.
28. பெரியபுராணம் - அவையடக்கம் உரை.

29 கந்த புராணம் - அவையடக்கம் உரை

30 கோபாலகிருஷ்ணமாச்சாரியார் வை.மு ; மகாபாரதம் -அவையடக்கம்.

## இயல் மூன்று

1. சுப்புரெட்டியார்.ந; சைவசமய விளக்கு; 1984, ப.3.
2. சமயக் கணக்கர் காதை - 1: 86.
3. திருவாவடுதுறை ஆதீனப் பதிப்பு ; 1957; ப.20
4. சமாஜப் பதிப்பு ; 1940, ப.379.
5. சைவசித்தாந்தத்தின் அடிப்படைகள்; செ.ப.க; 1981, ப 37.
6. பாடல் : 12
7. 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி; உரையாசிரியர்கள்; 1968; ப.319.
8. திருக்குறள் ; 242 ; உரை.
9. சுப : 7
10. சுப.பாடல் : 8
11. சுப. பாடல் : 9
12. சுப ; பாடல்கள் : 12, 13
13. பாடல்கள் : 266, 267

## இயல் நான்கு

1. தொல் - பொருள்; சூத் 639
2. நன்னூல் - பாயிரம் ; சூத் . 5
3. நன் - பொ. பா; நூ. 7
4. கலைக் களஞ்சியம்
5. சுப்பு ரெட்டியார்.ந ; சைவசமய விளக்கு; 1984; ப.216
6. வச்சிரவேல் முதலியார்.க; சைவசித்தாந்தத் திறவு; 1980, ப.59
7. திருவிளங்கம் பதிப்பு, ப.236
8. இத்தமிழ்ச் சொற்கள்.கா.சு.பிள்ளை தமிழாக்கம், மெய்கண்ட நூல்கள் உரைநடை, 1938; பக் 118- 299.

9. அருணை வடிவேல் முதலியார்; சைவசமய வினாவிடை;1975; ப.299

10. சுபக்கம், பா. 40

11. சுபக்கம்; பா. 41

12. சுபக்கம் ; பா. 42

13. சுபக்கம் ; பா. 43

14. அருணகிரிநாதர் ; கந்தரனுபூதி, பா.12

15. திருமந்திரம் ; பா. 2247

16. திருமந்திரம்; பா. 2361

17. திருமந்திரம்; பா. 2262

18. திருவிளங்கம்.மு; சித்தியார் சுபக்க உரை; 1971, ப.161

19. சிவம், அருள், உலி (நாதம்), வட்டம் (விந்து), அருட்சிவம், பெருமுதல்வன்; முதல்வன்; மாலவன்; மலரோன்.

20. தமிழ் இலக்கிய அகராதி; 1957

21. முத்தையா பிள்ளை.பொ; சித்தியார் பதிப்பு; 1914; பக்; 218, 218

## இயல் ஐந்து

1. இலக்கியத்திறன்; வரதராசன்.மு; 1979, ப.206.

2. தொல் - பொருள்: சூ . 383.

3. Principles of Literary Critism. P.139.

4. சிவபோகசாரம்; பா. 23

5. Marjorie Boulton guoted by .Sp.Annamalai, The life and teaching of saint Ramalingam. P.49

6. இலக்கியத்திறன்; வரதராசன்.மு ; 1979; ப.239

7. தொல். பொருள்; சூ. 272.

8. சித்தியார் - சுபக்கம்; பா. 87

9. மேற்படி, பா. 214

10. சித்தியார் - சுபக்கம், பா. 309

11. சித்தியார் - பரபக்கம்; பா 161

12. மேற்படி, பா.159

13. மேற்படி, பா.262

14. சித்தியார்; சுப.பா. 175

15. மேற்படி, பா. 262

16. மேற்படி, பா. 107

17. மேற்படி, பா. 100

18. மேற்படி, பா. 102

19. மேற்படி, பா. 170

20. மேற்படி, பா. 314

21. மேற்படி, பா. 303

22. மேற்படி, பா. 321

23. மேற்படி, பா. 325

24. மேற்படி, பா. 318

25. மேற்படி, பா. 193

26. தண்டியலங்காரம், 31

27. இலக்கியத்திறன்; 1979; பக்:241, 242

28. தண்டியலங்காரம் - 67

29. சுபக்கம் ; பா. 176.

30. மேற்படி, பா. 64

31. தண்டியலங்காரம், - 52

32. வரதராசன்.மு ; இலக்கியத்திறன் ; 1979; பக்:196-197

33. இலக்கியத்திறன் ; ப. 250

34. கோவிந்தசாமி.மு ; இலக்கியத் தோற்றம் ; 1960; ப.195.

35. முத்தையா பிள்ளை.பொ; சிவஞான போதச் சிற்றுரை விளக்கும்; 1981, பின்.இணை. பக் : 26-33.

36. அணிந்துரை; சைவநோக்கில் புறச்சமயங்கள்; 1982

37. மயிலை அழகப்ப முதலியாரால் வெளியிடப் பெற்றது; தமிழ் ஆண்டு சாதாரண ஆண்டு; 1910

38. சிலப்பதிகாரம் 5 : 181

39. திருவாசகம் - 5 : 49

40. ரானடே.ஆர்.டி.கீ.மே.மெ.இ.வர.2; 1970; ப.32

41. குணாமூர்த்தி.தா.எ; சமணம்; ப.14

42. மேற்படி, ப.14

43. கந்தசாமி. சோ.ந; பௌத்தம்; 1977; ப.1

44. தரபத சௌத்ரி; கீ.மே.மெய்.வ.1; 1970, ப.49.

45. மௌலானா அபுல்கலாம் ஆசாத்; கீ.மே.மெய்.பொ.வ.1, 1970,ப.12

46. இந்தியத் தத்துவ ஞானம்; 1980, ப.3

47. அருணை வடிவேல்.சி; சித்தாந்த வினாவிடை; 1975; பக்: 5-6.

48. லெட்சுமணன்.சி; இந்தியத் தத்துவ ஞானம்; 1980; ப.80.

49. கங்காதரன்.ச; சைவநோக்கில் புறச்சமயங்கள்; 1982, ப.1

50. மேற்படி.

51. திருவாசகம் - ம: 56-57

52. சித்தலிங்கம். டி.பி;சைவசமயத் தோற்றமும் வளர்ச்சியும்;1979; ப.104

53. பரபக்கம்; பா.12

54. கந்தசாமி.சோ.ந.; பௌத்தம்; 1977; ப.120

55. The Ethics of Buddhism, London, 1926. P.5

56. பரபக்கம் ; பா.64

57. பரபக்கம் பாடல் ; 68

58. பரபக்கம் பாடல் ; 135

59. மேற்படி : 149

60. கீ.மே.மெ.வர ; 1970, ப . 316

61. மேற்படி

62. மணிமேகலை 30-33; 189, 190

63. லெட்சுமணன்.கி; இந்தியத் தத்துவ ஞானம்; 1980; ப.159.

64. விதுஷேகரா பட்டாச்சாரியார் ; கீ.மே.மெ.வ ; 1970, ப.280

65. விதுஷேகரா பட்டாச்சாரியார் ; கீ.மே.மெ.வ ; 1970, ப.301

66. விதுஷேகரா பட்டாச்சாரியார் ; கீ.மே.மெ.வ ; 1970, ப.287

67. கதிரைவேற் பிள்ளை.ந; 1984; ப.271.

68. தமிழ்ச்சொல் அகராதி ; ப.630

69. பாடல் : 40

70. பர. பா : 118

71. பர. பா : 206

72. பர. பா : 212

73. பர. பா : 236

74. பர. பாடல் : 238

75. பர. பாடல் : 239

76. பர. பாடல் : 242

77. பர. பாடல் : 256

78. சிவஞானபோதம் சூ.2

79. சிவஞானபோதம். சூ.2.

## இயல் ஆறு

1. தருமை குமகா சன்னிதானம்; திருவருட் செய்தி; 1984,பக்:210.211

2. திருமந்திரம்; பா.1828

3. திருக்குறள் ; 18

4. திருமுறை ; 4-1-6

5. திருவாசகம், குழைத்த பத்து, 7

6. தேவாரம்; 5 - 90 - 9

7. சுப்புரெட்டியார்.ந ; சைவசமய விளக்கு; 1984; ப.327

8. முத்தி நிச்சியம் ; பா : 25

9. சிவஞான போதம் ; 5 - 2

10. சிவஞான போதம் சூத்திரம் : 11

11. திருவிளங்கம்.மு ; சிவஞான சித்தியார் சுபக்க உரை; பா: 103

### *சந்தானா சாரியர் துதி*

ஈராண்டில் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
நாராண்ட பல் அடியார்க்கருள் புரிந்த அருள்நந்தி நற்றாள் போற்றி
நீராண்ட கடந்தை நகர் மறைஞான சம்பந்தர் நிழல் தாள் போற்றி
சீராண்ட தில்லை நகர் உமாபதியார் செம்பதுமத் திருத்தாள் போற்றி



## தலைமுறைத் தமிழ்நேசம்

மேலைச்சிவபுரி, கணேசர் செந்தமிழ்க் கல்லூரி என்ற தமிழ்க்கூடத்தைப் பல்கலைக்கூடமாக உயர்த்திட்ட முதல்வர்; தான் படித்திட்ட இத் தாய்க் கல்லூரிக்குத் தன் சொல்லாற்றலாலும், செயல்தீரத்தாலும் புதிய, புதிய துறைகளை உருவாக்கி, புதிய புதியக் கட்டடங்களை நிலைநாட்டித் தொண்டாற்றி வருபவர். இடையூறுகளை ஏற்படுத்தியவர்களே, வியக்கும் வண்ணம் பதினைந்து ஆண்டுகளாகச் செம்மையாகப் பணியாற்றிவரும் அவரின் வெற்றியைக் குறிக்கும் ஒரு பகுதியாக இந்நூல் இப்போது வெளிவருகிறது.

சைவ சித்தாந்த தத்துவக்கடலில் மூழ்கி, ஆய்வு முத்துக்களைச் சேகரித்து தரும் இந்நூல் மயிலம் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரியில் பணியாற்றிய காலக் கட்டத்தின் உழைப்பிற்குச் சான்று. இவ்வாய்வினை எழுதுகையில், இந்நூலாசிரியர் எடுத்துக்கொண்ட முயற்சிகள் ஒன்றிரண்டு அல்ல. அருளாளர் குருகுலம் அடிகரடிகளிடம், முழுமையாகச் சித்தாந்தப் பாடம் கேட்டும், தெய்வநிலையாளர் மேலைமங்கலம் சுவாமி இராமதாசரிடம் இறைக் கல்வி பெற்றும், முனைவர் ச.வே. சுப்பிரமணியம் அவர்களிடம் ஆய்வு அணுகுமுறைக் கல்வி தேர்ந்தும் இவர் வரைந்த இவ்வாய்வு நூல், சித்தாந்தத்தில் ஆய்வு செய்ய முனையும் அனைவருக்கும் சிறந்ததொரு வழிகாட்டி; பலரது தேடுதலுக்கும் உள்ளான இப்பிரதி தற்போது அச்சுருவம் பெறுவது மகிழ்வை அளிக்கிறது.

இவர் சிந்து இலக்கியம், திருமுறைகளில் அகக்கோட்பாடு, சிவஞான முனிவரின் அந்தாதி இலக்கியங்கள் முதலான ஆய்வு நூல்களுக்குச் சொந்தக்காரர்; சிங்கப்பூர், இலங்கை ஆகிய நாடுகளுக்குச் சென்று தமிழமுது ஊட்டிய நல்ல பேச்சாளர்; புதுவயல் சரஸ்வதிசங்கம் என்ற தமிழ்ச்சங்கத்தின் மணிவிழாவையும், மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையின் முத்துவிழாவையும் கண்ட நாயகர்; அனுதினமும் சைவத்திருமுறைகளை முறையாக ஓதியபின் உண்ணும் சைவநெறியாளர்; பிரதோஷம்தோறும் பொன்னமராவதிச் சிவன் கோவிலில் சிவகதைகளைக் கொட்டி முழக்கும் அறநெஞ்சத்தினர்; பொன்னமராவதி அரிமா சங்கத்தின் தன்னிகரற்ற சேவையாளர்; மாறாச் சிரிப்பும், நீங்காக் கருணையும், தவறாத கண்டிப்பும் கொண்ட நல்ல நிர்வாகி. மனைவி, மக்களுடன் மகிழ்ந்து சிறக்கும் இல்லறப் பண்பாளர். தன் எழுத்துக்களை, மனைவி அழகம்மையாரின் கைவண்ணத் தட்டச்சில் கண்டு, அவரையே முதல் விமர்சகராகக் கொண்டவர்.

என் ஆசிரியர், என் வழிகாட்டி, என் முன் மாதிரி, **என் தந்தையார்** என விரிந்து கொண்டே போகும் எங்கள் உறவு - "சரவண முதலியார் - அ.ச. ஞானசம்பந்தம்"; "இலக்குவனார் - மறைமலை" எனத் தலைமுறை தமிழ் நேசமாக - இனிவரும் இலக்கிய வரலாறுகளில் பேசப்பெறும் என நினைக்கையில் உள்ளம் உயர்வு கொள்ளுகின்றது.



அன்புமகன்,
**முனைவர் மு. பழனியப்பன்,**
தமிழ்விரிவுரையாளர், மன்னர் கல்லூரி, புதுக்கோட்டை.